## தி. ஜானகிராமன்



காலச்சுவடு
நவீனத் தமிழ்
கிளாசிக்
நாவல் வரிசை

# அம்மா வந்தாள்

அம்மா வந்தாள்

தி. ஜானகிராமன் (1921 - 1983)

தி. ஜானகிராமன் தஞ்சை மாவட்டம் மன்னார்குடியை அடுத்த தேவங்குடியில் பிறந்தவர். பத்து வருடங்கள் பள்ளி ஆசிரியராகப் பணியாற்றியவர். பின்பு அகில இந்திய வானொலியில் பணியாற்றி ஓய்வுபெற்றார். கர்நாடக இசை அறிவும் வடமொழிப் புலமையும் பெற்றிருந்தவர்.

1943இல் எழுதத் தொடங்கிய தி. ஜானகிராமன் 'மோகமுள்', 'அம்மா வந்தாள்', 'மரப்பசு' உள்ளிட்ட ஒன்பது நாவல்கள், நூற்றுக்கும் மேற்பட்ட சிறுகதைகள், மூன்று நாடகங்கள், பயண நூல்கள் ஆகியவற்றை எழுதியிருக்கிறார். சிட்டியுடன் இணைந்து இவர் எழுதிய 'நடந்தாய் வாழி காவேரி' பயண இலக்கிய வகையில் முக்கியமான நூலாகக் கருதப்படுகிறது.

'மோகமுள்', 'நாலு வேலி நிலம்' ஆகிய படைப்புகள் திரைப்படமாக்கப்பட்டுள்ளன. 'மோகமுள்', 'மரப்பசு', 'அம்மா வந்தாள்' ஆகிய நாவல்களும் பல சிறுகதைகளும் இந்திய, ஐரோப்பிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன.

1979இல் 'சக்தி வைத்தியம்' சிறுகதைத் தொகுப்பிற்கு சாகித்திய அகாதமி விருது வழங்கப்பட்டது.

# 1

சரஸ்வதி பூஜையன்று புத்தகம் படிக்கக் கூடாது என்பார்கள். ஆனால், அன்று ஒரு நாளுமில்லாத திரு நாளாகப் புத்தகத்தின்மேல் வருகிற ஆசை! கீழே கிடக்கிற - பல்பொடி மடிக்கிற - காகிதத்தையாவது எடுத்துப் படிக்க வேண்டும் என்ற மோகம்! அப்படி ஒரு மோகம் அல்லவா பிறந்திருக்கிறது இன்று இந்தக் காவேரிமீது!

அப்படியும் சொல்வதிற்கில்லை என்று திருத்திக் கொண்டான் அப்பு. காணாததைக் கண்டுவிட்டாற் போலக் காவேரியை இப்பொழுது பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறோம். ஆனால் பதினாறு வருடமாக, பொழுது விடிந்தால், பொழுது சாய்ந்தால் காண்கிற காவேரிதான் இது. இந்த ஊருக்கு வந்த நாளிலிருந்து - அரையில் மூன்று முழ ஈரிழைத் துண்டும் தலையில் 'எஸ்'கட்டுப் பின்னலுமாக அப்பாவோடு இங்கு வந்த நாள் முதல் இந்தக் காவேரியைப் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம். அன்று பாடசாலையில் சேர்ப்பதற்காக அவனை அழைத்து வந்தார் அப்பா. ரயிலில் இருவரும் வந்தார்கள். இரவு முழுவதும் பயணம். திருச்சி ஜங்ஷனில் வண்டி மாறி, மறுபடியும் ஒரு நான்கு மணி நேரப் பயணம். சுடச்சுட வெளுப்பு வெயில் ஏறிய நேரத்தில் ஸ்டேஷனில் இறங்கினார்கள். ஒரு மைல் ரயில் பாதையை ஒட்டிய சாலையில் நடந்தார்கள். கிராமத்தில் நுழைந்தார்கள். பாடசாலையில் சேர்ந்தாயிற்று. இரவு கூடவே படுத்திருந்தார் அப்பா -அவனுக்குப் பக்கத்திலேயே. வெகு நேரம்வரை அவன் கையையும் முதுகையும் தடவிக் கொடுத்துக்கொண்டேயிருந்தார். விடியற் காலையில் எழுந்து இந்தக் காவேரிக்கு, இதே துறைக்குத்தான் அழைத்து வந்தார். குயில் கூவிற்று. அக்காக் குருவி கத்திற்று. 'நீ . . . சோவ்' என்றும் ஒரு குருவி கத்திற்று. காவேரி முழுவதும் வெள்ளம் மோதி மோதி, பெரிய பாம்பு மூச்சு விட்டுப் புரள்கிறதுபோல் நகர்ந்தது. யானை நகர்ந்து கொடுப்பது போலிருந்தது. மிரண்டு கரையிலேயே நின்ற குழந்தையைக் கையைப் பிடித்து முழங்கால் தண்ணீரில் நிறுத்திக் குளிப்பாட்டிவிட்டார் அப்பா. பிறகு வேட்டியைத் துவைத்துக் கொடுத்தார். கௌபீனத்தைக் கசக்கிக் கொடுத்தார். தலையில் அம்மா பின்னிக் கட்டிவிட்ட 'எஸ்' கட்டு கலையாமலேயே குளித்துவிட்டு 'உஹூ, உஹூ, உஹூ' என்று உதடு நடுங்க, கையிரண்டும் கூப்ப,

சில்லிப்பில் சிலிர்த்துக்கொண்டே, நிர்வாணமாக, மீன்கொத்தி ஒன்று தண்ணீருக்குள் செங்குத்தாகப் பாய்ந்து முழுகிச் சிலுப்புவதைப் பார்த்துக்கொண்டே நின்றான் அவன். சிலுப்பிவிட்டு, அலகில் எதையோ கவ்விக்கொண்டு, நீர் மட்டத்துக்கு மேலேயே, தவளைக்கல் வீசினாற் போல, தொட்டும் தொடாததுமாகப் பறந்து போயிற்று மீன்கொத்தி.

'சடப்' -

அப்பா ஈர வேட்டியை உதறி 'இந்தா' என்று கட்டிக்கொள்ளக் கொடுத்தார். பிறகு, அவரே இடையைச் சுற்றி அதைக் கட்டிவிட்டார். விபூதியைக் குழைத்து நெற்றியில் இட்டார்; மார்பில் இட்டார்; கையில் இட்டார். பார்த்துக் கொண்டிருக்கும்போதே கண்கட்டுவித்தை போல, வானத்தில் நட்சத்திரம் முளைப்பதுபோல, ஈரம் உலர்ந்து விபூதி பளிச்சிட்ட வெண்மை! . . . எல்லாம் அந்த விபூதியைப் போலவே நினைவில் பட்டையடித்துத் தெரிகிறது . . . அன்று பிற்பகல் சாப்பிட்டு விட்டு அப்பா ஊருக்குக் கிளம்பியதும் ஞாபகம் இருக்கிறது.

"சுந்தரம், நான் வெறுமனே என்னத்தைச் சொல்லப் போறேன்! இனிமே உம் பிள்ளை இது . . ." என்று வாத்தியாரிடம் சொல்லிவிட்டு, "இதப் பாரு . . . சமர்த்தா இருக்கணும். நான் வரட்டுமா?" என்று அப்புவிடமும் விடைபெற்றுக் கொண்டார்.

"நான் உங்களுக்குத் தனியா என்ன சொல்லப்போறேன். ஊர்க் குழந்தைகள்ளாம் உங்க வயத்திலெ பொறந்த பேரன் மாதிரி இங்கே வளர்றது" என்று பவானியம்மாளிடமும் சொல்லிக்கொண்டார் அப்பா.

"இந்த மாதிரி குழந்தைகள்ளாம் வந்து சேரக் கொடுத்து வைக்கணுமே! கதியில்லாம, வயத்துக்கில்லாம, நாதியில்லாம, வேதம் சொல்லிக்கிறேன்னு வந்து சேர்றதுகள். நீங்க நினைச்சா இதை எம்.ஏ., பி.ஏ.,ன்னு படிக்க வைக்கமாட்டேளா! வேதமே பரமாத்மான்னு நிச்சயம் பண்ணி, அனுபவிச்சு, ஆசையா கொண்டு சேர்த்திருக்கேள். கவலைப்படாதீங்கோ. குழந்தை அம்மாகிட்ட இருக்கிற மாதிரி இருக்கும். அதுக்கு மேலே எனக்கும் சொல்லத் தெரியலெ" என்று முக்காட்டை இழுத்துவிட்டு, சோகம் நிலைத்த அந்த முகம் புன்னகை பூக்க, விடைகொடுத்தாள் பவானியம்மாள்.

ரயிலடி வரையில் அப்பாவைக் கொண்டுவிடப் பாடசாலைப் பையன்களோடு அவனும்தான் போனான். "நீங்க கவலைப்படாதீங்கோ,

மாமா - நாங்கள்ளாம் பாத்துக்கறோம்" என்று அப்பாவின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்த ஜகதீசன் சொன்னான். கேசவ பட்டனும் "ஆமாம், ஆமாம்" என்றான். வண்டி ஊதிவிட்டது. ஆறு பையன்களும் குடுமியும் அரையில் ஈரிழைத் துண்டும் சாய வேட்டியுமாக நின்று, அந்த ரயிலின் கடைசி வண்டி சிவப்புப் 'ப'னா மாதிரி ஓடி வளைவில் மறையும்வரையில் பார்த்தது ஞாபகமிருக்கிறது . . . அப்புவுக்கு அழ வேண்டும் போலிருந்தது. அப்போது அழவில்லை. பாடசாலைக்குப் போயும் அழவில்லை. போய், அரிசி உப்புமாவும் கத்திரிக்காய் கொத்சும் சாப்பிடும்போதும் அழவில்லை. மாலையில் சந்தியாவந்தனம் செய்வதற்காகக் காவேரிக்கு மற்ற பையன்களோடு போய், பையன்கள் கரையில் தனித் தனியாகப் பிரிந்து ஆளுக்கு ஒரு காட்டாமணக்குச் செடி மறைவாகப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்த போதுதான் உதட்டைக் கடித்தும் மௌனமாக விசித்தும் விம்மியும் அழுது தீர்த்தான்.

அன்றிலிருந்து பார்க்கிற காவேரிதான் இது. பதினாறு வருடமாகப் பார்க்கிற காவேரி!

அப்பு கணக்குக் கூடப் போட்டுப் பார்த்தான். ஒவ்வொரு வருடமும் ஊருக்குப்போனது என்பது பத்து, இருபது அல்லது முப்பது நாளிருக்கும். அதிகப்படியாக, இந்த ஊரைவிட்டு வெளியே தங்கியது முப்பது நாளுக்கு மேலிராது. அப்படியானால் நாலாயிரம், ஏன் ஐயாயிரம் தடவைக்கு மேலேயே, இந்தக் காவேரியில் குளித்திருப்போம் என்று பெருக்கல் கணக்குப் போட்டுக்கொண்டான்.

பதினா. . . று வருடமா? ஏ. . . அப்பா! நேற்று வந்த மாதிரி இருக்கிறது!

இன்னும் மூன்று நாளோ, நாலு நாளோ! பவானியம்மாள் திரும்பி வந்ததும் புறப்பட வேண்டியதுதான். திரும்பி ஊருக்குப் போய் என்ன செய்யப் போகிறோம்? தர்ப்பைக் கட்டை ஏந்திக்கொண்டு புரோகிதனாகக் குண்டு குண்டு என்று ஓடப் போகிறோமா? இல்லை, எங்காவது பாடசாலையில் வேதம் சொல்லிக் கொடுக்கும் கனபாடியாக உட்காரப் போகிறோமா? அப்பா என்ன நினைத்திருக்கிறார்? மறுபடியும் படி என்று எங்காவது ஸம்ஸ்கிருதக் கல்லூரிக்கு அனுப்பப் போகிறாரா?

அந்தி மயங்கி இருள் கவிகிறது. கடைசியாக ஒரு காக்கைக் கூட்டம் அக்கரையிலுள்ள தோப்பை நோக்கிப் பறக்கிறது. அக்கரை மரங்கள், இக்கரைத் தோப்புகள் எல்லாம் கறுப்புக் கும்பல் கும்பலாக, இருளே

எழுந்து விம்மியதுபோல, நரையில் மைபூசி நிற்கின்றன. 'கூவ்' என்று ஒரு கோட்டான் கூவுகிறது - சிறிது கார்வைகொடுத்து. ஆற்று வெளியையே நிரப்புகிறது அந்தக் கூவல்.

அந்தத் தனிக் கூவலிலும் இருளிலும் ஒரு அச்சம் வீசுகிறதோ என்னவோ, ஊரார்கள் இந்த வேளையில் காவேரிப் பக்கம் எட்டிக்கூடப் பார்ப்பதில்லை - கரையிலிருக்கும் கோவிலுக்கு வருகிற இரண்டு மூன்று பாட்டிகளையும் குருக்களையும் தவிர. ஆனால் அப்புவுக்கு இந்த இருளிலும் கோட்டான் கூவலிலும் சிள் வண்டுகளின் இரைச்சலிலும் இத்தனையையும் ஏப்பம்விட்டு நிற்கும் நெடு மோனத்திலும் சிறிது நேரமாவது முழுகாவிட்டால் என்னவோ போலிருக்கும். சாப்பிடாமல் படுத்துக் கொண்டுவிட்டதுபோலக் கிடைகொள்ளாத நிலையாக ஆகிவிடும்.

இன்று என்னவோ பயமாக இருக்கிறது. இருளைக் கண்டு இல்லை . . . கோட்டான் கூவலைக் கண்டு இல்லை . . . இத்தனையையும் விட்டுவிட்டுப் போகப் போகிறோமே! என்று. ஊரிலும் கோட்டான் இருக்கும்; சிள்வண்டு இருக்கும்; இந்த மயங்கும் இருள்கவியும் மோனம் இருக்கும். ஆனால் இத்தனை பரந்த, ஒரு மைல் அகலக் காவேரி அங்கே ஏது? இத்தனை நிசப்தமும் என்னால்தான் என்று சொல்லுகிற இவ்வளவு அகலக் காவேரி ஏது? இவ்வளவு அகல மோனம் அங்கே ஏது?

அக்கரையின் தொலைவிலுள்ள மர இருள் குப்பல்களைப் பார்த்தான். கிளைகளின் ஊடே தெரிந்த நரை வெள்ளைகூட மறைந்துவிட்டது.

ஊரில் யார் நம்மை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்? ஒரு அண்ணன், இரண்டு தம்பிகள், ஒரு அக்காள், இரண்டு தங்கைகள். அண்ணனும் ஒரு தம்பியும் வேலையிலிருக்கிறார்கள். கடைசித் தம்பி மூன்றாவது வருடம் காலேஜில் படிக்கிறான். சகோதரிகளில் இரண்டுபேருக்குக் கலியாணமாகிவிட்டது. கடைக்குட்டி படித்துக்கொண்டிருக்கிறாள். ஆனால், யாரும் அவனுக்கு ஒரு கடிதம்கூட எழுதியதில்லை. இருந்திருந்து அப்பாதான் இரண்டு மாசத்துக்கு ஒரு கடுதாசி நுணுக்கி நுணுக்கி எழுதியிருப்பார். மற்ற ஆறு குழந்தைகளிடமும் பேசவே நேரம் கிடைக்காதது போலவும் 'உன்னிடமாவது சொல்லுகிறேன்' என்பது போலவும் உடல் நிலை, வெயில், மழை, சங்கராச்சாரியாரிடம் போய்வந்தது, கோவிலில் சந்தனக்காப்பு, மாப்பிள்ளைகள் வந்து போனது - என்று என்னென்னவெல்லாமோ அதில் இருக்கும். அத்தனையும் ஒரு

தபால் அட்டைக்குள் கடுகிக் குறுக்கித் திணித்து. . . எதற்காக இதெல்லாம் எழுதுகிறார் அப்பா! 'நீயும் இந்தக் குடும்பத்தைச் சோர்ந்தவன்' என்று ஞாபகப்படுத்துகிறாரா? 'பதினாறு வருஷம் எங்கேயோ கண்காணா இடத்திற்கு அனுப்பிவிட்டதாக நினைக்காதே; நீயும் எங்களுக்குப் பிள்ளைதான்' என்று என்னை - இல்லை, தன்னையே - சமாதானப்படுத்திக் கொள்கிறாரா! . .

எல்லாக் கடிதங்களும் 'அம்மா உன்னைப் பார்க்க ஆசைப்படுகிறாள். பூர்ணமாக ஆசீர்வாதம் செய்கிறாள்' என்று முடிந்திருக்கும்.

அம்மாவும் அப்பாவும் என்னை எதிர்பார்த்துக் கொண்டு தானிருப்பார்கள். 'அப்பூ!' என்று வாசற்படி ஏறினதும் அம்மா கூப்பிடுகிறபொழுது, அது ஒரு புதுமுகம் - தனி முகமாகத்தானிருக்கும்; அப்புவுக்கென்றே இருந்த ஒரு முகத்தைச் சட்டென்று கழுத்தில் மாட்டிக்கொண்டதுபோல! அண்ணனுக்கும் தம்பிகளுக்கும் அக்கா தங்கைகளுக்கும்கூட இந்த முகம் உண்டோ, என்னவோ! பிரிவுக்காக ஈடுசெய்யும் பூரிப்பாக இருக்கலாம். இருந்தாலும், இந்தப் பூரிப்புத் தனக்கென்று படைக்கப்பட்டதுதான். வருடத்திற்கு ஒருமுறை, அவனைப் பார்க்கிறபோது மட்டும்தான் வரும் என்று என்னவோ சொல்லுகிறது.

அந்தப் பூரிப்பு இப்பொழுது அந்த இருளிலும் மோனத்திலும் அவன்முன் நின்றது. அப்பு சற்றுக் கண்ணை மூடி அகக்கண்ணில் அம்மாவின் முகத்தைப் பார்க்க முயன்றான். தொடர்ந்து நிற்கிறதா என்ன அது? நாம் என்ன தவ முனிவரா, உருவம் அப்படியே நிற்க! பளிச்பளிச்சென்று வந்துவந்து மறைகிறது. அப்புவுக்கு உடம்பெல்லாம் கிளுகிளுத்து ஓடிற்று. அம்மா முகத்தில் இவ்வளவு அமிர்தமா? இவ்வளவு நிறைவா! உடல், உள் எல்லாம் இப்படி நிரப்பும் சக்தி எப்படி வருகிறது அந்த நினைவிற்கு!

"அப்புவா!" என்று குரல் கேட்டது. திரும்பினான் அவன். கோவில் குருக்கள். அவர் குடுகுடுவென்ற குடத்தில் நீரை மொண்டுகொண்டிருந்தார்.

"ஆமாம்" என்றான்.

"இன்னும் ஜபம் முடியலையாக்கும்?" என்று கேட்டுவிட்டு, பதிலை எதிர்பார்க்காமலே, விட்டுப்போன ராகத்தை மீண்டும் முணுமுணுக்கத்

தொடங்கினார் அவர். ஓயாமல் ஒழியாமல் அவர் நெஞ்சில் பாட்டுதான். ராஜரத்தினம் தோடி, கிட்டப்பா சுத்த சாவேரி, கோடையிலே இளைப்பாறி - இன்னும் எத்தனையோ, எதையும் போட்டோ பிடித்தாற்போலப் பாடுவார் அவர். ஒரு வம்பு தும்புக்கும் போகமாட்டார். பாட்டு உண்டு; கோயில் உண்டு; அவர் உண்டு; ஊரில் கொடுக்கிற மான்யம் உண்டு. காதும் சற்று மந்தம்; வம்புதும்பு அவர் காதிலும் விழாது. கேள்வி கேட்பாரே ஒழிய, விடையை அவ்வளவாக எதிர்பார்க்கிற வழக்கமில்லை.

குடத்தை எடுத்துக்கொண்டு நடக்கும்போது, "ரொம்ப இருட்டிப் போயிட்டாப் போலிருக்கே. கிளம்பலையா?" என்று கேட்டுக்கொண்டே போனார் அவர்.

அப்புவுக்குத் திக்கென்றது. இந்து தனியாகவல்லவோ இருக்கிறாள்! 'அஸ்தமிக்கிறதுக்கு முன்னாடியே வந்துடு -எங்கே போனாலும்; சந்தி ஜபம் எல்லாம் ஆத்திலேயே பண்ணிக்கலாம்' என்று ரயில் ஊதுகிறபொழுது பவானியம்மாள் சொன்னதை முதல்நாளே எவ்வளவு லட்சணமாகக் காப்பாற்றி விட்டோம்!

அவசர அவசரமாக எழுந்தான் அவன். கோவில் வாசலிலேயே சற்றுக் கண்மூடி நின்று சிவனிடம் சொல்லிக்கொண்டான். காலை எட்டிப் போட்டு நடந்தான் - படுகைச் சத்தை மாந்தி மாந்தி வானத்தையே அளந்துவிடுவதுபோல் நெடிய நின்ற சவுக்குத் தோப்புகளுக்கிடையே, பாதை இருள் மண்டிக் கிடந்தது. ரயில் பாதையைக் கடந்து சாலையில் விறுவிறுவென்று இறங்கினான். சாலை வெற்றிலை பாக்குக் கடைகளில் விளக்கேற்றி விட்டார்கள். வானிலும் ஏகப்பட்ட விளக்குகளாக முளைத்துக் கிடந்தன. குறுகுறுப்புடனேயே நடந்தான் அப்பு. சாலையோரமாகத் தவளைகள் கொரகொரத்தன. கோவில் மணி 'டைங், டைங்' என்று சளி பிடித்தாற்போன்ற மூக்கடைப்புக் குரலில் அடுக்கிற்று. 'பவானியம்மாளின் கட்டளையை, அவள் போன அன்றே தவறிவிட்டாயே' என்று இந்த வாயில்லாத மணி, விளக்கு, தவளை, வீடுவரும் குடியானவர்களின் பேச்சு - எல்லாமே இடிப்பது போலிருந்தது.

*

இடையிடையே அப்புவுக்கு வியப்பாகவும் இருந்தது. தனியாக இருக்கும்போது, செவியும் மனதும் கூர்ந்துவிடும். சின்ன சலசலப்புக்கூட நெஞ்சில் வந்து மோதும். கேட்காத ஒலியெல்லாம் கேட்பதுபோலிருக்கும்.

ஆனால் இன்றோ, தெருவுக்குள்ளேயே முதல் முதலாக நுழைவது போலிருந்தது அவனுக்கு. பதினாறு வருடமாகப் பழகிவிட்டதெல்லாம் புதிதாக இன்றுதான் கண்ணில் படுவதுபோலிருந்தது. அதனால்தான் இருநூற்றுப் பத்து வீடுகள் கொண்ட அந்தத் தெருவின் மையத்திலிருந்த பாடசாலை வீடும் அதை ஒட்டியிருந்த பவானியம்மாள் வீடும் தூர இருந்து பார்க்கும்போதே, தனிப் புனிதத்துவம் ஒன்றைப் போர்த்தியிருப்பதுபோல் பட்டன - சுவாமிப் படங்களில் முகத்தைச் சுற்றி ஒளிவட்டம் தெரியுமே அதைப் போல. எல்லா வீட்டு வாசலிலும் பசும் சாணம் தெளித்துத்தானிருக்கிறார்கள். திருவை வரவேற்பதுபோல், துப்புரவாகப் பெருக்கிக் கோலம் போட்டிருக்கிறார்கள். திண்ணைப் பறைகள் இரண்டிலும் அந்தி விளக்கு வைத்திருக்கிறார்கள். ஆனாலும், பவானியம்மாளின் வீட்டுக்கும் பாடசாலைக்கும் மட்டும் ஒரு தனித் தூய்மை, ஒரு தனி சாந்நித்யம், வாசலிலேயே விரவியிருப்பதுபோல் அவனுக்குத் தோன்றிற்று. இரண்டு வீட்டு வாசல்களுக்கும் சேர்ந்து ஒரே பந்தல். ஒவ்வொன்றுக்கும் முன்னால் ஒரு பதினைந்து காண்டில் மண்ணெண்ணெய் விளக்கு; இரண்டும், இரவு முழுவதும் எரியும். ஆனால், அப்புவுக்குக் கண்ணில்பட்டது அது இல்லை. வீடு இரண்டும் இரண்டு ரிஷிகளைப்போல் தோன்றின அவனுக்கு. முப்பது வருடங்களாக இரவும் பகலும் வேதங்கள் ஒலிக்கிற வீடுகள் இரண்டு. அவற்றின் தூண்கள், சுவர்கள், படிகள், கற்கள், காரை, கூரை, அலமாரிகள், கிணறு, ஆசனங்கள் எல்லாம் வேத ஒலிகளை ஓயாமல் ஒழியாமல் கேட்டுப் புடமானதுபோல் அவனுக்குத் தோன்றிற்று . . . இன்னும் இரண்டு நாளோ, மூன்று நாளோ - அப்புறம்? எல்லாவற்றையும் விட்டுப் போகப் போகிறோம் என்ற வேதனைதான், அவன் கண், செவி, அனைத்தையும் கூர்மையாக்கிவிட்டாற் போலிருக்கிறது. ரிஷிகளை அணுகுவதுபோலவே பைய வந்தான் அவன்.

பாடசாலை வீட்டுப் பந்தலில் விளக்குத் தொங்கிற்று. ஆனால், வாசல் கதவு சாத்தியிருந்தது. உள்ளே தாழிட்டிருந்தது போலிருந்தது. அதைக் கடந்து பவானியம்மாளின் வீட்டு வாசலுக்குப் போனபோது "சாமி வந்திட்டாங்களே" என்ற குரல் கேட்டது. கண்ணை இடுக்கிப் பார்த்தான் அப்பு. அதற்குள் தாந்தோணி எழுந்து வந்துவிட்டான்.

"சாமி வரட்டும்னு காத்திருக்கேன். சாமி வரட்டும், அப்புறமேலே போலாம்டா கவுண்டான்னிச்சு புள்ளே. தாமதிச்சேன்."

"மாடு கறந்தாச்சா?"

"பொளுது சாயத் தீனிவச்சு, கறந்து போட்டாச்சே. புறக்கடைக் கதவைப் பூட்டினேன். புறப்பட்டேன். அப்பாலெ புள்ளை சொன்னது மேலதான் தங்கினேன் . . . அப்ப நான் வரட்டுங்களா? பேரப்புள்ளைக்குக் காச்சல். வைத்தியர் ஊட்டுக்குப் போகணுமோ என்னமோ, வாரேன்."

"எந்தப் பேரப்புள்ளைக்குக் காய்ச்சல்?"

"மவ வந்திருக்கு சாமி, ஊஞ்சலூர்லேந்து. ஒரு வாரமாச்சு. இன்னிக்கே திரும்பலாம்னு சொல்லிட்டிருந்திச்சு. நேத்து ராவுக்குப் புள்ளைக்குக் காச்சல் கண்டுது. சரிதான் பார்த்துக்கிட்டுப்போ புள்ளேன்னு சொல்லிப்போட்டேன்."

"அட பாவமே, எனக்காகச் சுணங்கினியா? சரி, கிளம்பு" என்றான் அப்பு.

அவன் போன பிறகு, பயந்து பயந்து உள்ளே நடந்தான். இடைகழியில் புகுந்தபொழுது, 'நீஇ நீஇ' என்று ஊஞ்சல் பாடிக்கொண்டிருந்தது. இருமிக்கொண்டே கூடத்தில் நுழைந்தான் அப்பு. சட்டென்று காலைத் தேய்த்து ஊஞ்சலை நிறுத்தி, எழுந்தாள் இந்து.

"தாந்தோணி வீட்டுக்குப் போயாச்சா?"

"இப்பத்தான் போறான். பாவம், எனக்காகக் காத்துண்டிருந்தானாம். பேத்திக்கு ஜுரமாம். போகணும்னான். உடனே போகச் சொன்னேன்."

"நீ வந்தப்புறம் போகலாம்னு நான்தான் சொன்னேன்."

"நான் அப்பவே வந்திருக்கணும் இந்து. என்னமோ நினைச் சுண்டு காவிரிப் படியிலே உட்கார்ந்துண்டே இருந்துட்டேன்."

"நாழியாச்சே, வரக்காணுமே, ரயிலடி காபி கிளப்புக்குத் தான் போயிட்டியோன்னு நினைச்சேன்."

"காபி கிளப்பா! எதுக்காக!"

"தினமும்தான் இந்தப் பழையதும் ஊளை மோரும் புழுத்த நார்த்தங்காயும் இருக்கவே இருக்கு; இன்னிக்காவது ஏதாவது சுடச்சுடச் சாப்பிடலாம்னு நினைச்சுண்டு . . ."

அப்புவுக்குச் சிரிப்பும் வந்தது; ஏன் இப்படிச் சொல்கிறாள் என்று குழப்பமாயும் இருந்தது. நிமிர்ந்து அவளைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. ஆனால், அவள் முகத்தை நேராகப் பார்க்கக் கூச்சப்பட்டுக்கொண்டே "நான் கிளப்பிலே சாப்பிடறது உண்டுதான். ஆனா இங்கே சாப்பிடற மோர் ஊளை மோருன்னோ, நார்த்தங்காய் புழுத்திருக்குன்னோ எனக்குத் தெரியாதே" என்று உத்தரத்திலிருந்து தொங்கும் பவர் விளக்கைப் பார்த்துக்கொண்டே சிரித்த முகத்துடன் சொன்னான்.

"தெரிஞ்சாலும் சொல்லப்படாதே."

"தெரிஞ்சாத்தானே?"

"விளக்கைப் பார்த்துண்டே பொய் சொல்லப்படாது, அப்பு."

அப்புவுக்கு வாய்விட்டே சிரிப்பு வந்துவிட்டது. உடல் குலுங்கிற்று. திரும்பி இந்துவைப் பார்த்தான். "எதுக்கு இப்ப என்னை வம்புக்கு இழுக்கறே? 'ஏண்டா இத்தனை நாழி கழிச்சு வந்தே, தடியா'ன்னு பளிச்சுனு கேட்டுடலாமே" என்று சிரித்தான். அப்பா! என்ன முகம்!! பளீர் என்ற முகம் அது! வெள்ளை முகம்! காதிற்கு முன் சற்று அதிகப்படியாகவே இறங்கின மயிர். கன்னங்கரேலென்று ஒரு நூல் புடவை, வெள்ளை வெளேரென்று ரவிக்கை, முகம் மாதிரியே 'பளீர்' என்று வெள்ளையாகப் பாதம், அதேமாதிரி கை. எல்லார் கைகால்மாதிரி இராத கால், கை. அந்த வெள்ளைக் காலிலும் முன் கையிலும் பிலுபிலுவென்று லேசாகக் கறுப்பு மயிர். இழுத்துக் கட்டினாற்போன்ற தோல். அது அந்த வெள்ளையைச் சற்றுக் கூட்டிக் காண்பிக்கும். தலைமயிரை முறுக்கி, சங்கு வளைகிற மாதிரி வளைத்து, வட்டமாக ஒரு கட்டு. நெற்றியில் மட்டும் குங்குமமும், கையில் வளையலும் இருந்தால் . . . பரசு இரண்டையும் என்றைக்கோ பிடுங்கிக்கொண்டு போய்விட்டானே - தனக்கும் அதிர்ஷ்டம் இல்லாமல், இவளுக்கும் அதிர்ஷ்டம் இல்லாமல்! மாலையில் பிராணன் போகப் போகிறது; மத்தியானம் பவானியம்மாளிடம் சொன்னானாம்: 'அத்தே, பாடசாலை வச்சு நடத்தறேள். ஆசாரம், தர்மம் எல்லாத்தியும் வளக்கறதெல்லாம் சரி. எத்தனையோ புண்யம் பண்ணிண்டு வரேள். எத்தனையோ குடும்பங்கள் உங்க பேரைச் சொல்லிப் பொழச்சிண்டு இருக்கு. ஆனா, எனக்காக மாத்திரம் நீங்க ஒரே ஒரு பாவம் பண்ணணும்; இந்துவை அலங்கோலம் பண்ணாம இருக்கணும்' - என்று வரம் கேட்டுக் கொண்டானாம். அதனால்தான் இந்து பட்டமரம்போல இலைதளிர் எல்லாம் இழக்கவில்லை. எதற்காக இப்படிக் கேட்டுக்கொண்டான்!

எங்கோ வானத்தில் இருந்துகொண்டு இவள் கூந்தலழகையும் கன்னத்தில் கேசம் மற்ற பெண்களைவிடச் சற்றுத் தழைந்தே இறங்கிக் கன்னத்தை இன்னும் வெள்ளையாக்கும் விந்தையையும் கறுப்புப் புடவை மேனி வெண்மையை உரைத்துக்காட்டும் விந்தையையும் பார்க்கலாம் என்று நினைத்தானா! . . .

ஆசாரம் பார்க்காமல் கூந்தலை இப்படி வளரவிட்டாகி விட்டது. உடலுக்கு மட்டும் ஏன் இந்த மடிசார்க்கட்டு? உடலோடு ஒட்டி, விட்டென்று கையையும் காலையும் இடையையும் எடுத்துக்காட்டுகிற இந்தக் கட்டு, ஆசாரக் கட்டா? . . . அப்பு சட்டென்று முகத்தைத் திருப்பிக்கொண்டான். இவ்வளவு தனியாக, இவ்வளவு நெருங்கி இவளைப் பார்த்ததேயில்லை அவன்.

"கேக்கலாம், அத்தனை ஸ்வாதீனமா பேசறதுன்னா நீ இத்தனை நாழி கழிச்சு வந்திருக்கவே மாட்டியே. ஒண்டியா இருக்காளேன்னு நினைக்கிற ஸ்வாதீனம் இருந்தா, இத்தனை நாழி பறக்க விட்டிருக்க மாட்டியே."

அப்பு தலை குனிந்துகொண்டு நின்றான்.

"நான் இத்தனை தாமசமா வந்தது தப்புதான். இன்னிக்கு எல்லாமே எனக்குப் புதுசா இருக்கு. இன்னும் மூணு நாளோ நாலு நாளோ, அப்புறம் எங்கே பார்க்கப் போறோம்னு காவேரியைப் பார்த்துண்டே உட்கார்ந்துட்டேன்."

"காவேரி மாத்திரம்தான் புதுசா இருந்ததாக்கும்?"

"இல்லை இந்து, எதைப் பார்த்தாலுமே அப்படித்தான் இருக்கு. காவேரியிலேயிருந்து தெருவுக்குள்ளே நுழையறபோதும் அப்படித்தான் இருந்தது. இந்த விளக்கு வெளிச்சத்திலே கண்ணை இடுக்கிக்கிண்டே இந்தக் கூடத்தைப் பார்த்துண்டு வந்தேனே, வந்து இப்ப நிக்கறேனே - இது எல்லாமே புதுசாத்தான் இருக்கு."

"ஊருக்குப் போயே விடறதுன்னு தீர்மானம் பண்ணிவிட்டே!"

"போய்த்தானே ஆகணும்! எத்தனை நாள்தான் பள்ளிக்கூடத்துப் பையனாவே இருக்கிறது? வேதம் சமுத்திரம். நூறு ஜென்மா எடுத்தாலும் போராது, படிச்சு முடிக்க. அதுக்காகப் படிச்சிண்டே இருந்தா மத்த

காரியங்கள்ளாம் எப்ப பண்றதுன்னு, ஒரு அளவோடு நிறுத்திக்கச் சொல்லியிருக்கா போலிருக்கு!" என்று குனிந்துகொண்டே சொன்னான் அப்பு.

"மத்த காரியங்கள்னா?"

"என்ன இந்து, இது! மைசூரிலே நான் கொடுத்த பரீட்சையெல்லாம் போறாதுன்னு நீ இப்ப ஆரமிச்சுயிருக்கியா?"

"மைசூர்லே பெரிய பெரிய பண்டிதாள்கிட்டல்லாம் பரீட்சை கொடுத்திருப்பே. சரி, இப்ப படிக்காத பாமரம் கேக்கறேனே; எனக்குத்தான் பதில் சொல்லேன்."

"என்னத்தைக் கேட்டே? என்னத்தைப் பதில் சொல்றது?"

"மத்த காரியங்கள்ளாம் பண்ணனும்னியே, அதெல்லாம் என்னங்கறேன்."

"அப்பா அம்மாவைக் காப்பாத்தறது, சம்பாதிக்கிறது, எல்லாம்தான். தங்கைக்குக் கலியாணம் பண்ணணும்."

"அப்பா, அம்மா, தங்கை, இதுக்கப்புறம் உனக்கு மனுஷாளே கிடையாதுபோலிருக்கு."

"அதைப்பற்றி இப்ப என்ன? சம்பாதிக்க ஆரம்பிச்சு . . ." என்று மேலே ஒன்றும் தோன்றாமல் நிறுத்திவிட்டான் அப்பு.

"அடடே, இன்னும் சந்தியாவந்தனமே பண்ணலியே, பேசிண்டே இருக்கேனே" என்று புறக்கடைப் பக்கம் போகத் திரும்பினான் அவன்.

"காவேரிக்கு எதுக்குப் போனே?"

"படித்துறையிலே உட்கார்ந்துண்டேயிருந்தேன். குருக்கள் ஜலம் மொண்டுகொண்டே, 'இருட்டிப்போயிருக்கே கிளம்பிலியா'ன்னார். பரபரன்னு எழுந்து வந்துட்டேன்" என்று சொல்லிக்கொண்டே புறக்கடை நடைக்கதவின் தாழைத் திறந்தான் அப்பு. நடைச்சுவரில் மாட்டியிருந்த கோழிமுட்டை விளக்கை எடுத்து முற்றத்துக்குச் செல்லும் கதவைத் திறந்தான். விளக்கை வைத்துவிட்டு அவன் கிணற்றில் நீர் மொள்ளும் பொழுதே, பாத்திரம், உத்தரணி, விபூதியுடன் ஓடிவந்தாள் இந்து. "சுருக்க

வந்துவிடுவியா? இலை போடட்டுமா, சாப்பிட?"

"ஜபம் பண்ணினவுடன் சாப்பிடவேண்டியதுதான்."

இந்து உள்ளே போய்விட்டாள்.

உத்தரணியால் பாத்திரத்தைத் தட்டினானே தவிர அப்புவின் மனம் சந்தியாவந்தனத்தில் இல்லை. பல பாடசாலைப் பரிசாரகர்கள், அவர்கள் போனபிறகு வந்து சமையல் வேலையை ஏற்றுக்கொண்ட ஒரு பாட்டி, அவள் சிறுபாடுவிற்று அகப்பட்டுக்கொண்டு வேலையைவிட்டுப் போன பின்பு வந்த பரிசாரகர்கள், அவர்களுடைய அதட்டல்கள், இவையெல்லாவற்றையும் அந்த மங்கல் ஒளியில் பார்த்துக்கொண்டிருந்தான்.

பாதிநாள், காலையில் பாடசாலைப் பையன்களுக்குப் பழையது போடுவதற்கு இந்துவே ஓடிவந்துவிடுவாள். அப்போது அவளுக்குப் பத்து வயது. காலையில் எழுந்து குளித்து வந்தவுடன், ஒருமணி நேரம் பாடம் நடக்கும். இந்து ஈரக் கையைப் பாவாடையில் துடைத்துக்கொண்டே வருவாள். "போரும் மாமா. எல்லாரும் சாப்பிடட்டும். அப்புறம் வந்து சொல்லிக்கட்டும்" என்பாள்.

சுந்தர சாஸ்திரிகள் சிரிப்பார். "அப்படியா? ஒரு வாக்கியம் பாதியிலே நிக்கறது. அதை முடிக்கலாமா? இல்லை, பாதியிலேயே விட்டுடட்டுமா?" என்பார்.

"பெரிய வாக்கியமா இருந்தா, பதம் பதமாச் சொல்லி முடிக்கக் கால்நாழி ஆகுமே, மாமா" என்பாள் இந்து.

"என்ன குழந்தை பண்றது? குழம்பு சாதம் சாப்பிடற போது யாராவது கூப்பிட்டால் நீ எழுந்து போவியோ? ரசம், மோரு, எல்லாம் முடிச்சுட்டுத்தானே போவே!"

"சரி, இப்ப பாடம் எங்கே இருக்கு? குழம்பிலேயா? ரசத்திலேயா?"

"போடு சக்கை! . . அடி பரதேவதை, உன்கிட்ட பேசி ஜெயிக்கமுடியுமோ? இதோ, இதோ ஆச்சு. பாடம் மோரும் சாதத்திலேதான் இருக்கு" என்று, அவசர அவசரமாக மிச்சத்தை முடித்துவிட்டு, "போங்கடாலே! அன்னபூரணி சாதத்தை வச்சுண்டு கூப்பிடறா. சாதத்துக்கப்புறம்தான் வேதம்" என்று விரட்டுவார் அவர்.

பதினாலு பையன்களுக்கும் வாழை ஏடு போட்டுத் தயாராயிருக்கும். குண்டாகக் கனக்கும் ஈயச் சட்டியை இரண்டு கையாலும் தூக்கிக்கொண்டு வந்து வைப்பாள் இந்து. மரவையில் இருந்து காய்ந்த நார்த்தங்காயை ஒவ்வொரு இலையாகப் பரிமாறிவிட்டு, பழையதைப் பரிமாறுவாள். ஜோட்டியை நகர்த்தி நகர்த்தி, அந்தந்த வயிற்றுக்குத் தகுந்தாற்போலக் கணக்குப்பண்ணி அவள் பழையதை வைக்கிற அளவைப் பார்த்துப் பவானியம்மாளுக்கே பூரிப்புத் தாங்காது. அந்த முகத்தோடு பிறந்துவிட்ட சோகக்களைக்கு நடுவில் புன்னகை மப்புப்போட்ட வானில் எப்போதோ வரும் வெயில் போல வெளிச்சம் வீசும். இந்துவின் நெற்றிச் சாந்தையும் 'எஸ்'கட்டுப் பின்னலையும் பச்சை நரம்போடும் வாழைக்குருத்து மேனியையும், சாஸ்திரிகளும் பவானியம்மாளும் மாறிமாறிப் பார்த்துக்கொண்டிருப்பார்கள்.

"இந்தக் குழந்தையைப் பார்த்துண்டு இருக்கக்கூடக் கொடுத்து வைக்கலே பாருங்கோ, என் தம்பி. 'நீயே போனப்பறம் எனக்கென்னடி இங்கே கொட்டிக் கிடக்கு'ன்னு, பெண்டாட்டி பின்னாலேயே அவனும் போய்ச் சேர்ந்தான் பாருங்கோ. என் அதிர்ஷ்டத்துக்குத்தான் என்ன பசி?" என்று, ஒருநாள் ஆற்றமாட்டாமல் வெம்பினாள் பவானியம்மாள்.

பவானியம்மாளின் அதிர்ஷ்டத்திற்கு முதலில் அவ்வளவு பசியில்லை. வசதியான இடத்தில் வாழ்க்கைப்பட்டாள். ஆனால், வறட்டு மரமாக நின்று, முப்பது வயதில் குறைபட்டுப் போனாள். அந்தத் தனிமையை, பாலையைச் சகிக்கமுடியாமல், கணவன்போன மறுமாதமே முப்பத்திரண்டு காணியை எழுதி வைத்து இந்தப் பாடசாலையை ஆரம்பித்தாள். வீட்டையும் ஐந்து காணியையும் தனக்கு வைத்துக்கொண்டு, பக்கத்து வீட்டை வாங்கி, அதைப் பாடசாலையாக்கிவிட்டாள். பாடசாலையையும் அதன் சொத்தையும் நிர்வாகம்பண்ண மதுரைக் கோர்ட்டில் குமாஸ்தா வேலை பார்த்த தம்பியை ராஜினாமா செய்யச் சொல்லி, தன் வீட்டோடு வைத்துக்கொண்டாள். பிறகு, அவனுக்குக் கலியாணம் பண்ணிவைத்தாள். ஐந்து வருடம் கழித்து, இந்துவைப் பெற்று, இரண்டு வருடங்களுக்கெல்லாம் கண்ணை மூடிவிட்டாள் தம்பியின் மனைவி. கொள்ளி போட்டுவந்தவனுக்குப் பதின்மூன்று நாள்வரை சடங்கு செய்யத்தான் திராணி இருந்தது. மறுநாளே படுத்துவிட்டான். ஆறுமாதம் பூமியும் பரமுமாக மாறிமாறி வருவது போலிருந்தது. அப்படி நோய் அவனைப் பந்தாடிற்று. கடைசியில் ஒருவாறு பரத்திற்கே போய்விட்டான் அவன்.

# 2

"என்ன அப்பு! ஜபம் மறந்து போயிட்டுதா? என்னமோ திக்கிச்சாப்போல உட்கார்ந்திருக்கியே!"

அப்பு திரும்பிப்பார்த்தான். பெட்ரூம் விளக்கின் ஒளி அவள் இடக்கன்னத்தில் மஞ்சள் பூசினாற்போல் விழுந்து வலக் கன்னத்தைக் கரியாக்கியிருந்தது. காதில் பூரித்த வைரத்தோடு இடக் கன்னத்தின் மஞ்சளுக்கும், இறங்கித் தழைந்த கருமயிருக்கும்மேல் லேசாக ஒரு நீலத்தைத் தெளித்தது.

"என்ன ஒரே யோசனை?"

"ஒண்ணுமில்லே, இந்து."

அவனுக்கு அக்கா தங்கைகள் உண்டு. ஆனால், யாரோடு நின்று அவன் ஒருநிமிடம் பேசியிருக்கிறான்? யாரைச் சரியாகப் பார்த்திருக்கிறான்? யாரோ இடுப்பில் தூக்கிக்கொண்டு நிற்கிறார்கள் அவனை. விறுவிறுவென்று கீழே இறங்கச் சறுக்குவது போல் மங்கலாக ஒரு நினைவு இருக்கிறது. யாருடைய இடை என்றுகூட நினைவு இல்லை. குழந்தைப் பருவம் என்று நினைக்கையில், இந்த ஒரு காட்சிதான் முதலில் வருகிறது. அந்தக் குழந்தை தான்தானா என்றுகூட அவனுக்கு நிச்சயமாயிராது. எல்லாக் குழந்தைகளும் விருப்பமில்லாவிட்டால் இடுப்பை விட்டுச் சறுக்கி இறங்குகிற லாவகமே தனி! அதைப் பார்த்துப் பார்த்து, தானும் அந்த மாதிரி இருந்திருப்போம் என்ற ஊகம்தான், 'இருந்தோம்' என்ற ஒரு காட்சியை அவனுடைய ஏக்கத்தில் செதுக்கிவிட்டதோ என்னவோ?

அக்காவின் கலியாணத்திற்காகப் போய் இறங்கியபோது, எங்கோ வெளியூரிலிருந்து வந்திருந்த பெரிய சித்தி ஓடிவந்து அவனை அணைத்துக்கொண்டாள். 'அப்பு வாடா!' என்று வியப்பும் பூரிப்பும் வேதனையுமாகப் பார்த்துக்கொண்டே அவனைத் தடவிக்கொடுத்தாள். தடவும்போது அவன் உடல் கூசிக் குன்றி உள்ளே வளைந்தது. "இத்தனை பேருக்கு நடுவில். . . என்ன கொஞ்சல் இது! . . நான் என்ன குழந்தையா?" என்று வாயைவிட்டுச் சொல்லாமல் நெளிந்து நகர்ந்து நின்றான். அவளுடைய கையை எடுத்து ஒதுக்கவும் மனம் இல்லை.

வேறு பெரிதாகக் கூடப்பிறந்தவர்களைப் பற்றி நினைக்க

ஒன்றுமில்லை. அக்காவோ தங்கையோ, தூணில் சாய்ந்து கொண்டு கண்ணைத் துடைத்துக்கொள்கிறாள். அதுவும் யார் என்று ஞாபகம் இல்லை. வளர்ந்துவிட்ட பிறகு பல தடவை இந்த அக்காளையும் தங்கைகளையும் பார்த்ததுண்டு; சிரித்துப் பேசியதுண்டு. அக்காளின் சிரிப்புக்கூட - அகலமான அந்த முகமே ஒரு சிரிப்பாக மாறிவிட்டாற்போல இருக்கும் - அதுகூடக் கேட்கிறது.

ஆனால் இத்தனையும், இத்தனை உடன்பிறப்பும் - சுவர்க் கோழி எங்கோ கத்துகிறதுபோல, கவனித்துக் கேட்டால்தான் காதில் விழுவதுபோல - எங்கோ தூரத்தில் தெரிகிறது; அவ்வளவுதான். அருகே இருப்பது இது ஒன்றுதான் - இந்துதான். பொழுது புலர்ந்தால், ஏறினால், சாய்ந்தால், இருண்டால், சுற்றிச்சுற்றி வருகிறது இது ஒன்றுதான் - இந்த இந்துதான்.

"என்ன அப்பு இது?" என்று சலித்துக்கொள்கிற குரலில், துளிக் கோபத்தையும் கலந்து கொண்டாள் இந்து.

"ஒன்றுமில்லே."

"இன்னிக்கு அத்தை இல்லை. பரிசாரகன் இல்லை. பாடசாலைப் பிள்ளைகளும் இல்லை. பாடசாலைக்கு லீவு விட்டாச்சு. பூட்டியிருக்கு. இந்தண்டை பக்கம் வீடு இல்லை - வாழைத் தோட்டம். என்னதான் நினைச்சுண்டு பறக்கிறே, சொல்லேன். யாரு காதிலே விழப்போறது? நீ சொல்லாட்டா, ஏன் இப்படியிருக்கேன்னு, நானும் இந்தமாதிரி, முன்னாலே இருக்கிறதெல்லாம் ரெண்டு ரெண்டாத் தெரியறாப்போலப் பார்த்துண்டு உட்காரத் தொடங்கிப்பிடுவேன். சாதம் போடக்கூட நீ என்னை, நிஷ்டையிலிருந்து கிளப்பறாப்போலத்தான் கிளப்பியாகணும்."

தண்ணீரை முற்றத்திலே வீசிவிட்டுப் பாத்திரத்தை எடுத்துக்கொண்டே எழுந்து கூடத்திற்கு வந்தான் அப்பு. அவன் போவதற்காக, நிலையில் நின்ற இந்து சற்று ஒதுங்கி ஒட்டி நின்றாள். பிறகு, கூடவே போனாள்.

"சொல்லாட்டாப் போ - இலையைப் போடறேன். சாப்பிட்டு விட்டு, உத்தரத்தைப் பார்த்துண்டிரு."

"கோவிச்சுக்காதே இந்து. உன் மனசைக் கஷ்டப்படுத்த வாண்டாம்னு பேசாம இருந்தேன்."

"நீ என்ன புதுசா கஷ்டப்படுத்தப்போறே?"

"ஞாபகப்படுத்தறதும் கஷ்டப்படுத்தறதுதான்."

"பரவாயில்லை, சொல்லு."

"பரசு நினைவு வந்தது."

ஒரு இரண்டு வினாடி இந்து ஒன்றும் சொல்லவில்லை. பிறகு, "எனக்கு அது வரதேயில்லை" என்றாள்.

அப்பு குழம்பினாற்போல நின்றான்.

"வரணுமா அது? அதுதான் உடம்போட உசிரோட வச்சுத் தைச்சுக்கிடக்கே. தனியா நினைச்சுப் பார்க்கணுமா என்ன ஒரு நிமிஷம்?" என்று சொல்லிக்கொண்டே அடுக்களைக்குள் போய், இலைக்கட்டைப் பிரித்தாள் இந்து. இலையை எடுத்தவள் கூடத்திற்குக் கொண்டு வந்து போடாமல் அங்கேயே போட்டு, பக்கத்தில் அரிக்கேன் விளக்கைக் கொண்டு வைத்ததும் அப்பு மரத்தாற்போல் நின்றான்.

தண்ணீரை இலைமீது தெளித்துத் துடைத்துக்கொண்டு, "வந்து உட்காரு" என்றாள் அவள். மறு பேச்சுப் பேசாமல், பதினாறு வருடமாகப் புகாத அந்த அடுக்களைக்குள் நுழைந்தான் அப்பு. பாடசாலைப் பையன்கள் தினமும் பவானியம்மாளைக் கீழேவிழுந்து வணங்குவது வழக்கம். பாடசாலைக்கும் பவானியம்மாள் வீட்டுக்கும் இடைக்கட்டு நிலைவழியாக நூறு தடவை வருவதும் போவதும் உண்டு. ஆனால் கூடத்தைக் கடந்து அடுக்களைக்குள் போய் அவன் யாரையும் பார்த்ததில்லை. தானும் போனதில்லை. எட்டிக்கூடப் பார்த்ததில்லை. எல்லாக் கிராமத்து வீடுகளின் சமையலறையைப் போலத்தான் இதுவும் இருக்கிறது. இங்கேயே இருபது பேர் உட்கார்ந்து சாப்பிடலாம். மேலண்டைப் பாதியில் ஒரு முற்றம். அதற்கு மேலே ஓடு திறந்து விட்டிருந்தது. பக்கத்திலே நாலு அடுப்பு, இரண்டு அலமாரிகள், ஒரு பத்தாயம். முற்றத்துக்கு மறுபக்கத்தில் ஒரு சின்ன பூஜை அலமாரி. அது பவானியம்மாளுக்காகவே தனியாக அமைக்கப்பட்டது போலிருக்கிறது. கூடத்தில் ஊஞ்சல் பலகைக்குப் பக்கத்தில் உள்ள பெரிய பலகைக்கு முன்பக்கத்தில் உள்ள பெரிய பூஜை அலமாரியைப் போலவே இங்கும் சின்ன அளவில் இரண்டு படங்கள். சின்ன வெண்கல அகல் ஒன்று எரிந்துகொண்டிருந்தது.

இலைமுன், முள்மீது இருக்கிறாற்போல் உட்கார்ந்து கொண்டே சுற்றிலும் பார்த்தான் அப்பு.

"அதனால்தான் எனக்கு அந்த நினைவே வரதில்லை" என்று சொல்லிக்கொண்டே பரிமாற ஆரம்பித்தாள் இந்து. அடுப்புக்கும் இலைக்கும் அவள் போய் வரும்போது, அந்த வெள்ளைப் பாதங்கள், மார்பை விம்மிக்கொண்டு நீர்த் தொட்டியைச் சுற்றிச் சுற்றி வரும் வெள்ளைப் புறாபோல் இருந்தன. பாதத்திற்குமேல் குதிரை முகம், பின் சதையெல்லாம் பிலுபிலுவென்று மின்னுகின்ற மயிர். பெண்களுக்குப் பெரும்பாலும் இப்படி இருப்பதில்லை; அதுதான் பரசு போய்விட்டானோ?

இந்தப் பாதத்தை, கட்டை விரலைப் பிடித்து, பரசு கலியாணத்தன்று அம்மி மிதிக்க ஏற்றினான். அந்தக் கலியாணம் இந்தக் கூடத்தில்தான் நடந்தது. இந்துவுக்குப் பன்னிரண்டு வயது. பவானியம்மாள் வாங்கிக் கொடுத்த சேலம் குண்டஞ்சை உடுத்திக்கொண்டு பாடசாலைப் பையன்கள் உக்கிராண உள்ளுக்கும் வாசலுக்கும் கொல்லைக்குமாகச் சுழன்றுகொண்டிருந்தார்கள். நடுநடுவில் கலியாணத்தையும் நின்று வேடிக்கை பார்ப்பார்கள். வைதீகர்கள் சொல்லும் மந்திரங்களில் தங்களுக்குப் பாடமானது ஏதாவது இருந்தால் கீச்சுக் குரலில் சேர்ந்து சொல்லுவார்கள். அப்புவும் தூணுக்கருகில் நின்று கொண்டு பார்த்தான். பரசு இந்துவின் கால் கட்டைவிரலைச் சிரமப்பட்டுத் தூக்கி வைத்தாற்போலிருந்தது. பரசுவுக்கு மெல்லிய உடல், மா நிறம். இந்துவின் முகச்சாயல்கூடக் கொஞ்சம் சிறிது வீசும். இந்துவுக்கு ஒன்றுவிட்ட மாமா அவன். இந்துவின் அம்மாவுக்குச் சிறிய தாயார் புதல்வன். குடும்பச் சாயல் இரண்டு பேர் முகத்திலும் தெரிந்தது. ஆனால் ஏன்தான் இப்படி மெலிந்திருந்தானோ! இந்துவின் தாயார் போனாலும் அந்தக் குடும்பத்தின் பற்றை விட்டுவிட மனமில்லையோ என்னவோ பவானியம்மாளுக்கு! போக்குவரத்தே இன்றி - கடுதாசிகூட இல்லாமல் - பிரிந்து போய்விட்ட உறவை இழுத்து வந்தாள். பள்ளிக்கூடப் படிப்பை முடித்துவிட்டுக் கல்லூரியில் சேர்ந்திருந்த பரசுவை நிச்சயம் செய்துவிட்டாள். இந்துவைப் போலவே பரசுவும் உயரம்தான். அவளைவிட உயரம். குடும்பத்தின் உயரவாகு, அவன் உடலிலும் நீண்டிருந்தது. ஆனால் அவள் கட்டை விரலை அவன் அம்மிமீது எடுத்துவைக்கக் குனிந்தபோது, அவன் விலா எலும்பு முட்டிக்கொண்டு விம்மியதைப் பார்த்தால், அப்புவுக்கு என்னவோபோல் இருந்தது. அன்று மாலை நலங்கு நடந்ததே - அப்பொழுது இந்துவின் காலில் மஞ்சள் பூசினான் அவன். அவளும்

அவனுக்குப் பூசினாள். ஜோடி நன்றாக இருந்தது. ஆனால் அவள் கை விரலிடுக்கில் சிக்கின வெற்றிலைச் சுருளை அவனால் பிடுங்கவே முடியவில்லை. அவள் பிடித்து அமுக்கிக்கொண்டிருந்த தேங்காயையும் பிடுங்க முடியவில்லை. நகத்தை வைத்து அழுத்திக் கூடப் பார்த்தான் பரசு. இந்துவின் வெள்ளைக்கையில் கொசு கடித்துச் சொறிந்துவிட்டாற்போல லேசாக ரத்தம் தெரிகிற மாதிரி இருந்தது; முடியவில்லை. அப்பு இடுப்பில் இரண்டு கைகளையும் வைத்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தானே, அந்தச் சிரிப்பமளிக்கு நடுவில் - அவனுக்கு ஆத்திரமாக வந்தது பரசுவிடம். 'ஒரே லாவாக நான் லாவுகிறேன் பாரு' என்று அவனை நகர்த்திவிட்டுப் பிடுங்கவேண்டும்போலத் துடியாய்த் துடித்தது அவனுக்கு.

பரசுவின்மீதா, இந்துவின்மீதா, யார் மீது ஆத்திரம் என்று புரியவில்லை. பரசு சிரித்துக்கொண்டே விட்டுவிட்டான். அன்று மாப்பிள்ளைத் தோழனோடும் பரசுவோடும் அப்பு ஆற்றங்கரைக்குப் போனான். "வேடிக்கைன்னு விடறதாடா பரசு. நீ இதிலெல்லாம் மிஞ்சாட்டா, சோப்ளாங்கின்னு நினைச்சுடும்டா, பொண்ணு" என்று தோழன் போதனை செய்ததை அப்பு கேட்டுக்கொண்டேதான் போனான். மறுநாள் நலங்கிலும் பலிக்கவில்லை. கடைசியில் நாலாம் நாளன்று இந்து சிரித்துக்கொண்டே விட்டுக்கொடுத்தாள். அதுகூட, அப்பு, மத்தியானம் உக்கிராண அறையில் அவள் உட்கார்ந்திருந்தபோது, மாப்பிள்ளைத் தோழன் சொன்னதை அவளிடம் சொன்னதால்தான் என்றுகூடத் தோன்றிற்று. அப்புவுக்கு அன்று இந்துமீது அசாத்தியக் கோபம். இப்பொழுது நினைக்கிற போது, முதல்நாள் வந்த அந்தக் கோபம் பரசு மீதுதான் என்று தோன்றுகிறது.

ருசித்துத்தான் சாப்பிட்டான் அப்பு. நேற்றோடு பரிசாரகன் சமைத்துப் போட்ட சாப்பாடு முடிந்துவிட்டது. அவன் சமையலே தனி. சமைக்கத்தான் தெரியுமோ? இல்லை, பாடசாலைப் பையன்களுக்கு என்றுதான் இப்படிச் சமைத்தானோ - குழம்பு, ரசம், எல்லாவற்றிலும் ஒரு புளிவேகம் அடிக்கும். பரிசாரகனின் கையே புளியால் செய்ததோ என்னவோ? அவன் தொட்டதெல்லாம் புளிப்பது போலிருக்கும். மிளகாய், மஞ்சள் பொடி, உப்பு, கொத்தமல்லி - இத்தனையும் உலகில் மண்டிக்கிடக்கிற பொழுது எப்படித்தான் இந்தப் புளி வாடையை அவன் கொண்டு வருகிறானோ! பாடசாலையைத் தவிர வேறு எங்குச் சாப்பிட்டாலும் மணமாகத்தானிருக்கும் பிள்ளைகளுக்கு. அதுவும் இப்பொழுது இந்துவின் சமையல். முகத்தைச் சுளிக்க வைக்கிற

அரைவேக்காட்டுப் புளி வேகம் எங்கே? இது எங்கே? வேறு உலகிற்குள் வந்து விட்டாற்போல் இருக்கிறது! தாயார்கள், தகப்பனார்கள், சகோதரர்கள் எல்லோரும் நிறைந்த ஒரு உலகிற்குள் வந்துவிட்டாற்போலிருக்கிறது.

பரசுவுக்கு இந்தச் சமையலைச் சாப்பிட்டுக்கூடவா உடம்பு ஏறவில்லை? தேறவில்லை? இந்தக் காலை அம்மி மேல் ஏற்றி ஐந்து வருடம் கழித்து, ஈரோட்டில் தன் வீட்டுக்குள் ஏற்றிக்கொண்டான். மூன்று வருடம் முழுசாக அதைப் பார்த்தானோ என்னவோ. கடைசி வருடம் முழுவதும் பெருந் துறையில் உருகி மறைந்தே போய்விட்டான். எத்தனை நாள் இப்படிச் சாப்பிடும்போது, நடந்து நடந்து இலைமுன் வந்து நிற்பதையும் போவதையும் பார்த்திருப்பான்!

"சாம்பாரில் வெண்டைக்காய் சரியாக வெந்திருக்கிறதோ?" என்று சட்டென்று வந்த குரலைக்கேட்டு விழித்து, 'ம்! . . பேஷாய் வெந்திருக்கிறதே' என்றான் அப்பு.

"வேதம் படிச்ச பலன் கைமேலே வந்தாச்சு!" என்றாள் இந்து.

"என்ன?"

"பொட்டை நெட்டுருப் போடறதுதானே வேதம். வருஷக் கணக்கிலே ஓயாமே நெட்டுருப் போடறதிலேயே புத்தியைச் செலவழிச்சா மூளை மழுங்கிப் போயிடும்பார் எங்க அம்மாத் தாத்தா. உருப் போடறதைத் தவிர வேறே ஒண்ணும் வராது என்பார் அவர். சரியாய்ப் போச்சு. நான் போட்டது சாம்பாரும் இல்லை, வெண்டைக்காய் தானும் இல்லே. இது கத்தரிக்காய் போட்ட வெறும் குழம்பு" என்றாள் இந்து.

அப்பு சிரித்தான். "என்னமோ யோசிச்சிண்டிருந்தேன். கவனிக்கல்லே. சாப்பாட்டு ராமனா இருந்தா சட்டுன்னு சொல்லியிருப்பேன்."

"அப்படின்னா அவர் சாப்பாட்டு ராமனா?"

"எவர்?"

"அவர்தான். ஒரு அரைக்கால் கல் உப்புத் தூக்கலாயிருந்தா, ஒரு பத்து வினாடி முன்னாலே குழம்பை இறக்கியிருந்தா, பாகற்காயை ஒரு பெரட்டல் அதிகமாகப் பெரட்டியிருந்தா, உடனே சொல்லிடுவார் அவர்.

அவாள்ளாம் சாப்பாட்டு ராமன் என்கிறே நீ."

"நான் பொதுவாச் சொன்னேன் இந்து, நீ கோவிச்சுக்காதே."

"நான் கோவிச்சுக்கலே. எப்படிப் பேசறேன்னுகூடத் தெரியாம, கோவிச்சுக்கறேன்னு சொல்றியே."

எப்படிப் பேசினாலும் திருப்பிக்கொள்கிறாளே! என்று அப்பு சற்றுத் தவித்தான். ஓங்கிப் பேசவும் முடியவில்லை; பழக்கமுமில்லை. பவானியம்மாளின் மருமாள் என்ற முறையில், பவானியம்மாளுக்குக் கொடுப்பதில் முக்கால் பங்கு மரியாதையை இவளுக்குக் கொடுத்துவந்தார்கள், பாடசாலைப் பையன்கள். ஆசிரியர்கூட, அவளுக்குச் செய்கிற நமஸ்காரத்தைச் செய்வதில்லையே தவிர, மற்றபடி அதே அடக்கம், தணிந்த குரல் என்ற மரியாதைகளெல்லாம் இவளுக்கும் உண்டு.

"கோவிச்சுக்கலே நான். அததைச் செய்யறபோது அததிலே கவனமா இருக்கணும்னு சொல்றதுக்காகச் சொன்னேன். நீ என்னமோ தேவதத்தன் மாதிரி பேசக் கிளம்பிவிட்டே?"

"தேவதத்தன் மாதிரியா? யார் அது?"

"நீ வரத்துக்கு முன்னாலெ, இங்கே பாடசாலையிலே ஒரு பையன் வந்து படிச்சுண்டிருந்தானாம். அவன் படிப்பைத் தவிர ஒன்றுமே கவனிக்க மாட்டானாம். தினமும் அவனுக்கு நெய்க்குப்பதிலா விளக்கெண்ணெய் குடுத்திண்டு வந்தாளாம். அவன் நெய்னு நினைச்சே பேசாமல் சாப்பிட்டுப் போயிடுவானாம். நாலஞ்சு வருஷம் கழிச்சு ஒரு நாள் முகத்தை லேசாகச் சுளுக்கினானாம். 'என்ன விளக்கெண்ணெய் மாதிரி வாசனை அடிக்கிறது' என்றானாம். உடனே பரிசாரகன் வாத்தியார்கிட்டப் போய் இதைச் சொன்னான். உடனே அவர் அவனைக் கூப்பிட்டு, 'தேவதத்தா! வித்தியாப்பியாசம் முடிந்துபோச்சு. இனிமேல் உனக்குப் படிப்பு வராது. நீ போயிட்டு வா'ன்னு அனுப்பிச்சுட்டாராம்."

"இவன் எத்தனையாவது தேவதத்தன்?" என்று குனிந்து கொண்டே புன்னகையுடன் கேட்டான் அப்பு.

"அப்படின்னா?"

"ஆருணி, உபமன்யு காலத்திலிருந்து இந்த மாதிரி ஒரு தேவதத்தன்

ஒவ்வொரு பாடசாலையிலும் இருந்து படிச்சதாகச் சொல்கிற வழக்கம். அதுதான் எத்தனையாவது தேவதத்தன்னு கேட்டேன்."

"அப்பாடா" என்று பெருமூச்செறிந்தாற்போல் சிரித்தாள் இந்து.

"என்ன இந்து?"

"நன்னாப் பேசினியேன்னுதான். வேதம் படிச்சுக் கட்டையாய்ப் போயிட்டியோன்னு கவலையாயிருந்தது. பரவாயில்லே."

"வேதம் படிச்சால் மூளை மழுங்கிப்போயிடும்னு யார் சொன்னா, உனக்கு?"

"எங்க மச்சினன் ஒருத்தர் இருக்கார், கோயம்புத்தூரிலே. ஒண்ணுவிட்ட மச்சினன். அவர் மகா மேதாவியாம். ஒரு தடவை சொல்றதுக்கு முன்னாலெ பிடிச்சுண்டுடுவாராம். நெருப்புமாதிரி, மின்னல்மாதிரி இருப்பாராம். படிக்கவைக்க முடியாம பாடசாலையிலே கொண்டுவிட்டாளாம். அஞ்சாறு வருஷம். அப்புறம் ஒரு தமிழ்க் காலேஜிலே கொண்டு சேர்த்தார்களாம். அஞ்சு வருஷப் படிப்பைப் படிச்சு முடிக்கப் பன்னண்டு வருஷம் ஆச்சாம் அவருக்கு. பாஸ் பண்ணினதும் அடிமட்டம். இப்ப இருபதுரூபா சம்பளத்துக்கு எங்கயோ எலிமென்ட்ரி ஸ்கூல்லெ வாத்தியாரா இருக்காராம். வேதம் படிச்சுப் புத்தியை அப்படித் தீட்டிண்டு வந்ததனாலெதான் அவர் அப்படி ஆயிட்டாராம். அவர்தான் சொல்லுவார்."

மோர் சாதம் முடிந்துவிட்டது. அப்பு எழுந்தான்.

# 3

கை கழுவிவிட்டு வரும்போதே, "அப்பு!" என்ற குரல் வந்தது. "ம்?" என்று கேட்டுக்கொண்டே அடுக்களை நிலையண்டை நின்றான் அவன்.

"உட்கார்ந்துக்கோயேன்."

அப்பு சற்றுத் தயங்கினான். "அப்படித்தான் உட்கார்ந்துக்கோ. இல்லேன்னா, இப்படி வந்து உட்காரு" என்று உள்ளே களஞ்சியத்தின் முன் ஒரு மணையை எடுத்துப் போட்டாள். "இப்படியே இருக்கேன்" என்று அடுக்களை நிலைமீது உட்கார்ந்தான் அப்பு.

"நிலைப்படியிலே உட்கார்றதா? இங்கே வரணும்; இல்லாட்டா, அந்தண்டை உட்காரணும்."

"இது வாசற்படியில்லையே."

"சரி, உன் இஷ்டம்" என்று ஒரு அலுமினியப் பேலாவில் எதையோ போட்டுக்கொண்டு வந்து, அப்புவுக்கு எதிரிலே ஒரு ஆள் தூரத்தில் உட்கார்ந்து, தின்னத் தொடங்கினாள் இந்து.

"இதுதான் சாப்பாடா உனக்கு?"

"பெரிசா முழுங்கியாச்சு. இது போருமே. அத்தை, 'நீ இஷ்டமானதைச் சாப்பிடுடீ. பலகாரமெல்லாம் வாண்டாம்'னு தான் விட்டிருக்கா. எனக்கு என்னமோ இன்னிக்கி சாப்பிடப் பிடிக்கலே. காலமே பிடிச்சு வீடு வெறிச்சுன்னு கிடக்கு. மூணு நாளோ நாலு நாளோ, அப்புறம் நீயும் போயிடப்போறே . . ."

"நீயும்தான் வாயேன். அங்கே வந்து இரேன் ஊர்லே. அப்பா, அம்மா, தங்கை, தம்பி எல்லாம் இருக்கா. ஒரு அண்ணா, அவன் சம்சாரம். வீடு ஜேஜேன்னு இருக்கும். ஒரு ரண்டு மாசம் அங்கேதான் வந்து இரேன்."

"பதினாறு வருஷம் பழகிவிட்டு நீ மண்ணை, உதறிண்டு கிளம்பறே. இத்தனை நாளாப் பழகினவாளைக் கத்தரிச்சிண்டு போக முடியறது உனக்கு. இங்கேயே இருக்கேன்னு சொல்றத்துக்கு வாய் வரலே. என்னை வந்து இழுக்கிறியே."

"வேறே என்ன செய்யறது?"

"ஊருக்குப் போய் என்ன செய்யப் போறே?"

"தெரியலே?"

"காசி யாத்திரை போகப்போறியோன்னு கேட்டேன். படிப்பை முடிச்சவுடன், அந்தக் காலத்திலே காசி யாத்திரை போவாளாம். நீ போறபோது, யாரோ பெண்ணைப் பெத்து வச்சிண்டிருக்கிறவர் வந்து குறுக்கே நின்று, 'காசிக்குப் போக வேண்டாம். எனக்கு ஒரு பொண்ணு இருக்கு. நகை நட்டோட அவளை உனக்குக் கலியாணம் பண்ணிக் கொடுத்துடறேன். குடும்பம் நடத்திண்டு இரு'ன்னு தடுத்து நிறுத்துவாளாமே. அந்த மாதிரி கிளம்பறதாக உத்தேசமோன்னு

கேட்டேன்."

"யாத்திரை கிளம்பலாம், யாரும் நிறுத்தலேன்னா! வேதம் படிச்ச மண்டூகத்தை யார் நிறுத்தப்போறா?"

"அந்தக் கவலைப்படாதே. ஒரு மண்டூகத்துக்குன்னு இன்னொரு மண்டூகம் பிறந்துதான் இருக்கும். அப்பா மண்டூகம் எங்கேயிருந்தோ வந்து, அதை வழி மறிச்சுடும்!"

"மறிச்சாலும் கையை ஏந்தி வாங்கிக்கொள்ள முடியாது. அந்த மண்டூகத்தைச் சாப்பாடு போட்டுச் சம்ரக்ஷிக்கிற வக்கு வாண்டாமா?"

"அப்படி உலகம் இருந்திருந்தா அத்தை இப்படி ஒரு பாடசாலை ஆரம்பிச்சிருக்கவே மாட்டா."

"அது என்னமோ. அத்தைக்கு வேதம்னா உசிரு. அதுதான் தெய்வம். அதுக்காகன்னா ஆரமிச்சா."

பேச்சு எங்கெங்கோ போய்க்கொண்டிருந்தது. இந்து தின்று முடித்தாள். எச்சில் இட்டு, பாத்திரங்களைச் சுத்தம் செய்து, அடுப்பை மெழுகிக் கோலம் போடும்போதெல்லாம்கூட அவள் வாய் ஓயவில்லை.

நிலைப்படியிலிருந்து எழுந்த அப்பு, போவதா வேண்டாமா என்று புரியாமல் கூடத்திலேயே தயங்கிக்கொண்டு நின்றான். இந்துவின் உத்தரவின்றி எப்படிப் போவது?

வேலை செய்த சிரமம் இந்துவின் நெற்றியிலும் மூக்கினடியிலும் முத்து முத்தாகப் பூத்திருந்தது. தலைப்பால் துடைத்துக்கொண்டே ஊஞ்சலில் உட்கார்ந்து லேசாக ஆடத் தொடங்கினாள். உட்காரும்படி அப்புவுக்குத் தூணோரமாக இருந்த பழைய விந்தும் பெஞ்சைக் காட்டினாள். அப்பு உட்கார்ந்தான்.

"நாளைக்கு இத்தனை நாழி வாத்தியார் பேத்திக்கு மாப்பிள்ளை அழைச்சு, நிச்சயதார்த்தம் நடந்து, சாப்பாட்டுக்கு இலை போட்டிருப்பா" என்றாள்.

"ஆமாம்."

"அத்தைக்குக்கூட நான் வரணும்னுதான் எண்ணம். வாயேண்டீன்னு

இழுத்தா. 'நீ போறது போறாதா? ரண்டு பேர் வேறேயா'ன்னு நான்தான் தங்கிவிட்டேன். வாத்தியார் கூடக் கூப்பிட்டார் எங்கப்பா மாதிரி. 'இன்னொரு தடவை பார்த்துக்கலாம் மாமா'ன்னு சொன்னேன். துணைக்கு யாரை வச்சுட்டுப் போறதுன்னு யோசிச்சா ரெண்டுபேரும். நான் ஒண்ணுமே சொல்லலே. அதனாலே, உன்னை வச்சா."

பதில் பேசாமல் கேட்டுக்கொண்டிருந்தான் அப்பு.

"தூங்கணும் போலிருக்கா, அப்பு?"

"இல்லையே."

"ம், போட்டுக்கூடக் கேட்க மாட்டேங்கிறியே."

"இப்படிக் கேக்கப்படாதா?"

"சந்தேகம் வந்துடறது, உனக்கு மனசிலே ஏதாவது பாசம் பந்தம் இருக்கான்னு, நீ பொம்மை மாதிரி இருக்கறதைப் பாத்தா. அப்பு இருக்கப்போறான்னு சொன்னவுடனே எனக்குத் தலைகால் புரியலெ. 'ஜிர்ர்'ன்னுது. ரொம்பக் கஷ்டப்பட்டுக் காமிக்காம அடக்கிண்டேன் - காதிலேயே வாங்கிக்காதது போல. தூக்கம்கூட வரலெ, நேத்திக்கி. நீயானா கல்லுமாதிரி உட்கார்ந்திருக்கே."

"அத்தையும் நீயும்தான் எனக்கு அப்பா, அம்மா, அக்கா, தங்கை, எல்லாம்னு நினைச்சிண்டிருக்கேன் இந்து."

"நான் அப்படி நினைக்கல்லே. விவரம் தெரியாத வயசிலெ, என்னைக்கேட்காம, என்னைக் கொண்டு தள்ளினா அத்தை. தாலியைக் கட்டிண்டு போய் இருந்தேன். அங்கே போன அப்புறம் அங்கேயேதான் இருக்கணும்னு சொன்னா எல்லாரும். வாயை மூடிண்டு முரண்டு பண்ணினேன். அப்படியிருக்கிறவளை எப்படிக் கட்டிவைக்கமுடியும்? ஒரு நிமிஷம் இருக்க முடியாம கடைசியிலே இங்கே வந்தேன். அத்தைக்காக வரலெ. ரண்டு வருஷம் வாழ்ந்த ஞாபகம் காலைச் சுத்திச் சுத்திண்டு நிக்குமே அங்கேயே இருந்தால் - அது வாண்டாம்னு வந்திருப்பாளோன்னு சில பேர் நினைப்பா. அதுவும் இல்லை. நான் உன்னைப் பாத்துண்டிருக்கலாம்னுதான் வந்தேன்."

அப்புவுக்கு இதைக் கேட்டதும் முகம், கையெல்லாம் முள் படர்ந்தது. தலையுச்சியிலும் வயிற்றிலும் உள்ளங் காலிலும் சில்லிட்டது.

நாம் என்ன செய்தோம், இப்படி ஒரு பிராணி பிரியத்தைக் கொட்டுவதற்கு! நாம் யார், இதற்கு ஆளாக? என்று சிறிதுநேரம் கலப்பில்லாத, முழு ஆனந்தத்தை உருக்கி ஊற்றினதுபோல் மூச்சு முட்டித் திணறினான். முதுகு லேசாகச் சொடுக்கி உதறிற்று. அன்று பெரிய சித்தி அத்தனை பேருக்கு நடுவில் அவனைக் குழந்தையாக்கித் தடவிக்கொடுத்தாளே - அதேதான் இப்போது பெரிய வடிவம் எடுத்து வந்துவிட்டதோ? அவனால் இதைத் தாங்க முடியாது போலிருந்தது. 'ஈசுவரன் ஆனந்த மயம்' என்கிறார்களே - அதை எப்படித் தாங்க முடியும்? ஆனந்தமயம் என்று பிறகு சொல்ல அவர்களுக்கு உயிரும் உடம்பும் எப்படி மிஞ்சியிருந்தன!

பாவாடையும் 'எஸ்'கட்டுப் பின்னலுமாக உட்கார்ந்து பத்து வயதில் இந்து சாதம் போடுவது போலிருந்தது, அப்புவுக்கு.

"அப்பு, நீ இங்கேயே இருந்துவிடேன்" என்றாள் இந்து.

"எத்தனை நாள்தான் படிக்க முடியும், இந்து?"

"படிக்கவாண்டாம். சொல்லிக்கொடேன்."

"வாத்தியார் இருக்காரே, சமுத்திரம் மாதிரி."

"அவருக்கு வயது அறுபத்தஞ்சு. எத்தனை நாளைக்குத் தான் தொண்டைத் தண்ணியைப் பறிகொடுத்திண்டு இருப்பார்? அடிக்கடி தள்ளாமை வந்துவிடறதே அவருக்கு."

"சொல்லிக் கொடுக்கிறபோதோ, சர்ச்சை பண்ணறபோதோ வரதில்லை இந்து, அவருக்கு. அவருக்கு அப்ப புதுப் பலம் ஒண்ணு வந்துவிடறது. பையன்மாதிரி ஆகிவிடுகிறார். இன்னும் இருபது வருஷத்துக்கு வண்டி ஓடும்."

"உனக்கு இஷ்டமில்லேன்னு சொல்லு, இருக்க."

"அப்படிச் சொல்லவில்லை நான். ஊரில் அப்பா என்ன சொல்வாரோ. அவர் மனசையும் தெரிஞ்சுக்கணும்."

"அப்பா, அப்பாங்கிறியே. உனக்குச் சொந்தமா ஒரு முடிவுக்கு வர வயசாகலியா? என்ன வயசாறது உனக்கு?"

"அடுத்த மாசம் இருபத்து நாலு முடியறது."

"நீ என்னைவிட நாலு மாசம் பெரியவன். மத்தவா மாதிரி இல்லே. வேதம் முழுக்க அக்கக்கா பிரிச்சு அத்யயனம் பண்ணிருக்கே. அத்தனைக்கும் அர்த்தம் தெரிஞ்சுண்டிருக்கே. உபயோகமும் தெரிஞ்சுண்டிருக்கே. அத்தாட்சியாக நாலு தடவை மைசூரிலே போய்ப் பரீட்சை கொடுத்துச் சால்வைகள், பணம், விருது, எல்லாம் வாங்கிண்டு வந்தாச்சு! ஆறடி வளர்ந்திருக்கே. எல்லாம் இங்கே நடந்ததுதானே. அப்பா இங்கே வந்து பாடசாலையிலே சேர்த்தார். அப்புறம் அதிகமாக உன்னைவந்து பார்க்கக்கூட இல்லை. என் கலியாணத்துக்கு வந்தார். அப்புறம் அது கருகிப்போனப்புறம் துக்கம் விசாரிக்க வந்தார். வாத்தியாரோட ரண்டாவது பெண் கலியாணத்துக்கு ஒரு தடவை வந்தார். . . அப்பா அப்பான்னு - பழையகாலத்திலே காசி யாத்திரைக்குப் பண்டம், பணம் சேர்ப்பாளாமே -அந்தமாதிரின்னா தயார் பண்ணிண்டே இருக்கே."

இந்து சொல்வது சிறிதளவு சரியாக இருக்கலாம். ஆனால் அப்பாவைப்பற்றி, அவர் அன்பைப்பற்றி, அவள் நிச்சயமாக எல்லாம் தெரிந்துவிட்டதுபோல் சொல்றாளே, அது உண்மையல்ல, சரியல்ல என்று அவனுக்கு வருத்தமாக இருந்தது. பதினாறு வருடமாக இங்கு இருப்பது உண்மை. அதைச் செய்தது அவர்தானே.

ஆறடி வளர்ந்திருப்பதும் உண்மைதான். இந்த ஊரிலேயே எல்லாரையும்விட உயரம் அவன். அப்பாவைவிட உயரம். அண்ணனைவிட உயரம். எல்லாரையும்விடப் பலசாலிகூட. ஊஞ்சலுக்கு அப்பால் காமிராஅறை ஓரமாக, சுவர் மூலையில் அதோ நிற்கிற பீரோவின் முகப்புக் கண்ணாடிக்குமுன், போகும் போதும் வரும்போதும், யாரும் இல்லாதபோது சற்று நின்று பார்த்துக்கொள்வான். இன்று பிற்பகல்கூட இந்து புறக்கடையில் ஏதோ வேலையாயிருந்தபொழுது அதன்முன் நின்று பார்த்தான். பெரிய உயரம்தான். பவானியம்மாளின் வீட்டுக் கொல்லையிலும் பாடசாலைக் கொல்லையிலும், அங்குள்ள கறிகாய்த் தோட்டங்கள், நந்தியாவட்டை, பவழமல்லி, துளசித் தோட்டம் - எல்லாம் அவன் தினமும் மண்வெட்டியால் வேர்க்க வேர்க்கக் கொத்தி எழுப்பினவைதான். உள்ளங்கையில் மூன்று விரலுக்கும் அடியில் காய்த்துக்கிடக்கிறது. கச்சை கட்டிக்கொண்டு கொத்தி முடித்து உடலைத் துடைத்துக்கொள்கையில் புஜம் கண்டு கண்டாகத் திரண்டு கெட்டித்திருப்பதைத் தடவும்போது, அவனுக்குப் பெருமையாக இருக்கும். ஆற்றில் பாதியாறுமட்டும் நீர் ஓடும்போது பலிஞ் சடுகுடு ஆடுகிற வழக்கம். குடியானத் தெருப் பையன்களும் சேர்ந்து

கொள்வார்கள். அவர்களில் இரண்டு மூன்றுபேர் இங்கிலீஷ் படிக்கிற பையன்கள். அப்பு என்று பெயர் சொல்லிக் கூப்பிடுவார்கள். சாண்டோசாமி, பனமரச்சாமி, கொடிக்கம்பசாமி என்றெல்லாம் மற்ற பையன்கள் பிரியமாகத்தான் அழைப்பார்கள். குறும்பாக அழைத்தாலும் கோபம் வருவதில்லை அவனுக்கு. ஏதோ குழந்தைகள் பேசுகிறது போல, வேடிக்கையாக நினைத்து விட்டுவிடுவான் - மற்றவர்களை விடப் பலசாலியாக உயர்ந்து இருக்கிறோம் என்று பெருமையாக. அந்தக் குறும்பெல்லாம் தன் உயரத்தையும் பெருமையையும் ஒப்புக்கொண்டு வருகிற ஒருமாதிரி மரியாதையாகவே ஏற்றுக்கொண்டு விடுவான். ஊருக்குப் போனபொழுது, அண்ணன் தம்பிகளை விடத் தன் உயரம், நிறம், தோற்றம், எல்லாமே சற்று அதிகமாக இருப்பது அவனுக்குத் தெரிந்தது. ஒரு வித்தியாசம்தான். இவனுக்குத் தலையில் குடுமி. அவர்களுக்குக் கிராப்பு. பாட சாலையில் தலைமயிருக்கு ஆசார உபசாரம் எல்லாம் செய்ய முடியாது. ஆனால் அந்தக் கிராப்புகளைவிட இந்தக் குடுமியே நன்றாக இருப்பதுபோல அவனுக்குப்பட்டது.

வருத்தத்தோடு துளிக் கோபமும் வந்தது அப்புவுக்கு. "ஆமாம் இந்து. தூசி தும்பும், ஈயச் செம்பு கலந்தாப்போல ஒரு கட்டையைத்தான் கொண்டுபோட்டார் அப்பா. அதை நன்னா காய்ச்சி, சுத்தம் பண்ணி, அடிச்சு, நகையாய்ப் பண்ணியிருக்கு இங்கே. அதுக்காகப் பட்டறையிலேயே இருக்க முடியுமோ அது?" என்றான் அப்பு.

"ஆமாம் அப்பு - நீ நகைதான் - நகைதான்" என்று அடிக் குரலில் சொல்லிக்கொண்டே, லேசாக ஆடும் ஊஞ்சலைச் சட்டென்று நிறுத்தி எழுந்து அவனிடம் வந்தாள் இந்து. எதிரே நின்றாள். அவன் தோள் இரண்டையும் பிடித்தாள். மார்பைத் தடவினாள். இறுக அணைத்தாள்.

அப்பு சட்டென்று எழுந்துவிட்டான்.

"இந்து! இந்து!" என்று திகைத்து, ஒதுங்கி நிற்க முயன்றான். வாசல் பக்கம் பார்த்தான்.

"நான் இந்த உசிரை உனக்காகத்தான் வச்சிண்டிருக்கேன். மூணு வருஷம் எங்கேயோ போயிருந்தேன்பாரு. அப்ப அங்கே இல்லே நான். உன்னோடதான் இருந்தேன்" என்று உயிரில்லாமல் துவண்டு தொங்கிய அவனது கைகளை இழுத்துத் தன் முதுகுக்குப் பின் வளைத்துக்கொண்டாள் அவள். மறு கணமே, அந்தக் கைகள் மீண்டும் பழைய நிலைக்கே போய்த் துவண்டு தொங்கின. வாசலை வாசலைப்

பார்த்தான் அப்பு.

"தாழ்ப்பாள் போட்டிருக்கு" என்று காதில் விழுந்ததும் விழாததுமாகக் குரல் வந்தது.

அப்பு அப்படியே மரமாக நின்றான். மண்டையில் ஓங்கியடித்தாற்போல மனம் செயலொடிந்து கிடந்தது. மேல் தோல் மட்டும் உயிரோடியங்குவது போலிருந்தது. இந்து அவனோடு நெருங்கி நிற்பதை உணர முடிகிறது. அவன் மார்பையும், தோள்களையும் அவள் வருடுவது தெரிகிறது. கீழ்த்தாடையில் இந்துவின் தலைமயிர் உறுத்துகிறது - லேசான சீயக்காய் மணத்தோடு. நுகரும் புலனும் இயங்குகிறது. இல்லாவிடில் அந்த மணமும், இந்துவின் புடவை மணமும் எப்படித் தெரியும்? அடுப்பு வேலையை முடித்துவிட்டு, வெயிலில் உலர்த்தி மடித்த வேறு கறுப்புப் புடவையையும் ரவிக்கையையும் அணிந்து வந்திருக்கிறாள் போலிருக்கிறது. அந்த ஸ்பர்சம் ஜில்லென்று மிருதுவாகத்தான் இருந்தது. ஆனால், சிலசமயம் வேட்டியில் அவனறியாமல் ஒட்டி ஊருமே பெரிய பச்சை நிற இலைப்புழு - அதைக் கண்டது போலிருந்தது.

"இப்படி வந்து உட்காரு" என்று ஊஞ்சலுக்குப் போவதற்காக அவள் திரும்பினாள்.

அதுதான் சமயம் என்று அப்பு திரும்பி, இடைக்கட்டு நிலைவழியாக விரைந்து பாடசாலை வீட்டுக்குள் நுழைந்தான். கும்மிருளாக இருந்தது. தடவித்தடவி நடந்தான். தூணோரமாக இருந்த குமாஸ்தா - மேஜை குதிரை முகத்தில் இடித்தது. அப்படியே உட்கார்ந்து கொண்டான். வேதத்தில் விவரிக்கப்பட்டுள்ள இரவுத் தேவதையை நினைத்துப் பார்த்தான்: "இரவுத் தேவி வந்துவிட்டாள். கண்ணால் எங்கும் பார்க்கிறாள். ஆபரணங்கள் அனைத்தையும் பூண்டுவிட்டாள். அகண்ட ஆகாயத்தையும் பள்ளங்களையும் மேடுகளையும் அவள் நிறைத்து விட்டாள். ஒளியால் இருளை விரட்டிவிட்டாள். காவல் பொறுப்பை உஷையிடமிருந்து ஏற்றுவிட்டாள் அவள். இருள் பயந்து ஓடுகிறது. மரத்தில் உள்ள கூட்டுக்குச் செல்லும் பறவைகள் போல - நீ வந்ததும் வீடு திரும்பினோம் நாங்கள். ஊரார்கள், கால்நடைகள், பறவைகள், பேராசைப் பருந்துகள்கூட வீடு திரும்பிவிட்டன. அலைபோல் ஊரும் இரவுத் தேவி! ஓநாய்களை விரட்டு, வழியில் பயமில்லாமல் நாங்கள் போகவேண்டும். கறுப்பாக அணிகள் அணிந்து கடன்போல் வந்துள்ள இருளை நீக்கிவிடு. மாடு ஓட்டுவதுபோல், இந்த ஏழை இறைஞ்சலை - துதிகளை உன்னிடம்

அனுப்புகிறேன். இரவுத் தேவி, வெற்றி வீரனுக்கு அளித்த புகழ் மாலையாக இதை ஏற்றுக்கொள்."

குமாஸ்தா - மேஜைமீது கையை வைத்து, முகத்தையும் புதைத்து, கண்ணை மூடி, இதைச் சொல்லிக்கொண்டிருந்தான் அப்பு.

மூடிய கண்ணுக்குள் இருள் முகில் முகிலாக, அலை அலையாகப் புரண்டது. 'அம்மா உனக்குப் பூரண ஆசீர்வாதம் செய்கிறாள்' என்று அப்பா நுணுக்கி நுணுக்கி எழுதிய கடிதங்கள் மினுங்கின. அப்பாவே அதைச் சொல்வதுபோல் கேட்டது. 'ஙொய்' என்று காதடைத்துக் கொண்டாற்போல் ஒரு ஒலி பீறிட்டது. கடைசியில் மெதுவாகத் தேய்ந்தும்விட்டது அது. இப்போது சுவர்க்கோழி இசைதான் வெள்ளித் திருகாணியால் இருளைத் துரப்பணம் போடுவதுபோல் துளைத்தது. காவேரியில் போய் ஸ்நானம் செய்து, ஒட்டின மாசைக் கழுவலாமா என்று நினைத்தான் அவன். சிரிப்பாக வந்தது. அப்படியே முகத்தைப் பலகைமீது வைத்து, சுருண்டுபுரளும் இருளில் கண்ணுக்குள் பார்த்துக்கொண்டே கிடந்தான்.

## 4

பாடசாலைச் சாப்பாடு படுமட்டம். காலையில் போடுகிற பழையதிற்கு என்று தனியாக ஒருமோர் தயார் செய்து வைத்திருப்பான் பரிசாரகன். அது எருமையிலிருந்து வந்த மோரா அல்லது வேறு விலங்குகள் தந்ததோ, சொல்வதற்கில்லை. அப்படி ஒரு ஊளை மணம் அதற்கு! அதேபோல, தொட்டுக்கொள்ளும் - காய்ந்த நார்த்தங்காயிலும் ஏதாவது புழு நெளியாமல் இராது. பவானியம்மாளுக்கு இதெல்லாம் தெரியுமோ தெரியாதோ? நிச்சயமாகத் தெரிந்திராது. ஒருநாள் இந்துதான் - இரண்டு மூன்று வருடங்களுக்கு முன்னால் அத்தையோடு மல்லுக்கு நின்றுகொண்டிருந்தாள். "அத்தை, முப்பது காணி சொத்தைக் கொடுத்தா இந்தப் பாவத்தை வாங்கிக்கணும்? படிக்கிற பிள்ளைகள்ளாம் மனுஷக் குழந்தைகளா, கன்னுக்குட்டிகளா? கழுநீர்த் தொட்டியைக் கலக்கினாப் போல, இப்படி ஒரு மோரை ஊத்தறானே? இதைப் பார். நீ பார்த்துக் கண்டிக்காட்டா உன் தலையிலே இந்தப் பாவம் வந்து விடியும். இந்தப் பரிசாரகனைப் போகச்சொல்லு. நான்தான் வீட்டோடே கிடக்கேனே. நானாவது பண்ணிப் போடறேன். ஏன் இப்படிக் காசைக் கொடுத்து நரகத்துக்கு அச்சாரம் வாங்கிக்கணும்?" என்று இந்து அத்தையைப் பயமுறுத்தினாள்.

"நான் பழையதை ருசி பார்த்துப் போடமுடியுமா? நீ பார்த்துக் கவனிச்சாத்தான் உண்டு" என்று, பவானியம்மாள் அந்தப் பரிசாரகனை விரட்டிவிட்டாள். பிறகு இரண்டு பேர் வந்து போய்விட்டார்கள். ஆனால் முழுவதும் இதைத் தடுக்க முடியவில்லை. அவருசி பாடசாலையை விடவில்லை. இதையெல்லாம் சகித்துக்கொண்டு நாம் ஏன் இங்கே இருந்தோம்? எப்படியாவது வித்தையைச் சம்பாதித்துக்கொண்டு போய்விடவேண்டும் என்றுதானே, வேதத்தை ஏணியாக வைத்துக்கொண்டு ஏறிஏறி, அதன் முடிவில் நிற்கிற புருடனை - பகவானை - காணத்தானே, இத்தனையையும் சகித்துக்கொண்டிருக்கிறோம். சரீரத்தைப் புடம் போட்டு, மனத்தைப் புடம் போட்டு, மாசு நீக்கி, அவன் வந்து உட்கார ஏற்றதாகச் செய்யத்தானே, இதையெல்லாம் சகித்துக்கொண்டிருக்கிறோம்? அந்த இடத்தில் - வேள்வியில் உதிரத்தையும், மாமிசத்தையும் கொட்டி அவித்தாற்போல், இது என்ன திடீர் என்று? வேள்வி வளர்ந்து பலன் கிட்டும் வேளைவரையில் காத்திருப்பார்களாம், அசுரர்கள்! கடைசியில், நீலக் கொழுந்துடன் உயர எழுந்து, தேவர்களைக் கூப்பிடத் தீ எழுகையில் மாசைக் கொட்டி, அத்தனையையும் வீணாக்குவார்களாம். எல்லாம் முடிந்து ஊருக்குப் புறப்படுகிற சமயத்தில் . . . அம்மாவின் பூரண ஆசீர்வாதம் பலிக்கவில்லையா? அப்பாவும் அம்மாவும் என்னை நினைக்கவேயில்லையா? அவர்களுடைய எண்ணம், பிரார்த்தனை எல்லாம் பலமாக இருந்தால் ஏன் இப்படிக் கடைசித் தருணத்தில் குப்பையும், உதிரமுமாக வந்து விழவேண்டும்?

அப்பாவும் அம்மாவும் நினைக்காமலிருக்க மாட்டார்கள். அவனுக்காக ஒரு தனிப் பூரிப்பையும் தனி முகத்தையும் மண்ணில் காண முடியாத ஒரு தனி மலர்ச்சியையும் அவனுக்காகவே ஏந்தும் அம்மா எப்படி அவனை நினைக்காமலிருப்பாள்! அவன் தினம் எழுந்ததும் முதலில் நினைப்பது அவளைத்தானே! 'மாத்ரு தேவோ பவ' என்று முதல் நாள் பாடம் தொடங்கும் போது, வாத்தியார் அவளைத்தானே முதலில் நினைக்கச் சொன்னார். அவள் இஷ்டப்பட்டதால்தானே நாம் இங்கு வந்திருக்க முடியும்? அப்பாவுக்கு அம்மா சொல்வதைத் தட்டுகிற வழக்கமே இல்லை. அவருக்குத்தான் அவளிடம் எவ்வளவு கௌரவப் புத்தி! எவ்வளவு மரியாதை! அந்த அம்மா நினைக்காமலிருக்கமாட்டாள். அவளுடைய ஆசி கையை நீட்டிக் கொண்டுதான் இருக்கும்! நமக்குத்தான் அதை எட்ட உயரமில்லை! ஆறடி உயரமாம்!

இந்து ஏன் இப்படி வளர்ந்தாள்! அப்படியே பத்து வயதாக,

'எஸ்'கட்டுப் பின்னலும் பாவாடையுமாக முழங்காலை மடக்கி உட்கார்ந்து சாதம்போடுவாளே - அப்படியே இருந்திருக்கக் கூடாதோ? பாடசாலைப் பையன்களை உட்கார வைத்து, பின்னால் உட்கார்ந்து பின்னிவிடுவாளே அப்படியே இருந்திருக்கக் கூடாதோ? அப்பு பன்னிரண்டு வயதுவரையில் அவளிடம்தான் தலை பின்னிக்கொண்டிருந்தான். மேளக்கார வெங்கடராமனின் பெண்டாட்டி ராஜாமணி, அவளுக்கு ஹார்மோனியத்தில் சரளி, ஜண்டை வரிசை, சீதாபதே, சனி தோடி, துளசிபில்வ, சினத்தவர் முடிக்கும் - இவற்றோடு பல வகைப் பின்னல், வலையட்டையில் சிங்கம், மான் போடறது, பீடா கட்டுகிறது - எல்லாம் சொல்லிக்கொடுத்திருந்தாள். தலை பின்னுகிற கைவரிசையை இந்து, பாடசாலைப் பையன்களிடம் தான் காண்பிக்கிற வழக்கம். கேசவ பட்டன், ஜகதீசன் இவர்கள் தலையெல்லாம் பேன்காடு. எனவே, அப்புவின் தலையில் அவை குடிவைத்துவிடப் போகிறதே என்று, அவனுக்காக ஒரு தனிச் சீப்பைக் கொண்டுவருவாள் இந்து. இப்பொழுது போலவே அந்த வயதிலும் அவனுக்குத் தலைமயிர் நீளம்தான். எண்ணெய் தேய்த்து முழுகின அன்று அவளிடம் பாட்டு வாங்கினவண்ணம் பின்னிக்கொள்ள வேண்டும். "ஏண்டா, அப்பு! காலமேதான் முழுகியாச்சே. அப்புறம் இந்தத் தலையை நன்னா உலர்த்தி, விரலைவிட்டு, இல்லை ஒரு பேனாக் கட்டையாலாவது கோதி வெச்சுக்கப்படாதோ! சிடுக்குக் கூட நான்தான் பிரிச்சுவிடணுமா?" என்று சிடுக்குவாரியால் வரக்கு வரக்கென்று நோகநோக அவன் தலைமயிரை இழுத்து இழுத்து, ஆத்திரத்தைத் தீர்த்துக்கொள்வாள். அப்படியே பின்னிக்கொண்டே இருந்திருக்கக் கூடாதா! அத்தை போட்ட சிடுக்கு, பரசு போட்ட சிடுக்கு - இதெல்லாம் ஏன் அவளுக்கு வர வேண்டும்?

தலையை யாரோ வருடி அசைப்பதுபோலிருந்தது. ஒரு கணம் திகைத்து, மீண்டும் மேஜையிலிருந்து தலையைத் தூக்கினான் அப்பு. மேஜைக்கு எதிரே இந்து குனிந்து நின்றிருந்தாள். அந்த இருளில் அவன்முகத்தில் பாதியிலும் வலது தோள்மீதும் வெளிச்சம் விழுந்திருந்தது. ஏது வெளிச்சம் என்று அவன் கண் தானே திரும்பிற்று. பவானியம்மாள் வீட்டிற்குள் போகும் இடைநிலைக்கப்பால் ஓரமாக அரிக்கேன் வைத்திருந்தது.

"இந்தா, இதைச் சாப்பிடு."

"என்ன அது?"

"பசும் பால்."

"பாலா!"

"ஆமாம், சாப்பிடு."

வாதம் செய்யாமல், அதை வாங்கி மளமளவென்று சாப்பிட்டான் அப்பு.

"சொல்லிக்காமியே வந்துட்டியே."

". . . . . . . . ."

"நான் சொன்னது மனசுக்கு சிரமமாயிருக்கா?"

" . . . . . . . . ."

"வாயைத் திறந்து பதில் சொல்லேன்."

"பதினாறு வருஷம் என்னை வளத்திருக்கா அத்தை. அவளுக்குச் சந்தோஷமா ஏதாவது செய்ய முடியாவிட்டாலும், தலையிலே கல்லைத் தூக்கிப் போட்டு விடுவேன் போலிருக்கு" என்று அப்பு மேலே பேச முடியாமல் நிறுத்திக்கொண்டான்.

"நானும்தான் உனக்குச் சாதம் போட்டிருக்கேன்" என்று புன்னகை பூத்தாள் இந்து. "யார் தலையிலே கல்லைத் தூக்கிப் போட்டா அதிகப் பாவம் வராதுன்னு பார்க்கிறியா? என் மேலே கல்லைப் போட்டால் அத்தைக்கு நல்ல பிள்ளையாகலாம். சாதத்தை நான் போட்டேனே ஒழியச் சாதம் அவளுது தானே. நான் பாவம் பண்ணணும்னு கேக்கறேன். மாட்டேன்னு சொல்றதுதான் நல்ல காரியமாய்ப் படறது உனக்கு. இல்லையா?"

"இந்து!" என்று பதறினான் அப்பு - அவள் பேச்சைக் கேட்டு அல்ல; அவள் வந்து உட்கார்ந்ததைப் பார்த்து. இந்து அவனுக்கு இடப் பக்கத்தில் வந்து உட்கார்ந்துவிட்டாள். நெருக்கமாகவும் உட்கார்ந்துவிட்டாள். அவனது வலது தோளை வலது கையால் வளைத்துக் கொண்டாள். அப்புவால் எழுந்திருக்க முடியவில்லை. வலது கையை உயர்த்தி அவள் கையை எடுக்கப் போனான். அதற்குள் இடது கையை முன் பக்கமாக நீட்டி, தன் வலது கை விரலோடு பிணைத்துக் கொண்டாள். 'சாண்டோ சாமி' அவன். ஒரு திமிர் திமிரினால் அவளைக் கீழே தள்ளி நகர்த்தியிருக்கலாம். திமிரவில்லை; பேசாமலிருந்தான். திமிருவது

மரியாதைக் குறைவு என்றுதான் பட்டது அவனுக்கு.

"இதப் பாரு! நான் பொய் சொல்ல மாட்டேன். இப்பக் கூட நான் குறைபட்டுப் போயிட்டாப்பல நினைச்சுக்கலெ. கலியாணம் பண்ணிண்டாத்தானே, குறைபட்டுப் போயிட்டான்னு சொல்லணும். எனக்கு இன்னும் கலியாணமே ஆகலெ. எல்லாருமா சேர்ந்து யாரையோ கொண்டு வந்து என் கையைப் பிடிச்சுக்கச் சொன்னா. கழுத்திலே ஒரு சரடைக் கட்டச் சொன்னா. என்னைப் 'போ'ன்னு தள்ளிவிட்டா. இந்த உடம்பு போச்சு. நாலு வருஷம் கழிச்சு அங்கே போய் இருந்தது. மூணு வருஷம் இருந்தது. பெண்டாட்டி பெண்டாட்டின்னு எல்லாரும் சொன்னா. அதுமாதிரியே இருக்கச் சொன்னா. இருந்தது. என் உடம்பை மாத்திரம் கட்டி ஆண்டா, நான் பெண்டாட்டியா ஆயிட முடியுமா? ஆயிடுவேனா? நான் ஆகலே. எனக்குக் கலியாணமே ஆகலே; உடம்புக்குத்தான் ஆச்சு. இன்னும் ரண்டுவருஷம் உசிரோடு இருந்து, நானும் அங்கேயே இருந்திருந்தா சம்சாரியாக்கூட ஆயிருப்பேன். ஆனா, அப்பவும் கலியாணம் ஆயிருக்காது. நான் இப்பவும் சுமங்கலிதான்னு சொல்லவந்தேன். இல்லை. எனக்குக் கலியாணம் ஆனாத்தானே சுமங்கலி. அதுவே ஆகல்லியே எனக்கு. ஆனா, எனக்குக் கலியாணம் ஆச்சா, ஆகலியான்னு கூடத் தெரியலே. சிலசமயம் ஆனாப்போல இருக்கும். ஏன்னா, உன்னோட இருக்காப்பலதானே நினைச்சுண்டிருந்தேன். ஆனா நடு நடுவிலே, நீ இல்லே அதுன்னு தெரியறபோதுதான் கலியாணம் இன்னும் ஆகலேன்னு புரியும். அப்புறம், ஒரு நாளைக்கு எல்லாம் வந்து என்னைச் சுத்தி உட்கார்ந்துண்டு புலம்பித்துகள். என் தலைமயிரைப் பிடிச்சுச் சுரீர்சுரீர்னு இழுத்ததுகள். என்னை வாசல்லெ கொண்டு தள்ளித்துகள். என் உடம்பு போய் விழுந்தது. பெருந்துறையிலே இருக்கிறபோதுகூட, நீ கிடக்கிறாப்போல எனக்கு ஒரு பிரமை. அந்தப் பிரமை இல்லாட்டா, நான் அப்படிக் கஞ்சியும் காடியுமாக வடிச்சுக்கொண்டு கொடுத்துண்டே இருந்திருக்க மாட்டேன். எல்லாம் ஒரு தினுசா முடிஞ்சு போனப்புறம், எனக்கு அங்கே இருப்பா இருக்கலே. முன்னேயாவது ஒரு மூர்த்தி இருந்தது. உன்னை அதிலே ஆவாஹனம்பண்ணி, நாளை ஓட்டினேன். அதுவும் போனப்புறம், எனக்கு இருக்கமுடியலே. வந்துட்டேன். அஞ்சு வருஷமா, உங்கிட்ட இதை அப்படியே சொல்லி, 'எனக்கு இன்னும் கலியாணம் ஆகல்லே'ன்னு சொல்லணும்னு துடிச்சிண்டிருந்தேன். நான் யாருகிட்ட இதைப்போய்ச் சொல்லப்போறேன்? அத்தைகிட்டச் சொல்றதா? இல்லை, வாத்தியார்கிட்டச் சொல்றதா? இன்னிக்கி தெய்வமாப் பார்த்து, ஒரு இடம் கொடுத்தது -எல்லாத்தியும் சொல்லிவிடணும்னு. சொல்றேன். இதோ

பாரு. நீ இந்த இடத்தைவிட்டுப் போகப்படாது. அப்படிப் போறதுன்னா என்னை அழைச்சிண்டு போயிடு. அன்னிக்கி நான் மாலைபோட்டது, தாலி கட்டிண்டது, எல்லாம் உன் கழுத்து, உன் கைதான்னு தீர்மானமாயிருந்தேன். அந்த க்ஷணத்திலே தெரியலெ. என்னைப் புக்ககத்துக்குக் கிளம்புன்னு அழச்சிண்டு புறப்பட்டா பாரு - அன்னிக்கித்தான் பளீர்னு புரிஞ்சுது. வண்டியிலே ஏறும்போது, நீ எங்கேயாவது கண்ணிலே தட்டுப்படுவியோன்னு பார்த்தேன். உன்னைக் காணும். அப்புறம், ஸ்டேஷன்லே வண்டி நகர்றவரைக்கும் பார்த்தேன். அப்பவும் காணும். என்னைக்கொண்டு விட்டு விட்டு அத்தை திரும்பிவர்ர அன்னிக்கி அழுதா. நானும் அழுதேன். என்னை விட்டுட்டுப் போறாளேன்னு அழல்லே. யார் வீட்டிலேயோ என்னைக் கொண்டு விட்டுட்டுப் போறாளேன்னு நினைச்சிண்டுதான் அழுதேன். இங்கே திரும்பி வந்தப்புறம்தான். . . வந்தப்புறம்தான் . . . வந்தப்புறம்தான் . . . அப்பு . . . அப்பு! எனக்குப் பேச முடியல்லே, பேசவே முடியல்லே."

நகமெல்லாம் சதையில் அழுந்துகிறாற்போலக் கையிரண்டும் அவன் தோளைப் பற்றிக்கொண்டிருந்தன.

இந்துவின் உள்ளங்கை வெதவெதத்தது. ஆனால், முன்னங் கையின் சதையின் திரட்சியும் மென்மையும் தண்ணென்று - நெருக்கிக் கட்டிய ஜவந்தி மாலைபோல அவன் மார்பிலும் முதுகிலும் அழுத்திற்று. சிறிது நேரம் பவானியம்மாள், அப்பா, அம்மா, குறுகுறுப்பு, அச்சம், அனைத்தையும் மறந்து, கடந்து, தனியாக எங்கோ இருந்தான் அவன். 'என்னை நினைத்துக் கொண்டா? என்னையேவா? எனக்காகவா, ஒருத்தி, இப்படி இருக்கிறாள்? எப்படி இருக்கமுடியும்? நான் யார்? தெருவில் போகிற அநாமதேயம். என்னை நினைத்துக்கொண்டா?' என்று திருப்பித் திருப்பித் தனக்குள்ளேயே கேட்டுக்கொண்டான். ஒவ்வொரு நொடியும், நானில்லாவிட்டாலும் என்னையே நினைத்துக்கொண்டு, நானில்லாவிட்டாலும் என்னைவிட்டுப் பிரியாமல் . . !

திகைப்பும் வியப்பும் நிறைந்த பூரிப்பாக மாறி அவன் கழுத்துவரையில் ஏதோ நிரம்பித் ததும்புவதுபோலிருந்தது. இந்துவின் தலைமயிர் அவன் கன்னத்தில் உராய்ந்தது. புருவம் உயர்ந்தது. பிறகு நெற்றி, பிறகு உதடு!

சுவரில் எங்கோ 'கிக்கிக்கிக்'கென்று கவுளி பேசிற்று. அப்பு சட்டென்று அவளைத் தள்ளிவிட்டு எழுந்தான். இந்துவும் எழுந்து அவன் தோளைப் பிடித்துக்கொண்டாள்.

"வேண்டாம், இந்து!"

"என்ன வேண்டாம்?"

"இந்தப் பாவத்தைச் செய்ய வேண்டாம். அத்தையை நினைக்கிறபோது எனக்கு என்னமோ பண்றது."

"இப்பகூட அத்தைதானா? என்னை நினைக்க முடியல்லையா உனக்கு? பாவம், பாவம்னு பதர்றியே!"

"ஆமாம், இது பாவம்தான்."

"எனக்குப் பாவமாகத் தோணலியே. அந்தராத்மாவுக்கு விரோதமாக ஒரு காரியம் செய்யறதும் பேசறதும்தானே பாவம். நான் உன்னைத்தானே நினைச்சு நினைச்சுண்டு இத்தனை வருஷமும் உருகியிருக்கேன். அதைத்தானே சொன்னேன். யாரோ அஜாக்ரதையா, தெரியாத்தனமா பண்ணிவிட்டா. நான் அது தப்புன்னு - நான் நிஜமா நினைக்கிறதை - சொல்லப்படாது, செய்யப்படாதுன்னு சொல்றியா?"

"எனக்கு இது சரியாப்படலே, இந்து. நான் உன்னை அத்தை மாதிரியேதான் நினைச்சுண்டிருக்கேன். நீ தொடற பொழுது, அத்தையைத் தீண்டறாப்பல எனக்கு . . ." என்று கண்ணை மூடிக்கொண்டான் அப்பு.

"அத்தையே பெரிசுன்னு நினைச்சிண்டிருக்கிறதனால் தானே, இப்படி என்னமோ, செத்த பூச்சி மேலே காலை வச்சுட்டாப்பல நெளியறே. என்னையும் ஒரு பொருட்டா நினைச்சு மனசிலே வாங்கிக்கணும்னு தோணி இருந்துதுன்னா . . . அதுதான் உனக்கு வர மாட்டேங்கறதே."

"ஊரிலே கூடப்பிறந்தவாளை எல்லாம் கூட அக்கா தங்கைன்னு அவ்வளவா நினைச்சுப் பார்த்தது கிடையாது இந்து. உன்னோட கூடப்பிறந்தாப்பலதான் எனக்குத் தீர்மானம் . . ."

"இப்ப, அது சரியில்லேன்னு புரிஞ்சு போயிடுத்தோல்லியோ!"

"நான் நினைச்சிண்டிருக்கிறது சரிதான். அது மாறல்லையே!"

"அப்பு!"

" . . ."

"அப்பு"

"..."

"யோசிக்காம பேசறியே, நான் இவ்வளவு சொன்ன பிறகும். நீ படிச்ச வேதத்தின் மேலே ஆணையாச் சொல்றேன்; நீ இல்லாம நான் உசிரோட இருக்கறதுக்கு அர்த்தமே இல்லை."

தார்க்குச்சியைத் தோலில் செருகித் திருகி இழுத்த மாடு போல் அப்பு உள்ளே துள்ளினான். வேதத்தின் மேலே ஆணை! இந்த ஆணையைத்தான் பொறுக்க முடியவில்லை அவனால். தார்க்குச்சி ஏறினால், ஒன்று ஒரேயடியாகத் தலைதெறிக்க ஓடவேண்டும்; அல்லது அப்படியே அந்த வதை தாளாமல் பொத்தென்று கீழே விழுந்து மயங்கவோ, சாகவோ வேண்டும்.

"இந்து, இனிமே இந்த மாதிரி பேசாதே."

"ஏன்?"

"வேதத்தை இழுக்காதே. வேதம் எங்கம்மா மாதிரி. அதுதான் எனக்கு ஈச்வரன். எனக்கு அம்மா. எங்கம்மா மாதிரி அது ஒரு தெய்வம். எங்கம்மா மாதிரி அது புடம்போட்ட தங்கம். மாற்றுக் குறையாத தங்கம். பரசுவை எனக்குத் தெரியும். அவன் செத்துப் போயிட்டான்னு நினைக்காதே. நீ பேசறதையெல்லாம் கேட்டுண்டுதானிருப்பான். அவன் பிராணன் புழுவாத் துடிக்கும். நீகூட அவனை நினைக்கலே; நினைக்காதது மாத்திரமில்லை, அவன் நினைவையே இவ்வளவு தூசியாய் மதிக்கறே, நினைக்கக்கூடத் தகுதியான சேதியா எண்ணலேன்னு - அவன் துடிச்சிண்டிருப்பான். அவனை இப்படித் தூர எறிஞ்சுட்டு, இப்படிப் பேத்தறதை என்னாலே கேட்க முடியலே. அதுக்கு வேதம் ஆணைன்னு சொன்னே பாரு, அதைக் கேட்டபோது, எங்கம்மாவை ஓங்கி அடிச்சாப்பல இருந்தது. அவ முகத்திலே புழுதியை வாரி இறைச்சாப்பல வெட வெடத்துப் போச்சு எனக்கு. இதோ பாரு, நான் காலமே ஊருக்குப் போயிடுவேன். ஆனா, அத்தைக்காகத்தான் காத்துண்டிருக்கேன். இப்ப நான் இங்கே இருக்கிறது, இன்னும் கொஞ்சம் இருக்கப்போறது - எல்லாம் அத்தைக்காகத்தான் . . . உன்னைப் பார்த்தா, நினைச்சா, எனக்குச் சந்தோஷமா இருக்கு. அழுகையா வரது. ஆனா . . . ஆனா . . . நீ என் மேலே கோவிச்சுக்காதே. எங்கம்மாவைப் போய் நான் பார்க்கறபோது, என் உடம்பிலேயும் மனசிலேயும் கல்மஷமில்லாமல், களங்கமில்லாம

நான் போகணும். வேதம் வாசிக்கப்போய்த் தலையிலே மண்ணை வாரிப் போட்டுண்டு வந்திருக்கான்னு அவ நினைக்கப்படாது. காவேரியிலே குளிச்சுட்டுத் திரும்பி வர்றபோது ஒரு பானைக் கள்ளை வாங்கிக் குடிச்சுப்புட்டு, சகதியிலே தள்ளாடி விழுந்து புரண்ட மூஞ்சியோட எங்கம்மா கிட்டப்போய் நிக்கமுடியாது. நீ பார்க்கற போதெல்லாம் அவ பார்க்கிற மாதிரி இருக்கும். அப்படியே இருந்து என்னை ஊருக்குப் பத்திரமா அனுப்பு" என்று முன்னே சற்று நகர்ந்து நின்றான் அப்பு. தொடர்ந்து மீண்டும் தோளில் கை விழுமோ என்று திரும்பினான்.

இந்து, அரிக்கேன் வெளிச்சம் முழுவதும் மேனிமீது விழச் சுவரைப் பார்த்து நின்றாள். அவள் சுவரைப் பார்க்கவில்லை. எதையும் பார்ப்பதாகத் தெரியவில்லை. மூக்குப் பளபளத்தது. கண் ரப்பை தொய்ந்தாற் போலிருந்தது. செத்துப் போனதை யாரோ நிற்க வைத்தது போலிருந்தது அவள் நிற்கிற நிலை. முகத்தில்கூட அந்த மாதிரி ரத்தம் சுண்டினாற் போன்ற ஒரு களை. நீர் ஓட்டம், செயல் எல்லாம் வற்றிவிட்டாற் போன்ற ஒரு நடுக்கம். ஒரு சாம்பல் நிலை.

எத்தனையோ நிமிஷங்களைச் சாப்பிட்டுக்கொண்டே அந்தச் சவக்களை நின்றது. பிறகு, தலையை அவிழ்த்து முடிந்து கொண்டது. கன்னத்திலும் உதட்டிலும் சொறிந்து கொண்டது. சூன்யத்தைப் பார்க்கும் பார்வை மட்டும் மாறாமல் உருவம் நகர்ந்து, இடை நிலையைத் தாண்டி, அடுத்த வீட்டுக் கூடத்தில் காலடி வைத்தது. அரிக்கேன் விளக்கை எடுத்துக்கொண்டது. அதைத் தூணோரமாக வைத்துவிட்டு, இன்னொரு தூணோரமாக உட்கார்ந்து முழங்கால்களுக்கிடையில் முகத்தை வைத்துக் கொண்டது.

அப்பு கதவு வரை பார்த்துவிட்டு, விறுவிறுவென்று நிலையைக் கடந்து அதன் அருகே போனான். அடியோசை கேட்டு, முழங்காலில் நுழைந்த முகம் நிமிர்ந்தது. நிமிர்ந்ததா என்று கூடப் பார்க்கவில்லை அவன். நெடுஞ்சாண் கிடையாக முன்னால் விழுந்து நமஸ்காரம் செய்தான். திரும்பிப் பாட சாலைக்குள்ளே வந்து, துண்டை விரித்துப் படுத்தான்.

அடங்கிய கேவலும் விசும்பலும் மூக்கு உறிஞ்சுவதும் கேட்டன.

என்ன அர்த்தம் என்று தெரியாமலே, 'கிக்கிக்கிக்' என்று இருளில் கவுளி அடித்தது.

அம்மாவின் முகத்தை இருளில் கண்டுகொண்டே கண்ணை மூடிக்கொண்டான் அவன்.

## 5

ஊருக்குப் போக மூட்டை கட்டிக்கொண்டிருந்தான் அப்பு. பதினாறு வருஷங்களுக்கு முன்னால் ஒரு பையோடு தான் வந்தான் அவன். அது பழைய கள்ளிப் பெட்டி ஆயிற்று; பிறகு, பழைய ட்ரங்குப் பெட்டியாக ஆயிற்று. மைசூருக்கு இரண்டாம் முறை போய்ப் பரீட்சை கொடுத்துவிட்டுச் சால்வை, சன்மானம் எல்லாம் பெற்று வந்தபொழுது அதற்கு ஒரு புதுத் தோழனாக நீல ட்ரங்குப் பெட்டி ஒன்று சேர்ந்துகொண்டது. இரண்டிலும் வேட்டிகள், சால்வைகள், புத்தகங்கள், கடுக்காய் மசியில் எழுதிய காது மடிந்த நோட்டுப் புத்தகங்கள் - எல்லாவற்றையும் தட்டித்தட்டி மடித்து எடுத்து வைத்துக்கொண்டிருந்தான் அவன். வேதப் புத்தகங்கள், பாஷ்யங்கள், கிருஹ்ய சூத்திரங்கள், உபநிஷத்துகள், உரைகள், தோத்திரங்கள், தீர்த்த யாத்திரை செய்பவர்களுக்காக எழுதப்பட்ட ஹிந்தி - தமிழ் சம்பாஷணைப் புத்தகம் ஒன்று - இது எப்படி வந்தது? ஓகோ! ஆமாம், பவானியம்மாள் காசிக்குப் போய்விட்டு வரும்பொழுது நாலைந்து பிரதி வாங்கி வந்திருந்தாள். இரண்டு மூன்றைத் தானம் செய்துவிட்டாள். . . . வேட்டிகள் . . . சன்மானம் வந்த சால்வைகள் . . . எதற்காக நமக்கு ஆறு சால்வைகள்? பச்சையில் இரண்டு, சிவப்பில் நான்கு . . . ஒவ்வொன்றும் மாதக்கணக்கில் உட்கார்ந்து வேலை செய்தது போலிருக்கிறது. அத்தனை ஜரிகை. ஒரு பச்சையைத்தான் அவன் மார்கழி, தையில் எடுத்துப் போர்த்திக் கொள்வான். பனி புகையும் அந்தி வேளைகளில் உடம்பில் சுற்றிகொண்டு காவிரிக்கு முன் உட்கார்ந்து ஜபம் செய்வான். மற்றவை மடித்தபடியே இருக்கின்றன.

"என்னடா, அப்பு! பிரயாணத்துக்குத் தயார் பண்ணியாறதா?" என்று பவானியம்மாளின் குரல் கேட்டு எழுந்து நின்றான்.

"ஆமாம் அத்தை!"

"உட்கார்ந்துக்கோ . . . பரவாயில்லே . . . உட்கார்ந்துக்கோ" என்று சொல்லிவிட்டுத் தூணில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டாள் பவானியம்மாள்.

"நீ பாட்டுக்குக் காரியத்தைப் பாரு" என்றாள்.

அப்புவுக்கு நெஞ்சில் ஏதோ புரண்டது. பவானியம்மாளின் முகத்தை, மடிக்கிற சால்வையிலேயே பார்த்தான். உடலைச் சுற்றிப் பசும்பொன் நிறத்தில் ஒரு நார்ப்பட்டுப் புடவை. நடுத்தர உயரம். அகல முகம். சற்றுச் சதுர வாகான அந்த முகத்தில் எப்பொழுதும் ஒரு அமைதி. எந்தச் செய்தியைக் கேட்டாலும் விருக் விருக்கென்று தோற்றம் மாறிவிடாத முகம். ஆனால், அதில் துயரத்தை நிரந்தரமாகச் செதுக்கிவிட்டது போல உதட்டுக் கடைகளில் லேசாக ஒரு கோடு. அதனால் தான் எப்பொழுதாவது அவள் புன்னகை செய்யும்பொழுது ஒரு தனி அழகையும் களையையும் ஏந்தி நிற்கும் அது -அழுத குழந்தையின் புன்சிரிப்பைப்போல. ஆளப்பிறந்த அந்த முகத்தின் முன் முன்பின் தெரியாதவர்களுக்குக்கூடக் குரல் தாழ்ந்துவிடும். ஆனால், பாடசாலைப் பையன்களை மென்மையினாலும் தாய்மையினாலும் கட்டிப் போட்டிருந்தது அந்த முகம். நூற்றுக்கு மேற்பட்ட குடும்பங்கள் இவள் கொடுத்த அறிவை - பரம வேத அறிவை - பெற்று, இந்த முகத்தை நினைவில் வைத்துப் பூஜை செய்துகொண்டிருக்கின்றன - பதினாறு வருஷம் இவள் கையில் வளர்ந்து, லேசில் கிட்டாத - ரிஷிகள் கண்ட தத்துவங்களையெல்லாம் பெற்று.

அப்புவுக்கு வெட்கமாக இருந்தது. இந்த இடத்தை விட்டு உதறிக்கொண்டு போவது தவறுபோல ஒரு குறுகுறுப்பு உள்ளே உறுத்திற்று. ஏதோ சத்திரத்தில் தங்கிவிட்டுப் போகிறவன்போலக் கிளம்பிப் போவதை நினைக்கும்போது உடல் சற்றுக் குன்றிற்று.

இவள் செய்ததற்கு என்ன பிரதி செய்யப்போகிறோம் என்று ஒரு கணம் நினைத்தவன், பெரிய பர்வதத்தின் அடியில் நிற்பவன்போலச் சிறுமைப்பட்டுக் கூசினான். முடியாது, முடியாது என்று தனக்குள்ளே தலையசைத்தான். எல்லாவற்றையும் அவள் காலடியில் போட்டுவிட்டு நிற்க வேண்டும் போலிருந்தது. முந்தாநாள் இரவு நடந்ததை - தப்பித்துக் கொண்டதை - நினைத்தான். அந்தக் கணம் இந்துமீது இரக்கப்பட்டு, ஏதாவது நடந்திருந்தால் - முதுகுத் தண்டு லேசாக உதறல் எடுத்தது அவனுக்கு. அப்பாடா! யார் அப்பொழுது காப்பாற்றினார்கள்? வாழைக் குருத்தைப்போல ஜில்லென்று அவள் முழங்கைச்சதை உதட்டில் பட்டபோது, உடலை நடுக்கிப் பயமுறுத்திக் கொண்டுவந்த மயக்கத்தை, மெய் மறதியை, அப்படியே விட்டுச் சட்டென்று எழுந்துகொள்ளாமல் இருந்திருந்தால்! அப்படி யார் காப்பாற்றினார்கள்? அத்தையே தான்! அவள் கொடுத்த வேதம்தான். அவள் நிர்மாயமாக, மாசில்லாத

வாஞ்சையோடு இட்ட சோறுதான் - இல்லை, அவளுடைய காரணமில்லாத அன்புதான்.

உடலில் ஒரு சிலிர்ப்பு ஊர்கிறது. உட்கார முடியாமல் அப்பு ஒரு சிவப்புச் சால்வையை எடுத்துக்கொண்டு எழுந்தான்.

"அத்தே! அத்தே!!" என்றான்.

"என்ன?"

"இதை அத்தைக்குக் கொடுக்கணும் போலிருக்கு. அத்தை வாங்கிண்டு எனக்கு ஆசீர்வாதம் பண்ணணும்" என்று பவானியம்மாளின் பாதத்தின்மீது அதை வைத்து நெடுஞ்சாண் கிடையாக விழுந்து, சிறிதுநேரம் அப்படியே கிடந்தான். கோணியிழுக்கும் தன் முகத்தைப் பார்த்து விடப் போகிறாளே என்று பயந்து வலக் கன்னத்தைத் தரைமீது வைத்தவன் சிறிது நேரம் எடுக்கவேயில்லை.

"உனக்கென்னடா குறைச்சல் அப்பு! பரமஞானியா, தீர்க்காயுசா இருக்கணும் . . . என்னத்துக்கு இதெல்லாம்! நீ கொஞ்சமா உழைக்கலியேடா - கொல்லையிலே இருக்கிற தென்னந்தோப்பு உன் கை வச்சு நிமிர்ந்ததுதானே. நீ வந்தப்பறம்தானே புழக்கடை முழுக்கப் பூத்துக் குலுங்கறது."

அப்பு எழுந்து நின்றான்.

"எத்தனையோ பேர் இருந்துட்டுப் போயிருக்கா இங்கே. உன் மாதிரி புத்தியும் குணமுமா யாரும் இருந்ததில்லே! சுந்தரம் உன்னை விட்டுட்டு எப்படி இருக்கப் போறாரோ, தெரியலே. அவர் வேலையை முக்கால்வாசி நீ பாத்துண்டிருந்தே நாலு வருஷமா! இனிமே எப்படிச் சமாளிக்கப் போறாரோ! கலியாணத்திலே இதைத்தான் சொல்லிண்டிருந்தார். ஏதோ, மனோபலத்திலே ஓடிண்டிருக்கு அவருக்கு. உடம்பிலே திராணியில்லே. நின்ன வரைக்கும் நெடுஞ்சுவருன்னு இருக்கு. முப்பது வருஷம் முன்னாலே பாடசாலையை அவரோட அப்பா வந்து ஆரமிச்சு வச்சார். ஒரு வருஷம் பிள்ளையைத் தயார் பண்ணிட்டுப் போய்ச் சேர்ந்தார். இருபத்தொன்பது வருஷமாச்சு. அவருக்கு முடியாம போயிடுத்துன்னா பாடசாலை என்ன ஆகப் போறதோ? பகவான் நடத்திவைப்பான். கோபுரத்தைப் பொம்மை தாங்கற மாதிரி நான் கவலைப்படறேனோ என்னமோ. இருந்தாலும், அந்த மாதிரி மனுஷன்

கிடைக்கணுமே. . . என்னமோப்பா . . . ஒரு சபலம் எனக்கு. ஊருக்குப் போ. எப்பவாவது தோணும்போது கூப்பிட்டா நீ வந்து கொஞ்சம் பாடசாலையைப் பார்த்துக்கணும். பார்த் துண்டாத் தேவலைன்னு தோண்றது எனக்கு."

"சரி அத்தே. எங்கேயிருந்தாலும் ஒரு வரி எழுதிப்போட்டா ஓடி வரேன்."

"ரொம்ப சந்தோஷம் அப்பு. இந்த வார்த்தை சொன்னதே பாலை வார்க்கிறாப்பல இருக்கு . . . இத்தனை வருஷம் யாரும் தங்கினதில்லே அப்பு. அதனாலே, நீ ஒரு நாளைக்குப் புறப்பட்டுப் போகப் போறவன்தான்னு நினைக்காமியே இருந்துட்டேன் போலிருக்கு. அதான் என்னென்னமோ புலம்பறேன். இந்து! இந்தூ!" என்று கூப்பிட்டாள் பவானியம்மாள்.

"இதைப் பத்திரமா எடுத்து வை இந்து. அப்பு பிரசண்டு எனக்கு, இது."

"உனக்கும் ஒண்ணு எடுத்து வச்சிருக்கேன், இந்து" என்று இன்னொரு சால்வையை எடுத்து, "இது இந்துவுக்கு" என்று பவானியம்மாள் இந்துவிடம் கொடுக்க நீட்டின சால்வைமீதே வைத்தான் அப்பு.

"என்னடா அப்பு, இது! நீ அப்புறம் என்னத்தைத் தான் எடுத்துண்டு போகப் போறே. இதப் பாரு. இது வாண்டாம். பேசாம எடுத்து வச்சுக்கோ, சொல்றேன், இதை."

"இருக்கட்டும்."

"போர்வையைக் கொடுத்தா குளிர் விட்டுடும்னு நினைச்சுண்டிருக்கான் போலிருக்கு அப்பு."

அதைக் கேட்டுப் பவானியம்மாள் யோசிப்பதற்குள்,

"நீ அவனையே இங்கே இருத்திவிடலாம்னு நெனச்சே. அவனானா, போர்வையைக் கொடுத்துட்டுக் கிளம்பிட்டான் - கரப்பு தோலை உரிச்சு முழுசாப் போட்டுட்டுப் போகுமே, அந்த மாதிரி."

"ஆமாண்டி, இந்து, அது - கிடக்கறதைப் பார்த்தா முழுக் கரப்பு

மாதிரிதான் இருக்கும். உசிரும் உடம்பும் மட்டும் இருக்காது. சரியாத்தாண்டி சொன்னே . . . அதைத்தான் சொன்னேன். 'எப்ப வேணுமானாலும் கடுதாசு போடுங்கோ, வரேன்'னு சொல்றான்."

"நீ கடுதாசு போடறபோது அவன் எங்கே இருக்கானோ எப்படி இருக்கானோ!"

"அது சரி. அவன் சௌகரியத்தைத் தெரியாம, நாமதான் கடுதாசு போட்டுட முடியுமா, வான்னு."

பிரயாணம் போய் வந்ததும், கலியாண இரைச்சலில் அடிபட்டதும் பவானியம்மாளைச் சோர அடித்துவிட்டன. எனவே, விடியற்காலையில் எழுந்ததும் வழக்கம்போல ஸ்நானம் செய்யவில்லை அவள். வெந்நீரில் குளிப்பதற்காகப் புழக்கடைப் பக்கம் சென்றாள். அவள் குளிக்கும் அறைக்குள் சென்றதும், அடிமேல் அடிவைத்து இடைக்கட்டு நிலை வழியாக உள்ளே வந்தாள் இந்து.

"சால்வையைக் கொடுத்து என் குளிரை மாத்தணும்னு பார்த்தியாக்கும்."

"ஒண்ணுமே நினைக்கலே நான். நீ எனக்குத் தங்கை. கொடுக்கிறேன்."

"இன்னொரு தடவை இந்த மாதிரி சொல்லாதே. சொல்லாதேன்னா சொல்லப்படாது. என் மனசுப்படி விட்டு எங்கப்பாவும் உசிரோட இருந்தார்னா, உன்னை இப்ப வழி மறிச்சு, நீ காசிக்குப் போகவாண்டாம்னு என்னைக் கொண்டு நிறுத்தியிருப்பார். நான் என்னமோ மதம் பிடிச்சு அன்னிக்குப் பேத்தினேன்னு நினைக்காதே . . . ஒரு சேப்புக் கம்பளியைப் போட்டு ஏமாத்திவிட்டுப் போயிடலாம்னு நினைக்கிறே, பாரு. கெட்டிக்காரன் புளுகுக்குன்னா எட்டு நாள்! இது எட்டு வருஷமா கிடக்கிற நிஜம். நீ கொடுக்காட்டாலும் நான் ஒரு க்ஷணம் அதைப் பார்க்கத்தான் போறேன்" என்று வேகமாக வந்தாள் அவள். அவனை இறுக அணைத்தாள். மார்பகம் புதையத் தழுவினாள். வந்த வேகத்தில், எதிர்பாராமல் சிக்கின திகைப்பில், அப்பு ஒரு கணம் மூச்சுத் திணறிவிட்டான். பின்னால் சற்றுத் தள்ளாடினான். மறுகணம் சமாளித்துக் கொண்டான். "சீ, என்ன இது அசுரத்தனம்! அம்மாவைக் கட்டிக்கறாப்பல . . . எனக்கு என்னமோ பண்றது" என்று வேகமாகத் தள்ளினான். இந்து பின்னால் தள்ளாடினாள். சுவரில் தலை முட்டிக்கொள்ளும் போலிருந்தது.

சட்டென்று பாய்ந்து அவளை இழுத்து நிறுத்தினான். "செத்துத் தொலைக்காதே" என்று நகர்ந்தான்.

"அம்மாவாம் அம்மா! உங்கம்மா ரொம்ப ஒழுங்குன்னு நினைச்சுக்காதே. நானாவது உன்னையே நினைச்சுண்டு சாகறேன். உங்கம்மா யாரையோ நினைச்சுண்டு சாகாம இருக்கா பாரு. நான் உங்கம்மா இல்லை. நான் உன்னைத் தவிர யாரையும் நினைச்சதில்லேடா பாவி. அம்மா அம்மான்னு என்னை அவளோட சேர்க்காதே. எனக்கு ஏமாத்தத் தெரியாது!"

"என்ன சொன்னே."

"சொன்னதைத்தான். உங்கப்பா அவ நல்லவள்னு ஏமாந்திருக்கார். நீ, நான் பொல்லாதவள்னு ஏமாந்து கிடக்கே."

அப்புவுக்குச் சீற்றமாக வந்தது. காரணம் தெரியவில்லை. அம்மாவை என்னமோ சொல்லுகிறாள் என்று ஒரு ஆவேசம். அது என்ன, ஏன் - என்றெல்லாம் அவனால் யோசிக்க முடியவில்லை. படீர் என்று திசையைப் பிளக்கும் இடி கேட்கும் கணத்தில், கையைத் தூக்கிக் காத்துக்கொள்ள முயலுவதுபோல் அந்தச் சீற்றம் குப்பென்று எழுந்தது.

"என்ன? என்ன?" என்று அவன் கேட்பதற்குள் இந்து அங்கே இல்லை. இடைக்கட்டு வழியாகப் பூனைபோல் ஓடி மறைந்துவிட்டாள்.

இடுப்பில் கையை வைத்துக்கொண்டு, அப்பு விழிகள் வெறித்து, ரத்தம் நெற்றிக்கேற, சிறு மூச்சில் மார்பு விம்மி இரைக்க நின்றான். அம்மாவின் அழகிய முகத்தை - அவனைக் கண்டு அவனுக்கே மலரும் பூரிப்பை நினைத்தான். அவளையா சொன்னாள்! ஓடிப்போய் அந்த இந்துவின் தலையை இரு கைகளாலும் பற்றி, அவள் மண்டையைச் சுவர்மீது மோதி, கழுத்தை நெரித்து, கையை ஒடித்து . . .

"பயத்த மாவு வேணுமா அத்தே!" என்று அத்தையை இடைக்கட்டுக் கிணற்றண்டை நின்று இந்து விசாரிக்கும் குரல் கேட்கிறது.

பவானியம்மாளிடம் சொல்லலாமா . . . சை . . . போகிற நேரத்தில் . . . சை . . . என்ன இது? . . . நாக்கு எப்படித் துணியும்?

'படார், படார்' என்று சத்தம் போட்டு மீதி வேட்டிகளை உதறி மடித்துப் பெட்டிக்குள் எறிந்தான். "ஏண்டா! உனக்கு அவளும் சோறு

போட்டு, கஞ்சி கொடுத்து, நீ காய்ச்சலாகக் கிடந்தபொழுது தடவிக் கொடுத்தெல்லாம் செய்திருக்கிறாளே . . . அவளை இப்படிப் பங்கம் பண்ணுவானேன்? அத்தனை செய்ததை நினைத்து . . ."

உள்ளுக்குள் கேட்ட இந்தக் குரலைக் கேட்டுக் கண்ணை மூடிக்கொண்டான். அம்மா! அம்மா! என்று எப்போதும் வருகிற முகத்தை நினைத்து, அந்தக் குரலை அழுத்தி மிதித்தான். அம்மாவின் கண்ணை யாரோ பிடுங்கினாற்போலிருந்தது - அகத்தில் கண்ட அந்த முகத்தைப் பார்த்தபொழுது.

கை ஓடவில்லை. வெறித்துப் பெட்டியைப் பார்த்தான். மூடியிடுக்கில் நுழைந்து மறைந்த பாச்சையை விரட்டுவதற்காக வேட்டி, புத்தகம் எல்லாவற்றையும் கீழே எடுத்துப் போட்டான். காலிப் பெட்டியைக் குப்புறக் கவிழ்த்துத் தட்டினான். மறுபடியும் அடுக்க ஆரம்பித்தான்.

ஸ்நானத்தை முடித்துக்கொண்டு ஜபம் செய்து விட்டு வந்து, பவானியம்மாள்தான் அவனுக்குச் சாதம் போட்டாள். இந்து கிணற்றங்கரையில் அத்தையின் புடவையைக் கல்மீது அடித்துத் துவைக்கும் ஓசை கேட்டது. சாப்பிட்டு எழுந்து கையலம்பப் போனவனுக்கு முன்னால் 'டங்'கென்று ஒரு செம்பு ஜலம் கோபத்துடன் வந்து உட்கார்ந்தது. இந்துவின் கண் கலங்கியிருந்தது. இன்று பார்த்த இந்துவை அவன் ஒரு நாள்கூடப் பார்த்ததில்லை. பளபளக்கும் இமை மயிர். அழுது அதைத்த கன்னம். கண்ணில் நிமிர்ந்த அலட்சியம். வரம்புமீறிப் பேசிச் சூடு இழுக்கிற நாக்கு. செம்புமீது காட்டுகிற கோபம். இது புது இந்து. அவன் பார்த்தேயிராத இந்து. இந்து கண் கொள்ளாத அழகு. மனம் கொள்ளாத பிரியம் அது. பேச்சிலும் காரியத்திலும் சரி; அவள் பிரியத்தைக் காண்பிப்பதே தனி. அத்தனை பிரியமாக யாராலும் இருக்க முடியாது. அவள் கோபித்துக்கொள்வது - சுருதியைச் சட்டென்று மாற்றி உயர்த்தி வேதம் சொல்வது போலிருக்கும். முதலில் என்னவோ போலிருக்கும் திகைப்பாக; பிறகு இனிமையாக, பணியச் செய்வதாக இருக்கும்.

அதே இந்துதான் நிற்கிறாள் இங்கே! பார்வையில் என்ன அலட்சியம்! என்ன அவமரியாதை! 'சரி, கையலம்பிவிட்டுச் சட்டென்று போயேன்' என்று சொல்வதுபோல முகத்தை வைத்துக்கொண்டு துணி துவைப்பதை நிறுத்தி, காத்து நின்றாள். தர்மச் சோற்றைத் தின்றுவிட்ட கங்காணியைப் போல, ஒரு கணம் அப்பு அந்தப் பார்வையைக் கண்டு

கூனிக் குறுகினான். ஆத்திரம் வந்தது அவனுக்கு.

"சோற்றுக்கில்லாத இந்தப் பரதையைத் தீண்ட வந்தியே. இப்ப ஒரு நாழிகூட ஆகலியே" என்று உள்ளுக்குள் நிமிர்ந்து கொண்டான். மறுகணம் இந்த நிமிரல் மிக அற்பமான பாமர வஞ்சமாகப்பட்டது. 'இத்தகைய நினைவுதோன்றும் பாமரன் நானில்லை' என்று அவளிடம், தனக்கே உறுதிப்படுத்துவதுபோல, அவளைப் பார்க்காமலே, "வெயிலாயிருக்கே இந்து. எதுக்காக இப்ப துவைக்கணும்?" என்றான். பதில் வரவில்லை. படார். . . படார். . . என்று அத்தையின் புடவை கல்மீது விழும் ஓசைதான் வந்தது.

இரண்டேகாலுக்கு வண்டி. அரைமணி முன்னாலேயே வாசலில் வண்டி வந்து நின்றது. தாந்தோணி பந்தல் காலில் சாட்டையோடு வந்து நின்றான்.

"என்ன கவுண்டரே! யாருக்கு வண்டி?"

"ஸ்டேஷனுக்குப் போகணும்னு அம்மா பூட்டியாரச் சொல்லிச்சே."

அப்பு மீண்டும் கூசியவாறு பவானியம்மாளிடம் விரைந்தான்.

"என்ன அத்தே! தாந்தோணி வண்டி கொண்டு வந்திருக்கானே. என்னத்துக்கு இதெல்லாம்?" என்று வார்த்தை வராமல் தவித்தான்.

"உனக்கில்லேடா அப்பு, எனக்கு. நான் ஸ்டேஷனுக்கு வரப்போறேன். எனக்கு என்னமோ காத்தாடப்போகணும் போலிருக்கு."

அப்பு பதில் பேசவில்லை.

'என்னைக் கொண்டுவிடவா வருகிறாள்? பவானியம்மாளா!' . . . வெட்கி நின்றான்.

பவானியம்மாள் வண்டியில் ஏறிக்கொண்டு, அப்புவையும் ஏறிக்கொள்ளுமாறு பிடிவாதம் பிடித்தாள். உடம்பு, உள்ளமெல்லாம் குன்ற அப்பு ஏறிக்கொண்டான். வண்டி புறப்பட்டது.

தெரு திரும்பியதும், "சாமி எப்ப மறுபடியும் வருமோ?" என்று தாந்தோணிக் கவுண்டர் கேட்டார்.

"சாமி எத்தனை நாள்தான் படிப்பார்? படிச்சிண்டே இருந்தா, எப்ப சம்பாதிக்கிறது, குடும்பம் பண்றது?" என்றாள் பவானியம்மாள்.

"ஆமாம்மா! சாமி கண்ணாலம் கட்டிக்கறப்ப காயிதம் போடுவாங்களா! கிளவனும் நாலு ஊரு பார்க்கலாமுங்களே."

"கேட்டுக்கோடா அப்பு! கலியாணம் நிச்சயமானா தாந்தோணிக்குக் கடுதாசி போட மறந்துடாதே."

"சாமிக்கு மறக்காது. விரைசாக் கண்ணாலம் கட்டிக்கணும் சாமி, நான் வரணும்னா. எனக்கு இப்பல்லாம் மயக்கம் வருது, மூச்சு வாங்குது."

"இதையும் கேட்டுக்கோடா அப்பு."

"சாமி நேற்றுக் கொடுத்துச்சே, அதுதான் இப்ப உடுத்தியிருக்கேன். கண்ணாலத்துக்கு, சேலம் சேப்புக் கரையா எடுக்கணும்."

"சேப்புக் கரையென்ன? கவண்டனுக்கில்லாமியா? - சரிகைச் சீர்போட்டு . . ."

தாந்தோணி சிரித்தார். "அம்மாதான் பேசறீங்க! சாமிவாயே தொறக்கலியே."

"உனக்கு இப்ப கலியாணம் பண்ணணும்னா வெக்கப்பட மாட்டியா நீ, ஏன் கவண்டா?"

"அது சரி . . ." என்றார் கவுண்டர்.

வண்டி சாலையில் ஏறியதும் மறுபடியும் பேசினார் கவுண்டர். "சாமி வெள்ளென எழுந்திரிச்சு, முளுகி, பூசையெல்லாம் பண்ணி, கொல்லைக் காட்டுக்கு வந்திடும் மம்முட்டியும் கையுமா . . . தென்னந் தோப்பு கறிகாய்க் கொல்லையெல்லாம் நான் பார்த்துக்கிறேன் சாமி."

"வேற யார் பார்த்துப்பாங்க? நீதான் பார்த்துக்கணும்" என்றான் அப்பு.

"உடம்பு முடிஞ்சா இன்னும் எத்தினையோ செய்வேன் சாமி."

"இப்ப உங்க அண்ணன் மவனைக் கூப்பிட்டுண்டு வந்து

செய்யேன்."

"அவன் கெடக்கறான் - சோம்பேறி, களவாணிப்பய! எல்லாம் நான் பாத்துக்குவேன். சாமி மம்முட்டி, களை கொட்டைப் பிடிச்சி செஞ்சதை நான் பார்த்திருக்கிறேனா, சும்மாவா! இத்தினை உசரத்துக்கு சாமி இங்கு வரப்ப எனக்கு அம்பது வயசு சாமி; இப்ப என்ன ஆச்சு?"

"பதினாறைக் கூட்டிச் சொல்லேன்."

"அம்மாவுக்கில்ல சொல்றேன்." என்றார் தாந்தோணி.

"என்ன கவுண்டரே!"

"நான் அம்மாவா இருந்தேனுங்க, சின்னம்மாவைச் சாமிக்குக் கட்டிப்போட்டிருப்பேன் இந்நேரம்."

"என்ன கவுண்டரே உளர்றே?" என்றான் அப்பு.

"உளரலீங்க, அப்படித்தான் பண்ணுவேன்."

"சரி சரி, பேசாம இரு" என்று கத்தரித்தான் அப்பு.

பவானியம்மாள் பேசாமல் எங்கோ பார்த்தாள். எப்போதோ வரும் புன்னகை, இப்போது வந்திருந்தது. கவுண்டர் சொன்னதைக் கேட்டு, அது மிரண்டு ஓடிவிட்டது. மீண்டும் அந்தச் சோகக்களை பாசி மாதிரி புன்னகை இருந்த இடத்தை அடைத்துக்கொண்டது.

பிறகு, யாரும் பேசவில்லை. ஸ்டேஷன் வந்துவிட்டது. பவானியம்மாள் பத்து ரூபாய் நோட்டை எடுத்து, டிக்கெட் வாங்கிக்கொள்ளச் சொன்னாள் அப்புவிடம். அப்பொழுதும் யாரும் பேசவில்லை.

"அப்பா, அம்மா எல்லார்கிட்டவும் சொல்லு" என்று உபசாரமாக ஏதோ சொல்லிவிட்டுப் பேசாமல் நின்றாள் பவானியம்மாள்.

வண்டி வந்தது. ஸ்டேஷனில் நின்றபடியே குனிந்து பவானியம்மாளின் காலைத்தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டான் அப்பு. நிமிராமல் வண்டியில் ஏறிவிட்டான். வண்டி நகர்ந்தது.

கைகாட்டி தாண்டிவிட்டது. சாலையில் இருந்த கடைகளைக் கடந்து சென்றது. சாலைக்கு அப்பால் தெரு தெரிந்தது. என்ன இது! யார் அது! வெள்ளை நிறம், கறுப்புப் புடவை, வெள்ளை ரவிக்கை, சாலைக்கும் ரயில் பாதைக்கும் இடையே - இந்துவா? இந்துதான்! இந்துவேதான்!!

அப்பு இடத்திலிருந்து எழுந்து நின்று, ஜன்னலுக்கு வெளியே தலையையும் மார்பையும் விட்டுக்கொண்டு கையை ஆட்டினான். இந்துவைக் கடக்கும்போதே வண்டி வேகம் பெருகிவிட்டது. இந்து சிரித்தாள். கண்ணிமை பளபளவென்று கலங்கினது, இந்தத் தூரத்திலும் வேகத்திலும் தெரிகிறது. சிரிக்கிறாளா? பதறுகிறாளா? அழுகிறாளா? . . . எல்லாமாகத்தான் தோன்றிற்று. இந்து குள்ளமாகிக் கொண்டே வந்தாள். வழி வளைந்து, ஒரு கருப்பங் கொல்லை எல்லாவற்றையும் மறைத்துவிட்டது.

## 6

எங்கே போகிறோம், எதற்காகப் போகிறோம் - என்ற நிச்சயம் ஒன்றும் இல்லாததுபோல் ரயிலில் உட்கார்ந்து, ஓடிக்கொண்டிருந்தான் அப்பு. பள்ளிக்கூடத்துப் பையனைப் போல - குழந்தையைப் போல - ரயிலின் ஓட்டத்தையும் எதிரே வளையமிட்டு வரும் வயல்களையும் கூடவரும் அடிவானத்து மரங்களையும் தந்திக்கம்பி வளையங்களையும் ஏறுகிறவர்களையும் இறங்குகிறவர்களையும் வண்டியில் கத்திக் கத்திப் பேசுகிற கூட்டத்தையும் பார்த்துச் சுவைத்துக்கொண்டே போனான். நடுநடுவே ஏதோ கவலை அரிக்கும். அதோ வயலில் உழுது கொண்டிருக்கிறார்கள். உழுகிறது பெரிய ஆனந்தம். படிப்பு, நெட்டுரு என்று ஒரு கவலையும் கிடையாது. வேலையைச் செய்துவிட்டு, வலியையோ பலனையோ தின்றுகொண்டிருக்கலாம். ஸ்டேஷனில் வண்டி நிற்கிற சமயத்தில், சாவி வைத்திருக்கிற பிரம்பு வளையத்தை டிரைவரிடம் நீட்டுகிறான் ஒருவன். ஒரு கவலையில்லா வேலை. மூளையை அதிகமாகச் சிரமப்படுத்தாத வேலை. ஏன் - இத்தனை நாட்களை, இத்தனை மாதங்களை, இத்தனை வருடங்களை - நாம் என்னத்தையோ உருப்போட்டு வீணாக அடித்தோம்?

எதிர்ச்சாரியில் ஒரு வரிசை தள்ளி அந்தண்டை வரிசையில் - யாரோ திருச்சியில் படிக்கிற கல்லூரிப் பையன்கள் - ஆசிரியர்களைப்பற்றி, பாடத்தைப்பற்றி என்னென்னவோ பேசிக்கொண்டு போகிறார்கள்? படிப்பு முடிந்ததும், குமாஸ்தாவாகவோ, அதிகாரியாகவோ, வாத்தியாராகவோ,

எப்படியாவது பிழைக்கப் போகிறார்கள். நாம் என்ன செய்யப் போகிறோம்? தர்ப்பையும் சமித்தும் தூக்கிக்கொண்டு கல்யாணம், பிள்ளையார் சதுர்த்தி, சிரார்த்தம் என்று லௌகீகர்களுக்குப் புரோகிதம் பண்ணி வயிற்றைக் கழுவப் போகிறோமா? அதற்குக்கூட ஒரு வருஷமாவது தனியாக மறுபடியும் மந்திரங்களை நெட்டுருப்போட்டுப் பயிற்சி பெற்றாக வேண்டும்! மற்ற பிள்ளைகளை இங்கிலீஷ் படிப்புப் படிக்கவைத்த அப்பாவுக்கு என்னை மட்டும் ஏன் இப்படிப் பாடசாலையில் வேதம் நெட்டுருப்போட அனுப்பவேண்டும் என்று தோன்றிற்று?

அம்மாவோடும் அப்பாவோடும் இருக்கப் போகிறோம் என்ற ஆவலில் - தீனி தின்னப்போகும் அந்திச் சவாரி மாடு போல - மனது சிலசமயம் பறந்தது. ஆனால், பாடசாலையையும் பவானியம்மாளையும் நினைக்கும்போது மனத்தில் வெறிச்சோடிற்று. பவானியம்மாளும் இந்துவும்தான் எனக்கு அம்மாவும் தங்கையும். வாத்தியார்தான் எனக்கு அப்பா. கேசவபட்டன், வாசு, ஜகதீசன், காமேச்வரன் - இந்தச் சகபாடிகள்தான் எனக்கு அண்ணன் தம்பிகள். பாடசாலைதான் என் வீடு. பாடசாலைக் கொல்லையில் மண்வெட்டி பிடித்தது, உழைக்கிறதுதான் என் கடமை. எனக்குச் சொந்தம், சொத்து, உறவு எல்லாம் பாடசாலைதான்; பவானியம்மாள்தான். இத்தனை நாளாகச் சாப்பிட்டது, உடுத்திக்கொண்டது - எல்லாம் அவள் கை கொடுத்தது. அவள்தான் அம்மா. எதற்காக இவற்றையெல்லாம் விட்டுவிட்டு எங்கோ போய்க்கொண்டிருக்கிறோம் என்று பிரமித்தான். வரும் நாட்கள் அவன் நெஞ்சில் ஒட்டவில்லை. நேற்று, முந்தாநாள், அதற்கும் முந்தின ஆயிரம் நாட்கள் -இவை எல்லாம்தான் அவன் உள்மனதில், உருகி இழைந்து உரிக்க முடியாமல் கிடந்தன.

மனதைப் புரட்டிப் புரட்டிச் சோர்ந்துவிட்டது. திருச்சி வந்ததும், பவானியம்மாள் பையில் வைத்திருந்த ரஸ்தாளிச் சீப்பில் இரண்டு பழங்களை உரித்துத் தின்று, ப்ளாட்பாரத்தில் ஒரு உப்புமா, காப்பியை வாங்கிச் சாப்பிட்டுவிட்டு, ப்ளாட்பாரத்துக்கு வெளியே பட்டணம் போகிற வண்டிகளோடு இணைப்பதற்காகக் கிடந்த பெட்டியில் ஏறிப் படுத்துக்கொண்டான். பிற்பகல் வெயிலின் காங்கை பட்டு உடல் அயர்ந்து, கண் சோர்ந்து, இமை அழுந்திற்று. உறங்கிவிட்டான்.

சத்தம் கேட்டுக் கண்ணை விழித்தபொழுது, கீழே தள்ளி விடுவது போலிருந்தது. 'கிரீக்' என்று சத்தமிட்டது. ஒரு குலுக்கோடு நின்றுவிட்டது. யார் யாரோ ஓடும் சத்தம் கேட்டது.

"என்ன ஸ்டேஷன் சார்?"

"சீரங்கம்" என்று கீழேயிருந்து பதில் வந்தது.

"சீரங்கமா!" என்று பரபரவென்று மேல் தட்டிலிருந்து கீழே இறங்கினான் அப்பு. ஜன்னலில் நின்று எட்டிப் பார்த்தான். 'பூ! பூ!' என்று கத்தினான். பூக்காரி வந்ததும் எட்டணாவுக்குக் கதம்பமும், எட்டணாவுக்கு மல்லிகைச் சரமும் வாங்கிப் பையில் வைத்து, மறுபடியும் மேலே ஏறினான். அப்பாவுக்குப் பூஜைக்கு உதவும். அம்மாவுக்கும் தங்கைக்கும் மன்னிக்கும் தலையில் வைத்துக்கொள்ளவும் கொடுக்கலாம். சீரங்கம் மல்லிகைப் பூ என்றால் அம்மாவுக்குக் கொள்ளை ஆசை. இரண்டு வருடங்களுக்கு ஒருமுறை ஊருக்குப் போகும்போதெல்லாம் சீரங்கம் ஸ்டேஷனில் பூ வாங்குவது ஒரு வழக்கமாகிவிட்டது.

தலைமாட்டிலிருந்த பையிலிருந்து சற்றைக் கொருமுறை - வாசனை காற்றாகத் தவழ்கிறது. இரவு தேவியைப் போற்றும் வேத வரிகளை மனதிற்குள்ளே சொன்னான். 'கூடடையும் பறவைபோல வீடு திரும்புகிறேன். ஆண் ஓநாய்கள், பெண் ஓநாய்கள் வந்து என்னை இம்சிக்காமல் என் வழியைக் காத்தருள்' . . . நம்முடைய ஊரில் ஓநாய் ஏது? இந்து யார்? ஓநாயா, மனுஷியா? ரயிலில் போகும்போது எந்த ஓநாய் நம்மை மறிக்கப்போகிறது?

அந்த வரிகளை முழுவதும் அவனால் சொல்ல இயலவில்லை. நடுநடுவே மனம் எங்கோ ஓடிக்கொண்டேயிருந்தது. ஏழெட்டுத் தடவை மீண்டும் மீண்டும் அடியிலிருந்து தொடங்கி, இறுதிவரை சொல்லிவிட முயன்றான். ஆனால், அவனுடைய உயரத்திற்குப் போதாமல் நெருக்கின அந்தப் பலகையையும் மீறி, அவன் நினைவு குவிந்து, சுழலுக்குள் ஓடி இறங்குவது போலத் துயிலில் ஒடுங்கிற்று.

## 2

தண்டபாணிக்கு நான்கு மணிக்குமேல் படுக்கை கொள்ளாது. ஆனால் விழிப்புக் கொடுத்ததும் படுக்கையைச் சுருட்டிவிட மாட்டார். மல்லாந்தவாக்கில் நட்சத்திரங்களைச் சிறிது நேரம் பார்த்துக்கொண்டிருப்பார். வலியன் குருவிகூட எழுந்திருக்காத நேரம் அது. கூப்பிடு தூரத்தில் கடல் கூப்பாடு போடுவதைச் சிறிது நேரம் கேட்டவாறே படுத்திருப்பார். கண் நன்கு தெளிந்ததும் எழுந்து படுக்கையிலே உட்காருவார். கண்ணை மூடிக்கொள்வார். விஷ்ணு சகஸ்ரநாமத்தை ஆரம்பித்து முடிப்பார். வேதத்திலிருந்து ருத்ரமோ, சமகமோ ஒரு ஆவர்த்தனம் சொல்லி முடிப்பார். 'சிவ சிவ சிவ' என்று சிவ நாமத்தை இரண்டாயிரம் தடவை சொல்லுவார். பிறகு, படுக்கையைச் சுருட்டி உள்ளே கொண்டு வைத்துவிட்டு, மாடியை விட்டு இறங்குவார்.

"கதவைச் சாத்திக்கோ" என்று சொல்லிக்கொண்டே செருப்பை மாட்டி, கதவைப் பின்னால் சாத்திக்கொண்டே வாசலில் இறங்குவார். சந்தில் படுத்திருக்கிற எருமை, பசுக்களையும் பால் கறக்கிறவர்கள் பாதையில் வைத்திருக்கிற துவரம் பொட்டு, உளுந்துப் பொட்டுக் கூடைகளையும் தாண்டிக்கொண்டு, பார்த்தசாரதி கோவில் கோபுரத்தை அண்ணாந்து ஒரு கும்பிடு போட்டுவிட்டு, மதில் சுவரோடு நடப்பார். கோவிலை வலம் வந்தவாறு இன்னொரு சந்து வழியாகக் கிழக்கே நடந்து கடற்கரைச் சாலையில் ஏறுவார். இஷ்டமிருந்தால் மணலை அரைத்துக்கொண்டே அலைவரை போய்ச் சற்று நிற்பார். இல்லாவிட்டால் சாலையிலே வடக்கே நடந்து, இரும்புப் பாலம் வரையில் நடப்பார்; திரும்புவார். மீண்டும் தெற்கே நடந்து ஐஸ் ஹவுஸைக் கடந்து செல்வார். நடுநடுவே வானில் எரிகொள்ளி ஏதாவது பளிச்சென்று ஓடி அணைவதைப் பார்த்துச் சற்று நிற்பார். அப்போது வலியன், தினைக் குருவிகள், நாகணவாய் எல்லாம் கூட்டமாகக் கூவி இரையத் தொடங்கியிருக்கும் - தென்னந்தோப்புகளிலும் மணலோரமாக வளர்க்கப்பட்டுள்ள ஓரிரு மரங்களிலும். இந்த நட்சத்திரங்கள், பட்சியொலிகள், கடலோசைகள், எல்லாவற்றையுமே உள்ளுக்குள்ளே இருக்கும் பூஜைப் பீடத்தின் மீது மலர்களாகத் தூவிவிடுவார் அவர். அவருக்கு அப்படித்தான் தோன்றும். பூஜை மண்டபத்தைச் சூழ்ந்த படுதா

மாதிரியும் வாத்யங்கள் மாதிரியும், ஆகாயமும் இவ்வொலிகளும் தோன்றும் அவருக்கு. அப்படியே நேராக நடந்து லாயிட்ஸ் ரோடுக்குள் நுழைந்து, திருவல்லிக்கேணி ஹைரோடு வழியாக அவர் வீட்டுக்கு வரும்பொழுது கிழக்கு வெளுத்திருக்கும்; அல்லது நன்றாக வெளிச்சம் படர்ந்து தயிர்க்காரர், இடியாப்பக்காரர், காய்கறி கை வண்டிகளின் நடமாட்டங்கள் ஆரம்பித்திருக்கும். குருவிகள் அடங்கி, காக்கைகளின் கரையல் தொடங்கியிருக்கும். உள்ளே நுழைந்ததும், பல் தேய்த்து, குளித்து, பூஜையை நாலைந்து நிமிஷத்திற்குள் முடித்துக்கொண்டு, மாடி அறையில் போய் உட்கார்ந்து பத்திரிகை படிப்பார். ஆனால், முக்காலும் பத்திரிகை படிக்க நேரமிராது. அவரிடம் ஜோஸ்யம் கேட்க யாராவது வந்திருப்பார்கள். ஜாதகக் கட்டோடு - பெண்ணைப் பெற்றவர்களும் பிள்ளையைப் பெற்றவர்களும் வருவார்கள். ஊருக்குப் போக, கடை தொடங்க, முகூர்த்தம் வைக்க, ஆஸ்பத்திரியில் அறுவைச் சிகிச்சைக்குப் போக - இப்படி எதற்காவது நல்ல நாள், வேளை குறித்துக் கொண்டு போவதற்காக வருவார்கள். எட்டரை மணிக்கு இந்தக் கடையைக் கலைத்துவிட்டு, கீழே போய்ச் சாப்பிட்டுவிட்டு, ஒரு சட்டையை மாட்டிக்கொண்டு பஸ் ஸ்டாண்டுக்குப் போய், பஸ்ஸில் ஏறி டவுனுக்குப் போவார். அங்கே ஒரு பெரிய அச்சுக்கூடத்தில் அவருக்கு ப்ரூப்ரீடர் வேலை. அந்த வேலைக்கு அங்கே பத்துப்பேருக்கு மேலிருந்தார்கள். தண்டபாணியை அவர்களுக்கு மேற்பார்வை மாதிரி போட்டிருந்தான் முதலாளி. முதலாளி ஒரு கண்ணாடி அறையில் ஆபீஸ் நடத்துவான். மானேஜருக்கும் முக்கியக் கணக்கருக்கும் இன்னும் இரண்டு மூன்று பேருக்கும் தனித்தனி அறை கொடுத்திருந்தான். தண்டபாணி அந்த இரண்டு மூன்று பேர்களில் ஒருவர். ஸம்ஸ்கிருதம், ஹிந்தி இரண்டையும் அவர் பார்த்துக் கொள்ளவேண்டும் என்று பெயர். ஆனால், தெலுங்கு, தமிழ், இங்கிலீஷ் எல்லாவற்றையும் அவருக்குப் பார்க்கத் தெரியும். எதிரே ஒரு நாற்காலியில் ஒரு ஆள் உட்கார்ந்திருப்பான்; வாசிப்பான்; அவர் திருத்துவார். அவன் எழுந்துபோன கையோடு இன்னொருவன் வருவான், வாசிப்பான்; அவர் திருத்துவார். நடுநடுவே கத்துவார். "உம்ம நாக்கிலே தர்ப்பையைப் போட்டுப் பொசுக்க. இந்த உச்சரிப்பெல்லாம் சரியாப் பண்ணித்தொலையுமேன். சப்ரஜிஸ்தார் ஆபீசிலே ஈயடிக்கிற வேலையா இது? உன்னை நம்பி ஆயிரக்கணக்கிலே முதலைப் போட்டிருக்கானே, தண்டமே" என்று பொசுக்குவார்.

"இந்த நொண்டிக் குதிரையை வச்சுண்டு இன்னும் எத்தனை வருஷம் சவாரி பண்ணணுமோ ஈச்வரா!" என்று சலித்துக்கொள்வார்.

"ஸாரி, குருஜி, கண் சரியாத் தெரியலே."

"ஓஹோ ஹோ, பொட்டைக் குதிரையா! நொண்டிக் குதிரைன்னு சொல்லிப்பிட்டேன், ஸாரி" என்பார் தண்டபாணி.

"கண்ணாடி மாத்தணும் குருஜி, பணம் இல்லே."

"எத்தனை வேணும்?"

"அது இருபது ரூபா ஆகுமே."

டங். . . டங். . . என்று மேஜை மணியைத் தட்டுவார் தண்டபாணி, ஒரு ஆள் ஓடிவருவான். "பராங்குசம் கணக்கிலே எழுதச் சொல்லி, இருபது ரூபா வாங்கிண்டு வா முதலாளி கிட்டே."

ஐந்து நிமிஷத்திற்குள் ரூபாய் வந்துவிடும். "பத்து மாசத்திலே சம்பளத்தில் அட்ஜஸ்ட்டாகும். எடுத்துக்கும் ரூபாயை. நாளைக்கு வேற லகானை மாட்டிண்டு வாரும். இன்னிக்கு மிச்ச வேலையை நான் பாத்துக்கறேன்."

"ஐயையோ, குருஜி இதை முடிச்சுட்டுப் போறேன்" என்ற ஒரு கூழைக்கும்பிடு - நன்றி இளிப்பு.

"ஐயோச் சத்தம் போடாதே. இன்னிக்கு வெள்ளிக் கிழமை வேறே! நாளைக்கு வான்னா எழுந்துண்டு போயிடணும்னேன்!"

"குருஜி . . ."

டங். . . டங். . . என்ற மணி . . . ஆள் எட்டிப் பார்க்கிறான்.

"ஆஞ்சனேயலுவை வரச்சொல்லு - ப்ரூபை எடுத்துண்டு"

வேறு வழியில்லாமல், வரப்போகிற ஆஞ்சனேயலுவுக்கு நாற்காலியைக் காலி செய்து கொடுத்துவிட்டு, "தாங்ஸ், குருஜி" என்று பராங்குசம் மனமில்லாமல் வெளியே நழுவுகிறார்.

"முதலாளி பார்க்கணுமாம். ஒரு அஞ்சு நிமிஷம் வந்து போகலாமான்னு கேட்டுவரச் சொன்னாங்க" என்பான் ஒரு குமாஸ்தா வந்து. "ம்" என்பார் அவர். எதிர் நாற்காலி ஒழியும். சற்றுக் கழித்து

முதலாளி வருவார். பேசவேண்டியதைப் பேசிவிட்டுப் போவார்.

மாலை ஐந்தரை மணிக்கு மணி அடிக்கும். ஆட்கள்போன பிறகு தண்டபாணி வாசலில் வந்து நிற்பார். முதலாளி வருவார். காரின்பின் கதவைத் திறந்துவிடுவார். தண்டபாணி ஏறிக் கொண்டதும், முன்னால் உட்கார்ந்து காரை ஓட்டுவார். பாரீஸை நோக்கித் திரும்பி, மன்றோ சிலை வழியாக, மவுன்ட் ரோடு வழியாக, நுங்கம்பாக்கம் சென்று, அங்கே ஒரு ஏக்கர் தோட்டமும் வீடுமாக மிகப் பெரிய மனிதர்கள் குடியிருக்கும் ஒரு சாலையில் நுழைந்து, ஒரு பெரிய தோட்டத்திற்குள் புகுந்து, அங்கேயுள்ள ஒரு மாளிகைக்கு முன்னால் நிற்கும். ஏற்கெனவே ஏழெட்டுக் கார்கள் அங்கே வந்திருக்கும். தண்டபாணி இறங்குவார். முதலாளி இறங்குவார். படி ஏறி வெளி வராந்தாவைக் கடந்து, நடு ஹாலைக் கடந்து, வலப் பக்கத்தில் ஒரு பெரிய அறைக்குள் போவார்கள். அங்கே கீழே பெரிய ஜமக்காளம் விரித்திருக்கும். அதன் முன்னால் ஏழெட்டுப் பேர்கள் உட்கார்ந்திருப்பார்கள். மேஜைக்குப் பின்னால் தண்டபாணி உட்கார்ந்துகொள்வார். எதிரேயிருப்பவர்களுக்குப் புன்னகையோடு கும்பிடு போடுவார். அவர்கள் திருப்பிக் கும்பிடுவார்கள். முதலாளி உட்கார்ந்துகொள்வார்.

"ஆரம்பிக்கலாமா?" என்பார் தண்டபாணி.

சபை தலையசைக்கும்.

கண்ணை மூடிக்கொள்வார் தண்டபாணி. தலை மெதுவாகக் கீழே குனிந்துகொண்டே போகும். மார்பெலும்பில் முகவாய் நுனிபட்டு அப்படியே நிற்கும். பத்து விநாடி கழித்துத் தலை நிமிரும். கண் திறக்கும். தட்சிணாமூர்த்தி மீது செய்யுட்களை உரக்கச் சொல்ல ஆரம்பிப்பார் தண்டபாணி. மற்றவர்களும் சேர்ந்துகொள்வார்கள்.

நாயமாத்மா ப்ரவசனேன லப்யஹ

ந மேதயா ந பஹுநா ச்ருதேன -

யமேவைஷ வ்ருணுதே தேன லப்யஹ

தஸ்யைஷ ஆத்மா வ்ருணுதே தனூம்ஸ்வாம்.

"வேதங்களைப் படிச்சோ, புத்தியாலோ, சாஸ்திரங்களைப் பல வகையா விசேஷமாய்க் கேட்டறிஞ்சோ, ஆத்மாவை அடைஞ்சுட

முடியாது. ஆத்மாதான் ஆத்மாவை வரிச்சுப் பிரார்த்திச்சு அடையணும். அப்பதான் ஆத்மா தன்னுடைய உண்மையான சொரூபத்தை, தன் பர ஸ்வரூபத்தைக் காமிச்சுக் கொடுக்கும். விசிஷ்டாத்வைதிகள் இன்னும் கொஞ்சம் அழகா அர்த்தம் சொல்லியிருக்கா இதுக்கு. பரமாத்மாவே நம்முள்ளே இருக்கிற ஆத்மாவை வரிச்சுப் பிரார்த்திக்கிறானாம். அப்படிப் பரமாத்மாவே ஆசையா நம்ம ஆத்மாவை வேண்டி விரும்பறதாயிருந்தால் - ஒரு பிரியம் ஏற்பட்டுத்தானே - அந்தமாதிரி செய்யணும்! அப்படிப் பிரியம் உண்டானதுக்கு என்ன காரணம்? இந்த ஆத்மா பரமாத்மா மேலே பிரியம் வச்சிருக்கும். அதனாலே பரமாத்மாவுக்கு இந்த ஆத்மா மேலே பிரியம் உண்டாகி, தன் சொரூபத்தைக் காமிச்சுக் கொடுக்கிறதுன்னு விசிஷ்டாத் வைதிகள் அர்த்தம் சொல்ற வழக்கம் . . ."

வேகமாக, எதிரே உட்கார்ந்திருக்கிறவர்களைப் பார்த்தும் பாராமல் சொல்லிக்கொண்டே போவார் தண்டபாணி. ஒவ்வொரு சொல்லாகப் பொருள் சொல்லிக்கொண்டே போவார். திடீர் என்று நிறுத்துவார். "லக்ஷ்மணய்யர்வாள்! 'ஸ்வாம் தானூம் வ்ருணுதே' என்றால் என்ன அர்த்தம்னு கொஞ்சம் திருப்பிச் சொல்ல முடியுமோ?" என்பார். லக்ஷ்மணய்யர் விழிப்பார். சிறிது நேரம் மௌனம். . . "மறுபடியும் சொன்னாத்தான் புரியும் போலிருக்கு" என்பார் லக்ஷ்மணய்யர்.

"எதுக்காகச் சொல்றது? நீங்க ஹைக்கோர்ட் ஜட்ஜ், உத்யோகம் பண்ற இடத்திலே, வக்கீல் சாக்ஷியை க்ராஸ் பண்ணறபோது, நீங்கன்னா எல்லாரையும்விடக் கவனமாக் கேக்கணும். மறுபடியும் 'க்ராஸ்' பண்ணுங்கோன்னு நீங்க கேக்க முடியுமோ? நீங்க சொல்றதைக் கேட்டு வக்கீல் மறுபடியும் க்ராஸ் பண்ணினா. சாக்ஷி முழிச்சிண்டு உஜாராயிடுவானேய்யா. எப்படி உண்மை வெளியிலே வரும்? இனிமேலாவது கவனமாக் கேளுங்கோ. அடுத்த மந்திரத்திலே வரப்போறது. பல விஷயங்களிலே புத்தியைப் போட்டுச் சிதற அடிக்கிறவன் ஆத்மாவை அடையமுடியாதுன்னு அடுத்த மந்திரம் சொல்லப் போறது. அதுக்காகத்தான் சொன்னேன். நீங்களே இப்படியிருந்தா, பதினாயிரக் கணக்கிலே ஊரெல்லாம் டெண்டர் கொடுத்துட்டு அலைபாயறாரே எங்க முதலாளி, அவர் எப்படி இருப்பார்? சாந்தமா, ஒரு மனசா கேக்கணும் ஸ்வாமி. ஏதோ வயசான காலத்திலே பொழுது போகணும்னா மெரினா பீச்சிலே கூட்டம் போட்டுப் பேசறாளே, அங்கே போய்க் கேட்கலாம். கிளப்பிலே சீட்டாடலாம். அங்கேகூடக் கவனமில்லாட்டா, காசு போயிடும். சரி, உங்களுக்காக மறுபடியும்

சொல்றேன். கேளுங்கோ" என்று மறுபடியும் பழையதை விளக்குவார் தண்டபாணி.

சிரிப்பார்கள். வாயைப் பிளந்து கேட்பார்கள். பிரமித்துப் போய்க் கேட்பார்கள். 'ஆகா' என்பார்கள். வெசவும் வாங்கிக்கொள்வார்கள். ஏனெனில் சில சமயம் அவர் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாவிட்டால் வெசவு வாங்கிக்கொள்ளும் வாய்ப்பும் வருவதுண்டு. "இந்த ஞானச் சூன்யங்களுக்குச் சொல்லிக்கொடுக்க வந்தேனே. பேரே சொல்றதே, சீப் கமர்ஷியல் சூப்ரண்டுன்னு. வியாபாரம் பேரிலேயே இருக்கு. உங்களுக்கு வேதாந்தம் எப்படிய்யா மண்டையில் ஏறும்?" என்று தண்டபாணி தன் மண்டையில் இரண்டு போட்டுக்கொள்வார். சில சமயம், எண்ணெய் தேய்த்துக்கொள்கிறவன் மண்டையில் தட்டிக்கொள்கிற சத்தம் கேட்கும். அதைப் பார்த்து வாய்விட்டுச் சிரித்தால் இன்னும் பெரிய வெசவாகக் கிளம்பும். அவ்வளவையும் தெரியாத புன்னகையுடன் சகித்துக்கொண்டிருப்பார்களே தவிர, "நான் ஜட்ஜ், நான் பிரின்ஸ்பால், நான் இந்த பாங்க் சேர்மன். என்னமோ பள்ளிக்கூடத்துப் பையன் மாதிரி விரட்டுகிறீரே?" என்று அர்த்தம் தொனிக்கும் அளவுக்குப் பேசவோ, பார்க்கவோகூட மாட்டார்கள் அந்தச் சீடப்பிள்ளைகள். கடைசியில், பாடத்தை முடித்து, "ஓம் சாந்திஹ் சாந்திஹ் சாந்திஹி" என்று எழுந்துகொள்வார்கள். அதிகமாகக் கத்தின நாட்களில் எல்லோரும் கலையும்பொழுது, "பாடம் சொல்லிக்கொடுக்கிறவன், சொல்லிக்கிறவன் இரண்டு பேரையும் பரமாத்மாதான் காப்பாத்துறான். இரண்டு பேருக்குள்ளேயும் மனஸ்தாபம், துவேஷம் இருக்கப்படாது" என்று சமாதானம் செய்து எல்லோரையும் சிரிக்கவைத்து, தானும் சிரித்துக்கொண்டே காரில் போய் ஏறுவார் தண்டபாணி. முதலாளி அவரைத் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோவில் வாசலில் கொண்டுவிட்டுப் போவார். தண்டபாணி உள்ளே போய்த் தரிசனம் செய்துவிட்டுவந்து சந்துகளில் நுழைந்து வீட்டுக்குப் போகும்போது மணி எட்டரைக்கு மேலாகியிருக்கும். எல்லாச் சென்னை நகரத் தெருவீடுகள் மாதிரிதான் அதுவும். படி ஏறியதுமே கம்பிபோட்டு மறைத்த நீளத்திண்ணை, வாசல் நிலைக்கு இரண்டு பக்கமும் இரண்டு அறைகள். வலது அறையில் அவருடைய மூத்த பையன் - கல்லூரியில் ஆசிரியர் வேலை பார்ப்பவன் - யாரோ இரண்டு, மூன்று பையன்களுக்கு ட்யூஷன் சொல்லிக் கொடுத்துக்கொண்டிருப்பான். இடது அறையில் கடைசிப் பையனும் பெண்ணும் படித்துக் கொண்டிருப்பார்கள். கூடத்தில் மாட்டுப் பெண் - கல்லூரி ஆசிரியரின் மனைவி - ஊஞ்சலில் லேசாக ஆடிக்கொண்டே, மைத்துனரும் நாத்தனாரும் எதிர் அறையில்

படிப்பதைப் பார்த்தவாறு உட்கார்ந்திருப்பாள்.

மாமனாரின் செருப்புச் சத்தத்தைக் கேட்டு அவள் ஊஞ்சலை விட்டு எழுவதற்கும் தண்டபாணி உள்ளே வருவதற்கும் சரியாயிருக்கும். தண்டபாணிக்கு அவள் உருவத்தைப் பார்த்தவுடன், ஏதோ பனிச் சாரலிலிருந்து கதவைச் சாத்தி வெதவெதவென்று உள்ளே வந்துவிட்டதுபோல ஒரு அமைதி சட்டென்று மார்பில் வந்து அமரும். மெலிந்த உடல். பச்சை நரம்போடும் மஞ்சள் பழுப்பு மேனி, கூர்ந்த மூக்கு, கூர்ந்த மோவாய், முதுகில் லேசாக ஒரு வில்; சதைப் பிடிப்பில்லாத ஒரு உடல். கண்ணில் ஒரு குழந்தைத்தனம். எதையும் ஆழமாகப் பார்க்காத, உள்ளதை உள்ளபடி பார்த்து, தோற்றமே உள் என்றும் நினைத்துக்கொண்டுவிடும் அது. ஊஞ்சலை விட்டு எழுந்தவள் அவர் கால் அலம்புவதற்காக முற்றத்துத் தொட்டியிலிருந்து ஒரு சொம்பில் நீர் மொண்டு வைக்கும்வரையில் அவர் பார்த்துக்கொண்டேயிருப்பார். காலை அலம்பிக்கொண்டே, "அம்மா கோயிலுக்குப் போயிருக்காளாக்கும்?" என்பார்.

"ரண்டாம் காலப் பூஜை பார்க்கப்போறேன்னு சொன்னார்" என்று சொல்லிக்கொண்டே அடுக்களையண்டை போய் விபூதியும் பாத்திரமும் கொண்டு வைப்பாள் அவள்.

"சரி, வரட்டும். நீ இலையைப் போடு" என்பார் அவர். ஜபம் முடிவதற்குள் இலைகள் போட்டுத் தயாராயிருக்கும். கல்லூரி ஆசிரியர், மூன்றாவது பையன், மூன்றாவது பெண், எல்லோரும் கூடத்திற்கு வந்து, இலைமுன் உட்காருவதற்காகக் காத்துக்கொண்டு நிற்பார்கள். தண்டபாணி வந்ததும், சேர்ந்து உட்காருவார்கள்.

"இன்னிக்கு காலேஜிலே என்ன விசேஷம்?"

"காவேரி, பரீட்சை எப்ப உனக்கு?"

"உனக்கு எப்படா பரீட்சை, வேம்பு?"

"எங்கடா கோபுவைக் காணும்? கிளப்பிலே மேஜை இன்னும் கலையலையோ? ஏதாவது ஜெயிச்சான்னாத் தேவலை, இந்த மாசத்து வீட்டு வாடகையாவது கட்டச் சொல்லலாம். அவனைப் பார்த்து ஒரு வாரத்துக்கு மேலே ஆயிருக்கும் போலிருக்கே. 'அப்பா உன்னைப் பார்த்து ஒரு வாரமாச்சுன்னு சொன்னார்'னு நாளைக்கு அவன்கிட்டே

சொல்லுங்கோ யாராவது."

"இன்னுமா ரண்டாம்காலப் பூஜை முடியலே! பார்த்தசாரதி கோவிலுக்குக் போயிருக்காளா! திருவட்டீஸ்வரன் பேட்டை கோவிலுக்குப் போயிருக்காளா?"

இப்படிப் பல கேள்விகள் கேட்டு, பதில்கள் வரும். காவேரி, பள்ளிக்கூடத்து டீச்சர்களைப் பற்றி ஒரு வர்ணனை ஆரம்பிப்பாள். "பாருங்கோப்பா, இப்படி மாரை விறைச்சுண்டு, மூக்கை மலர்த்திண்டு, இப்படி இப்படிநடந்து, எங்க கிளாஸிலே நுழைஞ்சாளே பார்ப்பம், இன்னிக்கு எங்க ஹெட்மிஸ்ட்ரஸ்" என்று எச்சில் கையோடு எழுந்து கூடத்தில் நடந்து காட்டிவிட்டு, மீண்டும் வந்து இலைமுன் உட்கார்ந்து கட்டை விரலின் பின்னால் நக்குவாள். எல்லோரும் சிரிப்பார்கள்; தண்டபாணி, மாட்டுப்பெண் இரண்டு பேருக்கும் வயிறு குலுங்கும். காவேரி அப்படிப் படம் பிடிக்கிறவள்.

"அது சரீடீ குழந்தே. எச்சில் கையோடு எழுந்துதான் அதைக் காண்பிக்கணுமா என்ன?" என்பார் தண்டபாணி.

"ஸாரிப்பா. உடனே செய்யாட்டா, அப்புறம் வராது. அதனாலெதாம்பா" என்று 'இனிமேல் செய்யமாட்டேன்' முகத்துடன் காவேரி வெட்கப்பட்டுக்கொள்வாள்.

"இரு, இரு. நாளைக்கு ஒரு லெட்டர் எழுதிப் போடறேன். உங்க ஹெட்மிஸ்ட்ரஸுக்கு" என்பான் சின்னப் பையன்.

"போடேன், என்ன செஞ்சுடுவ? இங்கே வா, இப்படின்னு ரூம்லே கூப்பிட்டு அதட்டுவாள் -"

"சரி சரி, எச்சில் கையை நீட்டாதே. அப்பா இலையிலே தெறிக்கப்போறதுடி" என்று பரபரப்பான் அவன்.

"ஸாரிடா."

"தெறிக்கப்போறதென்ன? இதோபார், ஒரு பருக்கை இதோ வந்து விழுந்திருக்கு. நல்லவேளையா என் இலையிலே வந்து விழலே?" என்று கண்ணடிப்பார் சின்னப் பையனிடம் தண்டபாணி.

"அடெடெ! ஸாரிப்பா."

"நீ இனிமே சாப்பிடறபோது விகடக் கச்சேரி பண்றதில்லேன்னு வச்சுக்கோடி" என்பார் தண்டபாணி.

"சும்மா வச்சுனுடுவளா, அவ! நூறு தடவை அப்படின்னு இம்போசிஷன் எழுதச் சொல்லணும்" என்பான் பெரிய பிள்ளை - கல்லூரி ஆசிரியன்.

"ம்! உங்க காலேஜ் பையங்ககிட்டே சொல்லு பார்ப்போம். உன்னை ரவுண்ட் டாணாவிலே வளைச்சிண்டு, உன்னையே இம்போசிஷன் எழுதச் சொல்லிவிட்டுத்தான் அந்தண்டை விடுவார்கள்."

"சரிசரி, சாப்பிட்டு முடி. அப்புறம் மல்லுக்கு நிக்கலாம்" என்பார் தண்டபாணி - குரலில் சிறிது கடுமையுடன்.

"மறந்தே போயிட்டேனே, மன்னி! அப்பாகிட்டே லெட்டரை எடுத்துக் கொடுக்கலியா?" என்பாள் காவேரி.

"வந்துதா?"

"ஆமாம்பா. ரண்டு வந்திருக்கு."

"வந்தவுடனே எடுத்துக் கொடுக்க வாண்டாமோ? எங்கேருந்து வந்திருக்கு?"

"அப்பு அண்ணா எழுதியிருக்கா. இன்னும் ரண்டு நாள்ளே வரேன்னு."

"ம்க்கும். வந்தான்! ரண்டு மாசத்துக்கு முன்னாலெ கூடத்தான் எழுதினான்."

"பவானியம்மாள் நிர்ப்பந்தம் பண்ணினா- வரமுடியலேன்னு எழுதியிருந்தாளேப்பா. இப்ப ரண்டு நாள்ளே நிச்சயமா வந்துடுவா. பார்த்துண்டே இருங்களேன்."

"சரி, வரட்டும்."

"அப்புறம், நம்ம மன்னியோட அப்பா எழுதியிருக்கார் - சிதம்பரத்திலேருந்து."

"என்னடா, எழுதியிருக்கார்?"

"ஆ - மா" என்று அலுத்தாற்போல் பதில்.

"மன்னியோட தம்பிக்கு இந்த வருஷம் பூணல் போட்டாளோ இல்லியோ; இந்த வருஷம் தலை ஆவணி அவிட்டம். கட்டாயம் வரணும்னு உங்களையும் அண்ணாவையும் மன்னியையும் அம்மாவையும் வரச்சொல்லியிருக்கார் -"

"ஆமா. வேலையென்ன? எந்தப் பிராமணன் சந்தி பண்றான் இப்ப? ஆவணி அவிட்டமாம்! காட்டிலே வாசம் பண்றபோது வச்ச வழக்கம் எல்லாம் இன்னும் ஒட்டிண்டிருக்கு. பூணலுக்கு அர்த்தம் ஏது? டவாலி போட்டுக்கறவனாவது அர்த்தத்தோட போட்டுக்கறான் - தான் பியூன்னு காமிச்சுக்கிறதுக்கு. நம்ம டவாலிக்கு ஏது அர்த்தம்! சந்தி கிடையாது, ஜபம் கிடையாது, வேதம் கிடையாது, சாஸ்திரம் கிடையாது. பூணலையே அறுத்தெறியணும். இதுக்கு என்ன ஆவணி அவிட்டம்? அப்புறம் தலை ஆவணி, கால் ஆவணி?" என்று கல்லூரி ஆசிரியர் படபடக்கிறார்.

"நீ போகாட்டாப் போயேன். நான் மன்னியை அழச்சிண்டு போயிட்டு வரேன். அப்பு அண்ணா வந்துடுவா. உன்மாதிரி இல்லையே அப்பு அண்ணா. வேதம் படிச்சிருக்கா. கூப்பிட்டா சரின்னு வருவா. நாங்க போயிட்டு வரோம்" என்றாள் காவேரி.

"பேஷாப் போ. அப்புவும் போகட்டும். இத்தனை வருஷம் வேதம் படிச்சதுக்குப் பலன் வாண்டாமா? ஆவணி அவிட்டத்துக்குப் போகற பிரயோசனமாவது கிடைக்கட்டும்."

தண்டபாணி பேசவில்லை, முதல் பிள்ளையோடு. அது வெகுநாள் வழக்கு. தம்பியைச் செத்துப்போய்க் கொண்டிருக்கிற புத்தகங்களையெல்லாம் படிக்கச் சொல்லி, எங்கேயோ அனுப்பிவிட்டாரே என்று அவனுக்குக் கோபம்.

"இத பாரு. நீ பிஸிக்ஸ் லெக்சரரா இரு. ஐன்ஸ்டீன், நியூட்டன், பாரடே மாதிரி பெரிய விஞ்ஞானியா இரு. வாண்டாம்னு சொல்லலே. ஆனா, வேதத்தைச் செத்துப் போற புஸ்தகம்னு சொல்லாதே. உனக்கு ஏதுக்கு இதெல்லாம்? நீ இந்தப் பூமியிலே இருக்கிறதைப் பத்திச் சொல்லிண்டு இரு. வேதம், பூமி ஆகாசம்னு எங்கேயும் இருக்கிறதைப்பத்திச் சொல்லிண்டிருக்கு. உனக்குப் பிடிக்கல்லேன்னா

விட்டுடேன். அதையேன் செத்துப்போற புஸ்தகம்னு சொல்றே? நியூட்டன் சொல்றது தப்புன்னூட்டான் ஐன்ஸ்டீன். அவனைக் கவுக்க இன்னும் யார் வரப்போறானோ. அப்பேர்ப்பட்டவனே ஒண்ணும் புரியலேன்னு முழிக்கிறான். நீ எதுக்கு வேதத்தைப் போய்ச் சொல்றே? உனக்கு ஒரு வரி தெரியுமோ அதிலே? நீ படிக்காட்டா, நான் படிக்காட்டா, இந்த மெட்ராஸ்லேயும் பூலோகத்திலேயும் இருக்கிற மேதாவிகள், சும்பன்கள் எல்லாரும் படிக்கலேன்னா, அது செத்துப்போயிட்டதாகவா அர்த்தம்?"

"அப்ப வேதம் படிச்சவாள்ளாம் பூமி ஆகாசம்னு எங்கேயும் இருக்கிற வஸ்துவைத் தெரிஞ்சுனூட்டான்னு சொல்றேள் நீங்க?"

"நான் சொல்லலியே. ஸயன்ஸ் படிக்கிறவா எல்லாருமா நியூட்டன் ஆயிட்டா? அந்த மாதிரிதான். லட்சம் விரையைத் தூவினா, பாதி முளைக்கும். பாதி சாவியாப் போகும். சிலது தழைச்சுப் போகும். அப்படீ. . .தான்."

ஓயாமல் சண்டை போடுவார்கள் இரண்டுபேரும். சில சமயம் சண்டை முற்றி மனஸ்தாபமாகக்கூட மாறிவிடும். பையன் தன்னைத் திட்டிவிட்டதாக முகத்தைத் தூக்கிக்கொள்வான். "நாளைக்கு ரானடே ஹால்லெ பந்த்துன்னு யாரோ பேசறானாமே - போகப் போறியா?" என்று தண்டபாணி தனக்கொன்றுமில்லை என்பதைக் காட்டி, அவனைக் கலகலப்புக்கு இழுத்துவருவார்.

"சொன்னா, அப்பா பெரிய வேதாந்தத்துக்குப் போயிடறா! அப்பு வேதம் படிச்சாச்சு. வரப்போறான். வந்து என்ன பண்றது? சம்பாதிக்காம இருக்கப்போறதில்லே. ஆனா இப்ப இருக்கிற லோகத்தைப் புரிஞ்சுக்கவா போறான்? இதுக்கு வேற என்ன என்னமோன்னா தெரிஞ்சுக்க வேண்டியிருக்கு" என்றாள் அவள்.

"யாரங்கே?" என்று கண்ணை இடுக்கி நிமிர்ந்தார் தண்டபாணி.

"நான்தான்" என்று சொல்லிக்கொண்டே முற்றத்தில் இறங்கிக் காலை அலம்பிக்கொண்டாள் அலங்காரத்தம்மாள்.

"இப்பதான் வறியாம்மா?"

"ஆமாண்டி. . . என்ன கவலைப்படறேள் எல்லாருமா? அப்பு எப்படி இப்ப இருக்கிற லோகத்தைப் புரிஞ்சுக்கப் போறான்னு புரொபசர் ரொம்ப

கவலைப்படறாப்பல இருக்கே!"

"ஆமாம் நிஜமா கவலையாத்தான் இருக்கு எனக்கு, சொல்றேன்."

"உன்னைவிடக் குறைச்சலாப் புரிஞ்சுண்டுடமாட்டான் போயேன். அவன் அத்யயனம் பண்ணியிருக்கான். பெரியவா சொன்னதைப் பவ்யமா, குதர்க்கம் பண்ணாம கேட்டுத் தெரிஞ்சுண்டிருக்கான். அவனுக்குச் சந்தேகம் வராது. உங்களுக்குத்தான் புதுப் படிப்பு - எது கேட்டாலும் சந்தேகம்."

"போடு."

"ஆமாண்டா - கருவேப்பிலைக்கு ஏன் இந்த வாசனைன்னா, நீ புஸ்தகத்தை எடுத்துண்டு கணக்குப் போட ஆரம்பிச்சுடுவே. அவன் ஸ்வாமி கொடுத்த வாசனை அதுன்னு பளிச்சினு சொல்லிட்டு அக்கடான்னு இருந்துடுவான். நீ ஆன்சர் கண்டு பிடிக்கிறதுக்குள்ளேயும் ஏழுதலைமுறை ஆகி, கருவேப்பிலை வாடி வதங்கி, வாசனைபோய், கருகு வாடை அடிச்சிண்டிருக்கும்."

"வேணும், நன்னா வேணும்!" என்று எச்சில் கையை ஆட்டினாள் காவேரி.

கல்லூரி ஆசிரியர் சிரித்துக்கொண்டிருந்தார். எல்லோரும் சிரித்துக்கொண்டிருந்தார்கள் - மாட்டுப்பெண் உள்பட.

"அம்மா கோவில்லேருந்து வரா - அனுக்ரகமாச் சுமந்துண்டு. இப்ப பேசி ஜெயிக்க முடியாது" என்றான் சின்னப் பையன். "எப்பவும் இப்படியேதான்னேன்" என்றாள் அலங்காரத்தம்மாள். "ஏண்டி, அப்பு லெட்டரைக் காமிச்சியோ அப்பாவுக்கு?"

"காமிக்கலே, சமாசாரத்தைச் சொன்னேன். அதிலேருந்து தான் புரொபசர் ஆரம்பிச்சார்."

"ரண்டு நாள்ளே புறப்பட்டு வரேன்னு எழுதியிருக்கான். ஏழாம் தேதி எழுதியிருக்கான். இன்னிக்கு பத்து தேதியாச்சே? இத்தனை நாளா ஆகும் லெட்டர் வரதுக்கு?"

"எழுதின அன்னிக்கே தபால்லே போடணும்னு என்ன அவசரம்?" என்றார் தண்டபாணி.

சாப்பிட்டு எழுந்ததும், மாட்டுப்பெண் ஊஞ்சலில் வைத்த வெற்றிலைத் தட்டிலிருந்து நாலு வெற்றிலையில் சுண்ணாம்பிட்டு மென்றுகொண்டே, கடுதாசை வாங்கிக்கொண்டு மாடிக்குப் போனார். விளக்கைப் போட்டு அதைப் படிக்கத் தொடங்கினார். செய்தி ஒன்றும் அதிகமில்லை. இன்னும் இரண்டு நாளில் வரப்போறானாம். இங்கு அம்மா, அண்ணா, மன்னி, காவேரி, கோபு, வேம்பு எல்லாரும் நலம் என்று நம்புகிறானாம். அங்கு பவானியம்மாள், வாத்தியார் எல்லாரும் சௌக்கியமாம். வேறு செய்தி ஒன்றுமில்லை. திரும்பத் திரும்பப் படித்துக்கொண்டிருந்தார் அவர். இருபது தடவைக்குமேல் வாசித்துவிட்டார். மறுநாள் வேதாந்தப் பாடத்திற்குத் தயார் செய்ய மறந்தே போய்விட்டது. பத்திரிகை படிக்கத் தோன்றவில்லை. அப்படியே சுவரைப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார். ஒரு பல்லி, அவசர அவசரமாக மேலும் கீழும் பக்கமுமாக விரைந்து, இறக்கையைப் பரப்பிச் சுத்தித் தத்திச் சுவர்மீது வந்து உட்கார்ந்த விளக்குப் பூச்சிகளைக் கவ்விக் கவ்வி விழுங்கிக்கொண்டிருந்தது.

"அப்பு எப்ப வருவான்?" என்று குரல் கேட்டது. அவர் மனைவி உள்ளே வந்து கடுதாசியைப் படித்தாள்.

"அதான் ரண்டு நாளில் வரேன்னு எழுதியிருக்கானே."

அலங்காரம், சுவரில் மாட்டியிருந்த புகைப்படத்தைப் பார்த்தாள். தண்டபாணியும், அவளும் நாற்காலியில் அமர்ந்திருந்தார்கள். பின்னால், முதல் பையனும் பெண்ணும் நிற்கிறார்கள். கீழே அப்பு சட்டை குல்லாயோடு உட்கார்ந்திருக்கிறான்.

தண்டபாணி சுவரைப் பார்த்துக்கொண்டேயிருந்தார்.

அலங்காரம் படத்தைப் பார்த்துக்கொண்டேயிருந்தாள்.

இருவரும் பேசவில்லை.

கடலலை, ஓகோ ஓகோ என்று மூட்டைகளைப் புரட்டுவது போல, தழைத்தும் ஓங்கியும் ஓசை எழுப்பிக்கொண்டிருந்தது.

தண்டபாணி திரும்பிப் பார்த்தார். சப்பணம் கட்டித் தரையிலமர்ந்து, கன்னத்தில் கையை வைத்து, சூன்யத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள் அலங்காரம்.

"நீ இன்னும் படுத்துக்கப் போகலியா?"

". . . . . . . . ."

"ம்?"

"ம், போறேன்" என்று உட்கார்ந்த நிலை மாறாமலே பதில் வந்தது.

"என்ன யோசனை?"

"ம்?"

"என்ன யோசனைன்னேன்?"

"ஒண்ணுமில்லே. பதினாறு வருஷம் படிச்சிருக்கே இந்தப் புள்ளை. பாடசாலையிலே போடாம இருந்தா எப்படி இருந்திருப்பான்னு நினைச்சிண்டிருந்தேன்!"

"கீழே பளிச்சினு அவனுக்குப் பதில் சொன்னியே?"

"சொன்னேன்."

"பாடசாலையிலே அவனைப் போடணும்னு நீதானே தலைகீழா நின்னே."

"நான் இப்ப இல்லைங்கலியே."

"பின்னே என்ன யோசனை?"

. . . . . . . . .

"ம்?"

"ஏதோ யோசனை! 'ம்' 'ம்'ன்னா என்னத்தைச் சொல்லுவேன்?"

"இல்லை, பதினாறு வருஷம் கழிச்சு திடீர்னு, என்னடா என்னத்தையோ பண்ணித் தொலைச்சிருக்கோமேன்னு தோணி, கஷ்டப்படறியோன்னு கேட்டேன்."

"ம்க்கும், கஷ்டம், கிலேசம்! உங்க உபன்யாசம் எல்லாம் உங்க

சிஷ்யங்ககிட்ட பண்ணறது போராதா? இங்கே என்ன வேண்டியிருக்கு?" என்று நிமிர்ந்து லேசாகச் சிடுசிடுத்தாள் அவள்.

தண்டபாணி இப்போது உண்மையாகவே மௌனமாகி, சுவர்ப் பக்கம் திரும்பினார்.

பத்து நிமிடம் கழித்து அவள் எழுந்துபோனாள். நிலையைக் கடக்கும்பொழுது, அவள் தலைப்பால் கண்ணைத் துடைத்துக் கொண்டு போவது போலிருந்தது.

தண்டபாணிக்குத் தான் ஏதோ தவறு செய்துவிட்டது போலிருந்தது. ஆனால், எழுந்துபோய் விசாரிக்க முடியாமல் நாற்காலியில் ஒட்டிக்கிடந்தார்.

வெகுநேரம் அப்படியே உட்கார்ந்திருந்தார். வாசலில் எத்தனையோ ஓசைகள். நாய்க் குரைப்புகள், சுவர்க்கோழி. உள்ளேயே சிராவண்டுமாதிரி ஒரு பூச்சி சிறகை 'விர்'ரென்று சிலுப்பித் தத்தித்தத்தி உட்காரும் ஓசை. வாசல் திண்ணையின் கம்பிக் கதவைத் திறக்கிற ஓசை. இடைக்கட்டு நிலை 'புர்'ரென்று மூடுகிற ஓசை. கடலின் ஓசை. பக்கத்து வீட்டில் குழந்தை கத்துகிற ஓசை. தெருவில் எங்கோ எருமை முட்டுமுட்டென்று முளையை முட்டுகிற ஓசை.

ஒரு பெருமூச்சுவிட்டு, "ராகவா" என்று மொட்டை மாடியில் பாயை விரித்து, தலையணையைத் தட்டிப்போட்டு, விளக்கை அணைத்துவிட்டு விழுந்தார் தண்டபாணி.

'அலங்காரம்' என்று ரகசியமாகக் கூப்பிடவேண்டும் போலிருந்தது அவருக்கு.

"வழ்ழ். . ." என்று திடீர் எனக் கோபித்துக் கொண்டாற் போல ஒரு நாய் ஊளையிட்டது.

கண்ணை மூடி, மனதைச் சூன்யமாக்கிக்கொண்டார்.

## 1

ஆனால் வழக்கம் அவரை இப்போது கைவிட்டுவிட்டது. நினைத்தபொழுது அவருக்கு மனதைச் சூன்யமாக அடித்துக்கொள்ள

முடியும். அந்த வெறும் வெளியையே கடவுளாக ஆக்கி அப்படியே கிடப்பார். மனது சற்றுச் செத்துப்போகும்; சற்றுப் பிழைக்கும். மீண்டும் சாகும்; மீண்டும் பிழைக்கும். கடைசியில் ஒரு பாடாகத் தூக்கம் வரும். இன்று அப்படி மனம் சாகவில்லை. அற்றுப் போகவில்லை. அலைபாய்ந்து பறந்தது. கண்ணைத் திறந்துகொண்டார். வானம் அசாதாரணத் தெளிவுடன் நட்சத்திரங்களை மெருகு போட்டுத் தேய்த்து வைத்திருந்தது. வெகுநேரம் கண்ணை மூடிவிட்டுத் திறந்ததாலோ என்னவோ, நட்சத்திரங்கள் மிக அருகில் தொங்குவதுபோல் தோன்றின. 'பளீர்' என்று வெள்ளையாகத் துலங்கின. ஒரு கோள் உண்மையாகவே கட்டித் தொங்கும் விளக்குபோலச் சற்று இறங்கித் தொங்கிற்று. ஏழெட்டுத் தென்னை மரங்கள் ஒரு பக்கம். காற்றில்லை; புழுக்கமுமில்லை. ஏதோ படம் எழுதினாற்போலிருந்தன வானும் இரவும். இத்தனையையும் விட்டுவிட்டு ஏன் கண்ணை மூடி மனதைச் சூன்யமாக்கிக் கொள்ளவேண்டும் என்று தோன்றிற்று.

அப்பொழுதெல்லாம் - அது அந்தக் காலம் - இருபது வருடத்துச் சேதி - அலங்காரமும் இந்த மொட்டை மாடியில் தனக்கு அரை முழம் தள்ளி ஒரு பாயைப் போட்டு மல்லாந்து படுத்திருப்பாள். நக்ஷத்திரக் கூட்டங்களைப் பார்த்துக் கொண்டிருப்பாள். "மீசை வைச்சுண்டு கையிலே அரிவாளோடு ரதத்திலே யாரோ உட்கார்ந்திருக்கிறாப்பல இல்லை - இதைப் பார்த்தால்?" என்பாள் - ஒரு கூட்டத்தை நோக்கி விரலைச் சுட்டி.

"எப்படி?"

"அதோ பாருங்கோ. அதோ கிழக்கே தெரியறதே, ஒரு ஆறு - ஓவல் சைஸ்லே. அதுதான் முண்டாசு. அதுக்குக் கீழே இரண்டு - அதுதான் கண்ணு. அப்பறம் பெரிய தோள் மாதிரி இருக்கு. இப்படி இதோ ஒரு ஒன்பது தெரியறதே - அது வாள் மாதிரி இல்லை. இப்போ தெக்க பாருங்கோ, ஒரு நாற்காலி முதுகு மாதிரி வளையறது பாருங்கோ, அதுக்குக் கீழே ஒரு சக்கரம் தெரியலே?. . .'

"ம்?" என்று தண்டபாணி அவள் சொன்னவாறு கண்ணை ஓட்டுவார். கடைசியில் அந்த உருவம் என்னமோ கிழக்கே தொடங்கி, வடக்கு மேற்கு அடிவானம் வரையில் போய்விடும். மீசையோ, முண்டாசோ, வாளோ அவர் கண்ணுக்குப் படுவதில்லை. "சக்கரம் தெரியறது, நாற்காலி முதுகு மாதிரி தெரியறது, முண்டாசு, மீசைங்கிறியே, தெரியக்காணுமே?" என்பார்.

"அப்படின்னா நிஜமுண்டாசு மாதிரி வெள்ளையா, துணி முண்டாசா இருக்குமா? மீசைன்னா கறுப்பா, நார் நாரா இருக்குமா? நாலஞ்சு நட்சத்திரம் இருக்கும். சேர்த்துப் பார்த்தா அதுமாதிரி இருக்கும். ஐயோ, அப்படியே முண்டாசு மாதிரியே இருக்கு! கண்ணுகூடத் தெரியறது. காதிலே கூட வளையம் போட்டாப்பல இருக்கு. ஊரிலே மதுரை வீரன் சிலை இருக்குமே, பிடாரி கோவில்கிட்ட அதே மாதிரி இருக்கு. தெரியலே தெரியலேங்கிறளே?. . . அப்பாப்பாப்பா! எப்படித்தான் இதெல்லாம் பண்ணினானோ?" என்று மல்லாந்து மார்பில் இரண்டு கைகளையும் வைத்து மலைத்துக் கிடப்பாள்.

தண்டபாணி திரும்பி அவளைப் பார்ப்பார். "அச்சோ, அம்மா!" என்று அவள் அசையாமல் மல்லாந்து வியப்பதைப் பார்த்தால், குழந்தை கிடக்கிற மாதிரி இருக்கும். அலங்காரத்துக்கு வாட்டசாட்டமான வடிவம். நிமிர்ந்து நின்றால் கிட்டத்தட்ட அவருக்குச் சரியாக இருப்பாள். சாதாரணமாக, எல்லாப் பெண்களிடம் காண்பதைவிட எல்லாமே சற்றுக் கூடுதலாக இருக்கும் - உயரம், தலையளவு, கைகால் நீளம், உடல் திரட்டு, தலை மயிர் - எல்லாமே. சிலசமயம் இவளைக் கட்டியாண்டு விட வேண்டும் என்று தண்டபாணிக்குத் திடீர் என்று ஒரு வெறி வந்துவிடும். அத்தனை பெரியவளாக இருப்பாள். அவளேதான் இப்பொழுது குழந்தை மாதிரி கிடக்கிறாள்.

நட்சத்திரம் மட்டும் இல்லை - இன்னும் என்னென்னவெல்லாமோ சொல்லுவாள் அவள். "நேத்திக்கி ராத்திரி ஒரு சொப்பனம் - காமாட்சி அம்பாள் வந்து நிற்கிற மாதிரி பச்சைப் பசேர்னு ஒரு பாவாடை. மூக்கிலே வந்து நீலமா ஒரு மூக்குத்தி. அதிலேருந்து முத்து முத்தா - ஒரு வைடூர்யம், ஒரு பச்சை, ஒரு முத்து, ஒரு தங்கக் குண்டு - நாலும் சின்னதாத் தொங்கறது. அப்பா! என்ன நீலம்! என்ன நீலம்! அந்த முகம் மட்டும் - அந்த மாதிரி அழகு நான் பார்த்ததேயில்லை. அப்படியே கிட்ட வராப்பல இருந்தது. நான் கிட்டப் போய்த் தொடப் போறேன். என்னையும் அது தொடறாப்பல இருந்துது. சட்டுனு ஒண்ணுமே காணலே. முகத்தைக் காணும். அந்தப் பாவாடை மாத்திரம் மடிப்பு மடிப்பாத் தெரிஞ்சுது. காத்திலே பெரிய படுதா சிலுசிலுக்குமே - அந்த மாதிரி அலைபாஞ்சிண்டேயிருந்துது. அதையாவது தொடலாம்னு கையை நீட்டறேன். சட்டுனு முழிச்சுனூட்டேன் . . ."

இந்த மாதிரி இரண்டு நாளைக்கு ஒருமுறை ஏதாவது சொல்லிக்கொண்டேயிருப்பாள். "பிரயாகையிலேருந்து ஒரு சன்யாசி போன வருஷம் வந்திருந்தாரே, அவர் வந்து நம்மாத்து வாசப்படியிலே

நிக்கறாப்பல இருந்துது. அவர் காலெல்லாம் புழுதி படிஞ்சிருக்கு. உள்ளே வாங்கோன்னு சொல்லணும் போலே இருக்கு. ஒரு செம்பிலே ஜலம் கொண்டு கால் அலம்ப கொடுக்கணும் போலவும் இருக்கு. உங்களைக் கூப்பிடறேன். நீங்க அப்ப பூஜை உள்ளே உட்கார்ந்திருக்கேள். என்னடா போயிடப் போறாரேன்னு ஓடி வரேன். யாரு வாசல்லேன்னு நீங்க கேட்கறேள் உள்ளேயிருந்து. . ." என்று நடுத் தூக்கத்தில் எழுந்து உட்கார்ந்து ஏதாவது சொல்லத் தொடங்குவாள்.

அவள் கனவுகள், காட்சிகள் எல்லாம் வேடிக்கையாக இருக்கும். வர்ணங்களும் ஒலிகளும் நிறைந்திருக்கும். ஒவ்வொன்றையும் நுட்பமாக, படத்தை உட்கார்ந்து பார்த்து விளக்குவதுபோல் சொல்லுவாள். தண்டபாணிக்கு வியப்பாக இருக்கும். நமக்குக் கனவு வந்தால் பொத்தாம் பொதுவாக ஏதோ உருவம் வருகிறது - போகிறது. இவளுக்கு மட்டும் எப்படி இத்தனை நுணுக்கமாக வர்ணங்கள், நகைகள், எல்லாம் வருகின்றன என்று ஆச்சரியப்படுவார். அதுவும் சாதாரண மனிதர்கள் அவள் கனவில் தோன்றுவதில்லை. தேவர்கள், தோட்டங்கள், நட்சத்திரங்கள், கடல், கோபுரம், கப்பல், ஐந்தாறடித் தாமரைகள் - இப்படித்தான் வரும். அவருக்கு வரும் காட்சிகளோ பஸ்ஸில் போகிறது, சாப்பிடுகிறது, யாரோ பையன் புத்தகத்தைத் தூக்கிக்கொண்டு ஓடி வருகிறது - இப்படித்தான் இருக்கும். ஒரு பெரிய ரவா தோசையை வைத்துக்கொண்டு வெகு நேரமாகத் தின்பதுபோல் ஒரு கனவு. அது தின்னத் தின்னத் தீராது. பாதிக்கு மேல் தின்ன முடியவில்லை. வயிற்றில் இடமில்லை; ஆனால் தின்றாக வேண்டும் என்ற ஏதோ கட்டாயத்தின் வசப்பட்டு அவர் உட்கார்ந்து விழித்துக்கொண்டேயிருப்பார். அல்லது என்னூர் உப்பங்கழியில் கழுத்தளவு நீரில் நின்றுகொண்டிருப்பதுபோல் ஒரு காட்சி. இப்படித்தான் தண்டபாணியின் கனவுகள் மண்ணிலேயே கிடந்து புரண்டு கொண்டிருக்கும். இவளுக்கு மட்டும் எப்படி தேவர்களும் துறவிகளும் மலர்களும் மணிகளும் குழந்தைகளும் கடலும் தோன்றுகின்றன என்ற வியப்பு அவருக்கு. அவள் வேதாந்தப் பாடம் சொல்லவில்லை, படிக்கவும் இல்லை. சாதாரணப் படிப்புக்கூடக் கிடையாது. தமிழில் ஏதாவது புத்தகம் படிப்பாள். தேவாரம், திருப்புகழ் என்று நாலைந்து சொல்லுவாள். ஸம்ஸ்கிருதத்தில் இருபது முப்பது சுலோகங்கள் தெரியும். ஆனால் அவளுக்குச் சாப்பிடுகிற கனவோ, என்னூரில் உப்புநீரில் கழுத்துமட்டுக்கு நிற்கிற கனவோ வருவதில்லை.

மல்லாந்து படுத்திருப்பவளைத் திரும்பிப் பார்த்த தண்ட பாணிக்குச் சில சமயம் பொறாமையாக இருக்கும். எப்பொழுதுமே ஒரு மரியாதை

இருக்கும். அந்த மாதிரி பேசும்போது, அவளைத் தொடக்கூடச் சற்றுக் கூச்சமாய் இருக்கும். அவளாக நினைத்துக்கொண்டு திரும்பி, கையை அவர்மீது போட்டுக் கனைத்துக்கொள்ளும்பொழுதுதான் அவருக்கு அந்தப் பயமும் நீங்கும். ஒரு நிம்மதி வரும். சிலவேளை புல்லரிக்கும். யாருக்கும் கிட்டாத ஒன்று, இப்படித் தனியாகத் தனக்குக் கிடைக்கிறது என்று அவள் மார்பில் முகத்தைப் புதைத்துக் கொள்வார். அந்தக் காலத்தில் - ஆமாம், அந்தக் காலத்தில்தான். மொட்டை மாடியில் அவள் படுத்து இருபது ஆண்டுகளுக்கு மேலாகி விட்டது. இருபதா? அதற்கு மேல்கூட இருக்கும் . . .

எப்போதாவது ஒரு இரவு அப்புவும் வந்து படுத்திருப்பான். அவனுக்கு அவள் சொல்லும் ருக்மாங்கதன் கதை, அரிச்சந்திரன் கதை, பாகவதக் கதைகளை அவரும் கேட்டுக்கொண்டிருப்பார். அப்புறம் குழந்தைகளைச் சீராடிச் சீராடித்தான் அலுத்துவிட்டதோ என்னவோ; பிறகு பிறந்த கோபு, வேம்பு, காவேரி யாரும் இப்படி வந்து படுத்ததுமில்லை, கதையும் கேட்டதில்லை. கேட்டதாக ஞாபகமில்லை. மொட்டை மாடியில் வந்து படுத்த குழந்தைகள் முதல் பிள்ளை கிருஷ்ணன், முதல் பெண் பார்வதி, அப்பு - இவர்கள்தான் என்று தோன்றுகிறது. நினைத்துப் பார்க்கும்போது மற்ற குழந்தைகள் வந்து இப்படிப் படுத்துச் சீராடியதான தோற்றமே வரவில்லை. குழந்தைகளைப் பெற மட்டும் செய்து, சீராடாத முதிர்ச்சி என்ன முதிர்ச்சி என்று விளங்கவில்லை அவருக்கு. தன்னைக் கண்டே வெட்கமா?

ஆனால், அவர் எப்பொழுதுமே அப்படிச் சீராடியதில்லை - எந்தக் குழந்தையையும். அவள்தான் யசோதை பெற்றுவிட்ட மாதிரி அதிசயமாக அடித்துக் கொள்வாள்; கொஞ்சுவாள். எச்சில் தழும்பு வந்து விடுகிறாற்போல முத்தம் கொடுப்பாள். அதுவும் அப்பு பிறந்ததும், தொட்டிலை அடைத்துக்கொண்டு அந்தக் குழந்தை படுத்திருப்பதை அவள் கண்கொட்டாமல் குடித்துக்கொண்டேயிருப்பது, இன்னும் ஞாபகமிருக்கிறது. அப்பு அவ்வளவு சிவப்பாக, அவ்வளவு இடம் கொள்ளாமல், கண்ணைக் குத்துவதுபோல அவ்வளவு எடுப்பாகப் படுத்திருப்பது அவளுக்கே தாங்கவில்லையோ என்னவோ; யார் வந்தாலும் நடையிலேயே பேசி அனுப்பிவிடுவாள். குழந்தையை அப்படி யாராவது தப்பித் தவறிப் பார்த்துவிட்டால் படியில் மிளகாயைப் போட்டுத் தொட்டிலைச் சுற்றிச் சுற்றித் திருஷ்டி கழிக்கிற அவளுடைய அவசரம்! அப்புவை யாரையும் தூக்கக்கூட விடுவதில்லை அவள். தூக்க முடியாமல் கீழே போட்டுவிடும் பயம் ஒரு பக்கம். வெளியே யாரும்

பார்த்துக் கண்ணைப் போட்டு விடப் போகிறார்களே என்று முக்கால் பயம் இன்னொரு பக்கம். ஒரு தடவை மூத்த பையன் - கோடை விடுமுறைக்காக மதுரையில் உள்ள பெரிய சித்தி வீட்டில் இரண்டு மாதம் இருந்துவிட்டுத் திரும்பி வந்தவன் - தொட்டிலில் தூங்கும் குழந்தையைப் பார்த்து, "யம்மா - யம்மா, அப்பு என்னம்மா இவ்வளவு பெரீசாப் போயிடுத்து!" என்று கண்ணை அகட்டிக் கொண்டு முழங்காலிடுக்கில் கையிரண்டையும் இடுக்கிக் குனிந்துகொண்டே கத்தினான்.

"சீச்சீ!" என்றாள் அலங்காரம்.

"என்னம்மா!"

"இந்தண்டை வாடா! தூங்கற பாப்பாவை அப்படிப் பார்க்கப்படாது - போடான்னா - படவா - போடாங்கறேன்" என்று அவனை நகர்த்திக்கொண்டு போனாள் அவள். மூக்கைப் பிடித்துக்கொண்டு முற்றத்து ஓரமாக உட்கார்ந்து ஜபம் செய்து கொண்டிருந்த தண்டபாணிக்கு லேசாக வந்த புன்சிரிப்பு இப்போதும் நினைவுக்கு வருகிறது.

அவனை எத்தனை முறை விசிறிக் கம்பால் அடித்திருக்கிறாள் அவள், அப்புவை அழவிட்டதற்காக! "அவன் வம்புக்குப் போகாதேன்னு சொன்னேனோல்லியோ?" என்று ஓடி ஓடி அந்தப் பெரிய பிள்ளையை எத்தனை முறை திட்டி - அதட்டி அடித்திருக்கிறாள்! அவருக்கே வியப்பாக இருந்தது! அப்புவுக்கு என்ன இவ்வளவு இடம்! பெரிய உடம்பாலேயே மற்றவர்களை இடித்துத் தள்ளிவிட்டு அவள் மனசில் உட்கார்ந்துவிட்டானா! சாப்பாடு, பால் எல்லாவற்றிலும் அவனுக்குத் தனிக் கவனம். அவனுக்குக் காய்ச்சல் வந்துவிட்டால், அதற்குப் பிரத்யேகமாக புருவந் தூக்கல், மோவாய் சரிவு! கோவில் குளத்திற்கு, பீச்சுக்குப் போனால் அவனை அழைத்துப் போகிறது, வந்து திருஷ்டி கழிக்கிறது . . !

அவனுக்கு மூன்று வயதாகும்போதே அவளுக்குத் தெரிந்த தோத்திரங்களைச் சொல்லிக் கொடுத்துவிட்டாள். நாலு வயசில் படிக்க வைத்து, ஐந்து வயசிலேயே மூன்றாம் வகுப்பில் சேர்த்து, அவனைப் பள்ளிக் கூடத்தில் கொண்டு விட்டு வந்து . . . மற்ற குழந்தைகளுக்கு அவள் ஒரு நாள் கூட அப்படிச் செய்ததில்லை.

"நீ என்ன வேலைக்குடா போப்போறே?" என்றால் "இஞ்சினீர்" என்று சொல்லிக்கொண்டேயிருப்பான் அப்பு.

அவளுக்கு அவனைக் கவனிக்கவே பொழுது சரியாயிருந்தது. அவனுக்குச் சாதம் போடுவது, அவன் படிக்கும்பொழுது அவனையே பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருப்பது, அவன் படுத்தால் தட்டித் தூங்கப் பண்ணுவது - இந்த மும்முரத்தில் அவளுக்கு மொட்டை மாடி மறந்தே போய்விட்டது. வாரம் ஒருமுறைகூட வரத் தோன்றாது. அது கடைசியில் மாசம் ஒரு நாள், இரண்டு மாசங்களுக்கு ஒரு நாள் என்று - வேம்புவுக்குப் பிறகு நின்றேவிட்டது. பிறகு வாசல் கதவுக்கும், இடைகழி நிலைக்கும் நடுவில் உள்ள திண்ணையில் படுத்திருக்கும் அவளை நட்ட நடுநிசியில் அவர்தானே தேடிப் போகவேண்டியிருந்தது. ஒருநாள் அப்படித்தான் போனார். இருட்டில் அவள் புஜத்தைப் பற்றி லேசாக அழுத்தினார். "த்ஸ" என்று அலுப்பாக ஒரு குரல். அதே மாதிரி இன்னொரு நாள் "போருமே" என்று ஒதுக்கல்

"என்ன போரும்?"

"போரும்னா போரும்தான்."

"அலங்காரம்!"

"போரும்னேனே."

"அலங்காரம்!"

"சொன்னா சரின்னு விட்டுடணும். வேதாந்தம் எல்லாம் வாயைக் கிழிச்சுண்டு பாடம் சொல்லியாறது. போரும்னு நான் சொன்னா, உடனே புரியலேன்னா என்ன பண்றது?" கிசுகிசுவென்று குரலில்கூட வரவில்லை அது. சற்றுக் காதில் விழுந்ததும் விழாததுமாக, முனகல் மாதிரி வந்தது. குழந்தைகள் ஒன்றிரண்டு விழித்துக்கொண்டிருந்தால்? சட்டென்று அவள் வாயை இருளில் பொத்தினார் தண்டபாணி. அடிமேல் அடி வைத்துத் திரும்பி, மாடிப்படி ஏறி மொட்டை மாடிக்கு வந்து நின்றார்.

மறுநாள் அவருக்கு இறங்கிப் போகத் துணிச்சல் வரவில்லை. அதற்கு மறுநாளும் வரவில்லை. நாலாவது நாள் குழந்தைகள் தூங்கின பிறகு அவளே வந்தாள்.

"என்ன அலங்காரம்?"

"ஒன்றுமில்லை" என்று முழங்காலைக் கட்டிக்கொண்டு நட்சத்திரங்களைப் பார்த்தாள்.

"சொல்லேன்."

"சொல்லி நடக்கிற காரியம் எத்தனை?"

"நீ சொல்லி எந்தக் காரியம் நடக்காம இருந்தது சொல்லேன், அலங்காரம்?" என்று நகர்ந்து அவள் தோளைப் பற்றினார் அவர் மெதுவாக - 'த்ஸ' என்று மூச்சுக்கொட்டு வருமோ என்று பயந்துகொண்டே. நாலு விநாடி, பத்து விநாடி வரையில் வரவில்லை.

"நான் சொன்னா புரிஞ்சுண்டு கேட்டுக்க முடியுமா?"

"ஏன் இப்படியெல்லாம் சொல்றே?"

"அப்புவைப் பத்திதான் என்னமோ சொல்லணும்னு நினச்சேன்."

"அப்பு உனக்குச் செல்லப்பிள்ளையாச்சே."

"அதெல்லாம் ஒன்றும் இல்லே!"

"பின்னே அவனைப்பத்தி மட்டும் என்ன கவலை?"

"அவனைப் பெரிய படிப்பா படிக்க வைக்கணும்னு ஆசையாயிருக்கு."

"அதுக்குத்தான் பெரிய அடிபாரமாப் போட்டிருக்கியே பிஞ்சிலேயே. நீ இப்ப போட்டிருக்கிறதைக் கணக்குப் பண்ணினா, அது பதினேழு வயசிலேயே எம்.ஏ. பாஸ் பண்ணிடும் போலிருக்கே."

"இந்த உதவாக்கரைப் படிப்பைச் சொல்லலே நான்."

"என்னது! உதவாக்கரைப் படிப்பா? எது?"

"எது? இந்த எம்மே., எல்டி, இஞ்ஜினீர் - இதெல்லாம்தான்."

தண்டபாணிக்குத் தூக்கிப் போட்டது சற்று.

"நீ என்ன சொல்றே, அலங்காரம்?"

"இது வெறும் அலங்காரப் படிப்புன்னா, சவத்துக்கு அலங்காரம்

பண்றாப்போல . . . இந்தப் படிப்புத்தான் எல்லாரும் படிக்கிறாளே. அவனைப் பெரிய படிப்பா, உசிருள்ள படிப்பா, படிக்க வைக்கணும்."

"உசிருள்ள படிப்பா? அப்படின்னா?"

"வேதம் படிக்கணும். அத்யயனம் பண்ணி அதைக் கரைச்சுக் குடிச்சு தேஜஸ்வியா ஜொலிக்கணும் அவன். அவன் நெருப்புமாதிரி வந்து நிற்கிறபோது, யார் வந்து அவன் முன்னாலே நின்னாலும், அவா மனசிலே இருக்கிற கரி கசண்டெல்லாம் பொசுங்கிப் போகணும். அவன் ஸ்வாமி மாதிரி, பிரகஸ்பதி பிள்ளை மாதிரி நிக்கணும்."

"என்ன அலங்காரம் இது!" . . .தண்டபாணி சங்கா தோஷம் வந்தவளைப் பார்ப்பதுபோல் சிறிது நேரம் பார்த்தார். பிறகு இழுத்தார்: "இஞ்ஜினீர் இன்ஜினீர்ங்கறது குழந்தை. . ."

"குழந்தைதானே. நான் சொல்லிக் கொடுத்ததைத் தானே சொல்றது. இப்ப மாத்திச் சொல்லிக் கொடுத்துட்டாப் போறது."

"நிஜமாவா நீ அப்படி ஆசைப்படறே?"

"இந்த மாதிரி கேள்வியெல்லாம் கேட்கப்படாது எங்கிட்டன்னு சொல்லியிருக்கேனே."

பேசாமலிருந்தார் அவர். சற்றுக் கழித்து, "வேதம் படிச்சா எப்படிப் பிழைக்க முடியும் இந்தக் காலத்திலே, அலங்காரம்? ஊரான் கையை நம்பிண்டு, ஊரான் அலட்சியத்துக்கெல்லாம் ஆளாகும்படியான்னா வேதம் படிச்சவர்களை ஆக்கியிருக்கு உலகம்?"

"அது கைநீட்டி வாங்கற புரோகிதனைன்னா?" என்றாள் அலங்காரம் வெடுக்கென்று.

"வேதம் படிச்சவனுக்கு வேறு என்ன வேலை கிடைக்கும்?"

"வேதத்தோட தலையிலே இருக்கிறவன் ஏதாவது படியளக்க மாட்டானா? அப்பு வெறும் சப்பைப் பஞ்சாங்கக்காரன் மாதிரி வாழைக்காய்க்கும் அரிசிக்கும் அலைஞ்சுடுவன்னு நினைச்சேளா? பூரி வாங்கற வைதீகன் மாதிரியா அவன் படிப்பான், படிச்சா?. . . என்னமோ எனக்கு அவனைப் பெரிய வேத வித்தாப் பார்க்கணும்னு ஆசையாயிருக்கு. வேதம் படிச்சுட்டு வரட்டுமே. அம்பது வயசுக்கப்பறம்

உங்க சிநேகிதர் வக்கீல் வாசு அய்யங்கார் வேதம் படிச்சு, தலைகீழ்ப் பாடமா சொல்றாரே - முரட்டுக் கனபாடிகளோடெல்லாம் கையைக் கோத்துண்டு - அந்த மாதிரி இவன் வேதம் படிச்சுட்டு, அப்புறம் வக்கீலாவோ புரொபசராவோ ஆகட்டுமே."

அவர் அன்று பதில் சொல்லவில்லை. பிறகு, இரண்டு நாள் மாடிக்கு வந்தாள் அலங்காரம். அப்போதும் சொல்லவில்லை. நான்காம் நாள் சொல்லிவிட்டார். "உன் மனசுப்படியே ஆகட்டும், அலங்காரம்" என்றார்.

"உங்க மனசையும் சேத்துக்கணும்னுதானே நான் இவ்வளவு சொல்றேன்."

"எனக்குப் பூரண சம்மதம். நம்ம வம்சத்திலே இந்த மாதிரி ஒரு மகாவித்யை ஒருத்தனுக்குக் கிடைக்கிறதுன்னா நான் ஏன் வேண்டாம்னு சொல்லப் போறேன்? நீ முந்தாநாள் சொல்றபோதே எனக்கு உடம்பெல்லாம் அப்படியே சிலிர்த்தது. . . ஆனா. . . என்னடா ஒரு பொம்மனாட்டி இப்படிச் சொல்றாளே, தீர்க்கமா யோசிக்காம எதாவது நடந்துடப் போறதேன்னு அப்படிப் பதில் சொன்னேன். ரண்டு நாள் யோசிச்சு, இப்ப நம்ம சுந்தரத்துக்கிட்டே கொண்டு விடறதுன்னு தீர்மானம் பண்ணியிருக்கேன் - பவானியம்மா பாடசாலையிலே. சுந்தரம் வேத வித்யையிலே கரை கண்டவன். காசி, கல்கத்தா, பிரயாகை, அங்கெல்லாம் மகா வித்வான்கள்ளாம் அவனைக் கூப்பிட்டுக் கௌரவப்படுத்தியிருக்கா. அவன்கிட்ட சொல்லிக்கட்டுமே அப்பு!"

அலங்காரம் பதில் சொல்லவில்லை. பேசாமலிருந்தாள். நாலைந்து விநாடி கழித்து அவள் முதுகு சொடுக்கிற்று. தோள் சுண்டிற்று.

"என்ன அலங்காரம்?"

"ஒரு க்ஷணம் நினைச்சுப் பார்த்தேன். உடம்பு சில்லுனு சிலுத்துது. அதுவும் சுந்தர மாமாகிட்ட படிக்கிறதுன்னா. . . படிச்சுட்டு வந்து, அப்பு தகதகன்னு அக்னி வந்து நிக்கறாப்பல, என்னைப் பார்த்து லேசாச் சிரிச்சுண்டு கையைக் கூப்பிண்டு நமஸ்காரம் பண்றாப்பல இருந்தது. அப்படியே ஒரு க்ஷணம் மெய்மறந்து போச்சு. . . ம். . . நிஜமா நீங்க தீர்மானம் பண்ணியாச்சா?"

"எனக்கு மட்டும் இந்த அசட்டுக் கேள்வியெல்லாம் கேட்டுண்டிருக்க முடியும்னு நெனச்சியா?" என்று அவள் தோளைத்

தன்மீது தள்ளி, அவள் முகத்தைத் திருப்பி, வாயைக் கவ்விக்கொண்டார் அவர். அப்படி எத்தனை நேரமிருந்தாரோ - ஒரு நிமிஷமோ, ஐந்து நிமிஷமோ, ஒரு யுகமோ. சட்டென்று அவரைப் பிடித்துத் தள்ளினாள் அலங்காரம். விளையாட்டாக அவரை ஒருக்களிக்க உருட்டினாள். அவர் கண்ணை ஒரு கையால் பொத்தினாள் - நாலைந்து கணங்கள் ஊர்ந்தன. கண்ணில் இருந்த கை நீங்கி அவர் தோளைப் புரட்டிற்று. திரும்பினார் அவர். அலங்காரம் எந்த அலங்காரமுமில்லாமல் குழந்தையாகக் கிடந்தாள். பெரிய குழந்தையாகக் கிடந்தாள். என்ன வடிவம்! என்ன வாட்ட சாட்டம்! என்ன திரட்சி! எவ்வளவு அங்க நிறைவு! மார்பில் திருமங்கல்யம் மட்டும் ஒரு ஓரமாகக் கிடந்தது. 'இவ்வளவும் எனக்குத்தான் - எனக்குத்தான்' என்று அவர் மனம் விம்மிற்று. நாளங்கள் புடைத்தன. மேனி வெதவெதத்துக் கொதித்தது. கையால் தோளிலிருந்து மார்பு, வயிறு, இடை, மீண்டும் ஏற்றம், முழங்கால், குதிரை முகம், பாதம் விரல்வரை தடவினார். இறுக அணைத்தார். அவ்வளவு பெரிய ஆகிருதியை, அழகை, கட்டை, கட்டியாண்டு விட வெறிகொண்டு துடித்தன உடலும் உள்ளும். இறுக்கினார். புதைத்தார் . . . கலியாணமாகிப் பன்னிரண்டு வருடங்களில் அவர் அந்த மாதிரி ஒரு அனுபவத்தைக் கண்டதில்லை. அப்படி மறந்ததில்லை. அவளையும் அந்த மாதிரி மறந்து கண்டதில்லை . . . பாங்க் மணி இரண்டு அடித்தது. அவருக்கு அயர்வு நிறைவும் ஒடுக்கமுமாகக் கண்ணிமையை வந்து அழுத்திற்று. அந்தக் கண் மூடலுக்குள் அலங்காரத்தின் உருவம் அப்பட்டமாக அடைத்து நீண்டு கிடந்தது. சிரமப்பட்டுக் கண்ணைத் திறந்து லேசாகப் பார்த்தபொழுது, அலங்காரம், மீண்டும் உடுத்தி, தன்னை மறைத்து, பழைய அலங்காரமாகக் கிடந்தாள். அந்த மறைவைப் பார்க்க மனமின்றி மீண்டும் கண்ணை மூடிக் கொண்டார் அவர். பர்த்ருஹரி எழுதினானே, 'அனைத்தையும் மறந்து ஒருமுகமாகப் பெண்ணோடு கூடும் லயத்தை உணராதவன்கள் பேரின்பம் பேரின்பம் என்று அலைகிறான்கள்' என்று சொன்னானே - இன்று வந்த மாதிரி - இணையில்லாத - இரண்டில்லாத ஒரு நிலையில் திளைத்துத் தான் சொல்லியிருக்க வேண்டும்.

அது அந்தக் காலம்!

அன்று வந்த இணையில்லாத அந்த நிலை, பிறகு அவருக்குக் கிடைக்கவில்லை. மறுநாளிலிருந்து மொட்டை மாடி சூன்யமாக ஆகிவிட்டது. அலங்காரம், அன்று அந்த உச்சத்தில் அவரை ஏற்றிவிட்டவள், அதன்பிறகு அப்படி அங்கு வரவில்லை. எத்தனை வருடம்! எத்தனை வருடம்! நேற்றுப்போல இருக்கிறது. ஆனால்,

எத்தனை யுகம்! எத்தனை யுகம்!

தண்டபாணிக்கு இப்போது நினைக்கும்போது, பழிகார முண்டை என்று குமைந்தார். அலங்காரம் என்று பெயர் வைத்தார்களே சரியாக - லக்ஷ்மி, சரஸ்வதி, விசாலம், கௌரி, சங்கரி - என்று இத்தனை பேர்களை விட்டுவிட்டு அலங்காரமாம் - அலங்காரமாம்! தேவடியாளுக்கு வைக்கிறாற்போல!

முப்பது வருடங்களாகக் கேட்டுக்கொண்டிருக்கிற பாங்க் பாரா மணி இப்போது கேட்கிறது. இரண்டு அடிக்கிறது. முனகினார் தண்டபாணி.

வழக்கம்போல் மூன்று மணிக்கு எழுந்திருக்கவில்லை அவர். "கரா கரா. . ." என்று யாரோ கத்துகிற நாராசத்தைக் கேட்டு, கண் திறந்துகொண்டது. பொழுது வெளுத்துக் கிடந்தது. கழுத்தில்கூடச் சாம்பல் இல்லாத ஒரு அட்டைக் கறுப்பு அண்டங்காக்கை மாடிப்படி நிலைக்குமேல் அமர்ந்து காறிக் கொண்டிருந்தது. பொழுதைப் பார்த்தவர் செய்யக்கூடாததைச் செய்துவிட்டதுபோலப் பரபரவென்று எழுந்து, பாயைச் சுருட்டி உள்ளே வைத்துவிட்டுக் கீழே இறங்கினார்.

* * *

அப்பொழுது நன்றாகச் சூரியோதயமாகிவிட்டது. மாடிப்படி இறங்கியதுமே தண்டபாணியின் முகம் சிணுங்கிற்று. ஊஞ்சல் பலகைக்குப் பக்கத்தில் ஒரு பாயில் கட்டம் போட்ட கருப்புப் போர்வையால், உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரை மறைத்து ஒரு உருவம் படுத்திருந்ததைக் கண்டுதான் அந்தச் சிணுக்கம். கடைசிப் பையன் பல் தேய்த்துவிட்டு முற்றத்திலிருந்து தாழ்வாரத்திற்கு ஏறி, மாடத்து மடலிலிருந்து விபூதியை எடுத்து நெற்றியில் பூசிக்கொண்டான். அதனால் படுத்திருப்பது மூன்றாவது பையன் கோபுவாகத்தான் இருக்க வேண்டும். ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த காவேரி, தகப்பனார் இறங்கி வருவதைப் பார்த்து எழுந்தாள். "எழுந்திரேன், அண்ணா, மணி ஏழரையாயிடுத்து" என்று அவர் முகத்தைப் பார்த்துவிட்டுக் கத்தினாள்.

"வாக்கிங் போய்ட்டு வந்தாச்சாப்பா?" என்று உடனே அவரைக் கேட்டாள்.

"இல்லேம்மா. இப்பதான் இறங்கி வரேன்."

"தலை வலிக்கிறதா? ஏம்பா?"

தண்டபாணிக்கு அந்தப் பரிவைக் கேட்டு, வெயில் புறப்பட்டும் தூங்கும் 'மூதேவி'யைக் கண்ட சிணுக்கம்கூட மறைந்துவிட்டது. பெண் குழந்தை பெண் குழந்தைதான் என்று ஆறுதலுடன் சற்று விம்மினார்.

"அதெல்லாம் ஒன்றும் இல்லேம்மா. என்னமோ ராத்திரி ரொம்ப நாழியாயிடுத்து தூங்க. ஏமாந்து போய்ட்டேன். கண்ணைத் திறந்தா விடிஞ்சு கிடக்கு"

"அப்படின்னா நாலு மணி, அஞ்சு மணிக்குத்தான் தூங்கியிருப்பேள். நீங்க இத்தனை நாழி கழிச்சு எழுந்துண்டுதில்லையேப்பா. . . அண்ணா, அண்ணா, எழுந்திரேன்" என்று மீண்டும் கத்தினாள் காவேரி.

"அவர் ஆறு மணிக்குத்தான் தூங்க ஆரமிச்சாரோ என்னமோ! அவரை ஏண்டி எழுப்பறே?" என்று அவர் பல்பொடியை எடுத்தார். சமையல் உள்ளிலிருந்து மூத்த பையன் காப்பியைச் சாப்பிட்டுவிட்டு, பையும் கையுமாகக் கறிகாய் மார்க்கெட்டுக்குக் கிளம்பிக்கொண்டிருந்தான்.

"காவேரி, இதை அண்ணாகிட்ட கொண்டுகொடு" என்று மாட்டுப்பெண் ஒரு டம்ளர் காபியை விபூதி இட்டுக் கொண்டு எதிர் அறைக்குப் போன சின்ன மைத்துனனுக்காகக் கொடுத்தாள். காவேரி அதை வாங்கிக்கொண்டு போகும்பொழுதே, கீழே படுத்திருந்த உருவம் போர்வையை விலக்கி முகத்தைக் காட்டிற்று. ஒரு சோம்பல் முறித்துவிட்டு எழுந்தது. அது பெரிய உருவம். தலையில் கட்டை மயிர்க் கிராப்பு. லேசாக ஒன்றரைக் கண். ஒரு கண் சற்றுச் சிறுத்து இடுங்கினாற்போலிருக்கும். பெரிய முறுக்கு மீசை. மார்பெல்லாம் பொச பொசவென்று மயிர். இடையில் ஒரு லுங்கி. அந்தப் பெரிய தலையையும் மீசையையும் ரோமங்களையும் லுங்கியையும், முழங்கால்கள் சேர்த்து, அதற்குக் கீழ் கால்கள் பிரிந்து, ஒரு முழ நிரந்தர இடைவெளியுடன் நிற்கும் பாதங்களையும் பார்க்கும்பொழுது, ஒரு பெரிய வெண்ணிறத் தாடி வெள்ளாடு ஆங்காங்குக் கருப்புச் சுட்டி சுழிகளுடன் நிற்பதுபோலத் தண்டபாணிக்குத் தோன்றும். பல் தேய்த்துக்கொண்டிருந்தவர் ஓரிரண்டு தடவை திரும்பியும் சிறிது கடைக்கண்ணாலும் தன்னைப் பார்த்தது அந்த

உருவத்திற்குத் தெரிந்துவிட்டது போலிருக்கிறது. பாயைச் சுருட்டி, அப்பாவாக இருக்கிறாரே - மரியாதை காட்டித் தொலைக்க வேண்டியிருக்கிறதே என்று மனதைச் சுளுக்கிக்கொள்வதுபோல, தம்பி படிக்கிற அறைக்குப் போய் உட்கார்ந்து சோம்பலை முழுவதும் முறித்துத் தெளிவதற்காகப் போயிற்று. தண்டபாணி வாயைக் காறிக் கொப்பளித்து விட்டு, குளிக்கும் அறைக்குள் புகுந்து, விஷ்ணு ஸகஸ்ரநாமம் சொல்லிக்கொண்டே அண்டாவிலிருந்த நீரைச் செம்பு செம்பாக எடுத்துத் தலையில் கவிழ்த்துக்கொண்டார்.

'குளிக்கிறது நானில்லை; என் உடம்பு குளிக்கிறது. கால் விரல் அழுக்கெல்லாம் விரல் தேய்க்கிறது; நானில்லை. "நானு"க்கு அழுக்கும் கிடையாது, குளியலும் கிடையாது. இந்த உடம்பு நானில்லை. அது பிரகிருதி; இது வெறும் ஜடம். வியாதி, கஷ்டம், பிடுங்கல், தொல்லை - எல்லாம் அதற்குத்தான்; எனக்கு இல்லை. நான் ஒரு தொல்லையையும் வாங்கமாட்டேன்; ஏற்கமாட்டேன். நான் ஈசுவரனின் பிம்பம்; இல்லை, ஈசுவரனே தான். ஈசுவரனை எந்தக் கஷ்டம், எந்த ஏக்கம் வாட்டமுடியும்? ஏக்கம், துன்பம் எல்லாம் உடம்புக்கு அல்லவா? நான் ஈசுவரன். ஸகஸ்ரநாமம் எனக்குத்தான் சொல்லிக்கொள்கிறேன். என் பெருமைதான் அது' - என்ற, இரண்டு மூன்று பேர் சொன்ன தத்துவங்களைக் கலந்து ஒரு உருவமாக்கிப் பயிற்சி செய்துகொண்டேயிருந்தார் அவர். "இன்றைக்கு 'எட்டி பேக்க'ரை மறுபடியும் படிக்க வேண்டும். ஒரு பொம்மனாட்டி! எப்படி ஈச்வர தத்துவத்தை அனுபவித்து அனுபவித்துத் தோய்ந்திருக்கிறாள். இந்த ஊர்ப் பயல்கள், சமுத்ரத்தைத் தாண்டி அக்கரையில் இருக்கிற பயல்களெல்லாம் வெறும் வ்ராத்யன்கள், நாம்தான் சர்வத்தையும் கண்டுவிட்டவர்கள் - என்று பாலையும் வாழைப் பழத்தையும் பன்னீரையும் சிக்கெண்ணெயையும் ஊரிலிருக்கிற கல்லின் தலையில் கொட்டிக்கொண்டு அலைகிறான்கள். அந்தக் கல்லைப் போலவே இவன் புத்தியும் சிக்குப் பிடித்து, பொருக்குத் தட்டி, பிசுக்கு ஒட்டி, மக்காகக் கட்டிதட்டிக் கிடக்கிறது. . ."

எங்கோ ஓடுகிற மனதை இழுத்து மீண்டும் ஞாபகப்படுத்தி "விச்வமூர்த்திர் மஹாமூர்த்திர், தீப்தமூர்த்தி ரமூர்த்திமான்! அநேகமூர்த்தி ரவ்யக்த: சதமூர்த்தி: சதாநந:" என்று மீண்டும் மனசுக்குள் சொல்லத் தொடங்கினார் அவர். . .

கூடத்திலிருந்து ஏதோ புதுக்குரல் கேட்கிறது. தண்டபாணியின் மனம் பிரிந்து கூடத்திற்குப் பாய்ந்தது.

"ஊட்டியிலேருந்து வரேன் மன்னி. . . நேரே காரிலே வரேன். . ."

"உட்காருங்களேன்" - அலங்காரத்தின் குரல்.

சிவசுவின் குரல்தான் அது. இன்னும் சிறிது நேரம் கழித்துப் போகலாம். ஆனால், குளியல் தீர்ந்துவிட்டது. விரல் அழுக்கைக் கூட எடுத்தாகிவிட்டது. எத்தனை நேரம்தான் குளிக்கிற உள்ளில் நிற்க முடியும்? வேட்டியைப் பிழிந்துகொண்டு அரையில் ஈரத்துண்டுடன் கூடத்திற்கு வந்தார் தண்டபாணி.

சிவசு சமையல் அறையைப் பார்த்தவாறு ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தான். பக்கவாட்டில் தூணோரமாக அலங்காரம் நின்றிருந்தாள் - புடவையால் வலது தோளைப் போர்த்திக் கொண்டு. அவள் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்த சிவசு தண்டபாணியைக் கண்டதும் "நமஸ்காரம் அண்ணா?" என்று ஊஞ்சலைவிட்டு எழுந்தான்.

"வாங்கோ, எப்ப வந்தாப்பல. . .?"

"இப்பதான். ஊட்டிக்குப் போயிருந்தேன். இங்கிலீஷ் கறிகாய் எல்லாம் கொஞ்சம் வாங்கிண்டு வந்தேன். இங்கே கொஞ்சம் கொடுத்துட்டுப் போகலாம்னு வந்தேன்."

"உட்காருங்கோ. . . எழுந்திருப்பானேன்?" என்றார் தண்டபாணி.

அலங்காரத்திற்கு முன்னால் ஒரு கூடை. அதில் காரட்டு, முள்ளங்கி, தக்காளி, நூல்கோல், இன்னும் பெயர் தெரியாத இரண்டு மூன்று காய்கறிகள், ஆரஞ்சு, ஆப்பிள், வால்பேரிப் பழங்கள், காம்பு ஒடிக்காத வெங்காயம். . .

"உட்காருங்கோ. . ." என்றார் மீண்டும் தண்டபாணி அவனை நிமிர்ந்து பார்த்து.

சிவசுவைச் சற்று நிமிர்ந்துதான் பார்க்க வேண்டும். அவன் அத்தனை உயரம். உடல் இரட்டை நாடியில்லை; ஒற்றை நாடியுமில்லை. மொழுமொழுவென்று பூசினாற்போலிருக்கும். நிறம் மாநிறத்துக்குச் சற்றுக் கூடுதல். பெரிய தலை. ஆனால், அழகான தலை. செதுக்கினாற்போன்ற நீள மூக்கு. கண்ணும் பெரிய கண். தலையில் லேசாக அலையிட்ட கிராப்பு. நெற்றி முகட்டையும் அடைத்து, நெற்றியையே அகலக் குறைவாகக் கூடக் காட்டிற்று அது. முக

அமைப்புக்கூட நம்மூர் அமைப்பு இல்லை. ஏதோ பாஞ்சாலம், துருக்கி, பாரசீகம் - அந்த மண்ணில் அமைந்த மாதிரி இருக்கும். அதே மேனிகூட. கை கால் இரண்டிலும் ஒரு அசாதாரணமான மெருகு. ஊட்டத்தின் மெருகு. விரல்களும் நீளமாக மழமழவென்று, படல் நகங்கள் பளபளக்கப் பெருத்திருக்கும். இரண்டு கைகளிலும் சின்ன விரல், மோதிர விரல் - இரண்டிலும் மோதிரங்கள் மின்னின. லேசாக ஒரு தொந்தி. ஜிப்பா போட்டிருந்தான் அவன். அந்த உயரத்தில் தொந்தி தனியாகத் தெரியாமல் மார்பிலிருந்து வரும்போது, சற்று மேடிட்டு மீண்டும் நீளமாகச் சரிந்தது. அரையில் கட்டியிருந்த வேட்டிக்கு ஒன்றரை அங்குல அகலத்தில் கப்புச் சிவப்புச் சிவராயர் கரை. அது அவன் காலின் மழமழப்பையும் மெருகையும் கூட்டிக்காட்டிற்று. அவனுக்கு வயது நாற்பத்தெட்டு இருக்கும். ஆனால் அந்த உடலில், மெருகில், வனப்பில், களையில், முடியில் முழங்கினது முப்பத்தைந்துதான். கண்ணில் தெரிந்தது அதற்கும் ஐந்து குறைவு. இருபது வருடங்களுக்கு முன்னால் அவனைப் பார்த்தவர்கள், அவன் இன்று மாறியிருப்பதாகவே சொல்லமாட்டார்கள். சற்றுக் கூடி வைத்த சதைப்பற்று, லேசாக வயிற்றில் விழுந்த மேடு - இவற்றைத் தவிர வேறு எந்த மாறுதலையும் காண்பதற்கில்லை. அப்படி ஒரு இளமை அவன் காலைச் சுற்றிச்சுற்றி அடிமையாகக் கிடந்தது. அவனுடைய சொத்தில் பாதியோ, காலோ உள்ளவர்கள், தின்றோ, மேலும் பணம் பணம் என்று பறந்தோ தங்கள் வயசோடு இன்னும் இருபது வயதைச் சேர்த்து உடம்பிலும் தோலிலும் சுமந்து தள்ளாடியிருப்பார்கள். இவனையோ, உரிமையுள்ள வயதுகூட அணுகக் கூசினாற் போலிருந்தது. ஆனால் அவன், தின்பதோ சம்பாதிப்பதோ குறைச்சலாக இல்லை என்பது ஊர் அறிந்த செய்தி.

அவனுக்குத் தஞ்சாவூர் ஜில்லாவில் நூற்றைம்பது வேலிச் சொத்து. பூர்வீகம் நூற்றிருபதுதான். இவன் தலைப்பட்டு இன்னொரு முப்பது சேர்த்துவிட்டான். ஒரு நாலு தொழில் முயற்சிகளில் அவன் டைரக்டர். பாங்குகளில் ரொக்கம், பங்குகள். குற்றாலம், கோடை, நீலகிரி, சென்னை - இப்படி ஊருக்கு ஒரு வீடு. தாத்தா பெயரில் ஊரில் ஒரு பள்ளிக்கூடம். நாலைந்து கல்லூரிகளில் அவர் பெயரிலேயே ஏழை மாணவர்களுக்கு உதவி மான்யங்கள் - இன்னும் பல விவகாரங்கள்.

"உட்கார்ந்துங்கோளேன்" என்றார் தண்டபாணி.

"பரவாயில்லேண்ணா. . . நீங்க ஈரத்தோடே நிக்கறேளே."

"நீங்க உட்காருங்கோ. நான் போய் வேஷ்டியைக் கட்டிக்கிறேன்.

ஆத்திலே எல்லாரும் சௌக்கியம்தானே?" என்று கேட்டுக்கொண்டே மாடிக்குப் போகத் திரும்பினார் தண்டபாணி.

"சௌக்கியம்தாண்ணா."

தண்டபாணி மாடிப்படி ஏறினார். சிவசு ஊஞ்சலில் உட்கார்ந்துகொண்டான்.

வேஷ்டியைக் கட்டிக்கொண்ட தண்டபாணி கீழே இறங்கிப் போகவில்லை. அறையிலிருந்த பெஞ்சின் மீதே ஜபத்திற்கு உட்கார்ந்துவிட்டார்.

அந்தக் காலத்தில் ஒருநாள் சிவசு, தன் தங்கை ஜாதகத்தையும் ஒரு ஏழெட்டு வரன்களின் ஜாதகங்களையும் கொண்டு வந்தான். பொருத்தம் பார்த்துச் சொல்லுமாறு சொல்லி, மறுநாள் வருவதாய்ப் போனான். மறுநாள் வந்தான். மறு நாளும் வந்தான். அதற்கு மறுநாளும் வந்தான். இன்னும் நூறு ஜாதகங்களைக் கொண்டுவந்தான். வாராவாரம் ஒருநாள் இரண்டு நாளாவது வராமல் இருக்கமாட்டான். அப்படித்தான் அவனுடைய சிநேகம் ஆரம்பமாயிற்று. தண்டபாணி சல்லடைபோட்டு, வஸ்திரகாயம் பண்ணி ஒரு ஜாதகத்தை எடுத்துக் கொடுத்தார். இதுதான் நடக்கும் என்று ஏதோ சொல்லி வைத்தார். அதுதான் நடந்தது. சாதாரண, ஆனால் கௌரவமான இடம். அடக்கமான பையன். பெரிய பதவி. சிவசுவுக்கு ஆனந்தம் தாங்கவில்லை. தண்டபாணி போட்ட கணக்குகளுக்காக ஒரு ஆயிரம் ரூபாயைச் சன்மானமாகக் கொடுத்தான். பத்தாறு வாங்கிக் கொடுத்தான். அவர் சம்சாரத்திற்கு ஒரு பட்டுப் புடவை வாங்கிக் கொடுத்தான். "மங்களத்துக்கு நீங்கதாண்ணா விளக்கேத்தி வச்சேள். இல்லாட்டா அவசரப்பட்டு எதாவது பண்ணியிருப்பேன், எங்க சித்தப்பா பேச்சைக் கேட்டு" என்று நமஸ்காரம் பண்ணி நன்றியுரைத்தான். ஆனால் காரியமானதோடு நின்றுவிடவில்லை. சிநேகிதனாகவே தொடர்ந்து பழகினான். பழகிக்கொண்டேயிருக்கிறான். பட்டணத்தில் இருந்தால் நான்கு நாளுக்கொருமுறை இங்கு வராமல் இருக்கமாட்டான். விரை தெளிப்பது, நடவு, அறுப்புச் சமயங்களில் கிராமத்துக்குப் போவான். அப்போது மட்டும் ஒரு மாதம் இரண்டு மாதம் என்று தொடர்ந்தாற்போல அங்கேயே தங்கிவிடுவானோ என்னவோ. . .

ஜபம் செய்யக் கண்ணை மூடிய தண்டபாணியின் கண்ணில் சிவசுந்தரத்தின் போக்குவரத்துகள்தான் வந்து கொண்டிருந்தன. எனவே அதை ஒதுக்க மீண்டும் மந்திரத்தை மனதுக்குள் சொல்லி, அதையே

பார்த்துக் கேட்க ஆரம்பித்தார்.

சிறிது நேரம் பேச்சுக் கேட்கவில்லை. அலங்காரம் சிவசுவுக்குக் காபி கொண்டுவர அடுக்களைக்குள் போயிருக்கிறாளோ என்னவோ. . .

"வாங்க சார் - எப்ப வந்தீங்க?" என்று கோபுவின் குரல் கேட்கிறது. பிள்ளையாண்டான் இப்போதுதான் காலைக் கடனை முடித்துவிட்டுப் பல் தேய்க்கத் திரும்பியிருக்கிறான் போலிருக்கிறது.

"யாரது? அட! கோபுவா? . . . இப்பதான் வரேன். என்னடாது? நீ எப்ப மதம் மாறினே?"

சிவசுவின் குரல்.

"இடுப்பிலிருக்கிறதைப் பார்த்துச் சொல்றீங்களா? இது கைலி இல்லே சார் - லுங்கி - சராங். சிங்கப்பூர்லேந்து நம்ம ப்ரண்டு போன வாரம் வந்தாரு. . . வாங்கிட்டு வந்து கொடுத்தாரு."

"நீ மட்டும் குட்டையா ஒரு முழுக் கை தொளதொள சட்டையும் அகலமா ஒரு பெல்ட்டும் போட்டுண்டியோ, எங்க ஊர் ரஹ்மான் ராவுத்தர் ஸபுரு போய்ட்டு நாகப் பட்டணத்திலே கப்பல்லெ இறங்கி வர்றாப்பலியே இருக்கும்"

"பாரும்மா - சார் ஸத்தாய்க்கிறதை. இது நைட் டிரஸ் சார் - காப்பி சாப்பிட்டீங்களா, சார் - காவேரி! சாருக்குக் காபி கொண்டு கொடுடீ. . ."

"நீ சாப்பிடுடா முன்னாடி. . . அப்புறம் முடிஞ்சா எனக்கும் கொண்டா. கோபு மரக்காயர் கொடுத்துத்தான் நான் சாப்பிடறேனே இன்னிக்கி."

"கொடுக்கறேன் சார்."

"நீதான் கொடுக்க வேண்டும். . . காவேரியா கொடுக்கப் போகிறாள்? இல்லை, வேம்பு கொடுக்கப்போகிறானா?"

சிவசு வந்தால் அதிகமாகப் பேசுவது கோபுதான். வேம்புவும் காவேரியும் "வாங்கோ, உட்காருங்கோ" என்று சொல்லிவிட்டுத் தங்கள் அறைக்குள் முடங்கிவிடுவார்கள். "என்ன காவேரி, லக்ஷியமே பண்ணமாட்டேங்கிறியே?" என்பான் சிவசு. அதற்குப் பதிலாக ஒரு

புன்னகையைக் கொடுத்துவிட்டு உள்ளே மறைந்துவிடுவாள் காவேரி. "லட்சியம் பண்ணாமல் தான் இருக்கிறேனே. அதைச் சொல்லி வேறு நீயாக அம்பலப்படுத்திக்கொள்வானேன்!" என்பது போலிருக்கும் - அவள் புன்னகையும் அதுவும் அவளும் மறைகிற சுருக்கும். வேம்பு மட்டும் நின்று ஒரு வார்த்தை கேட்டுவிட்டுப் போவான். "பட்டு என்ன மாமா பண்றான்?"

"பீயூசி வாசிக்கிறாண்டா."

"என்ன எடுத்துண்டிருக்கான்?"

"காமர்ஸ் - லாஜிக்."

"ஏன், ஆடிட்டராப் போகலாம்னு நெனச்சிருக்கானா?"

"அவன் இதிலே கரையேறட்டும் முதல்லே. . ."

வேம்பு அவ்வளவோடு உள்ளே போய்விடுவான். பெரியவர்களோடு நமக்கென்ன என்று சொல்வது போலவும் இருக்கும்; நான் உன்னோடு இவ்வளவு பேசினதே அதிகம் என்று சொல்வது போலவும் இருக்கும் - அவன் அப்பால் போவது.

முன்பெல்லாம் அப்படியில்லை. அண்ணா என்று கூப்பிட்டுக்கொண்டே அவன் உள்ளே வந்ததும் காவேரி, வேம்பு யாராவது அவசர அவசரமாக மாடி ஏறி வந்து, "அப்பா, அப்பா, அவர் வந்திருக்கார்ப்பா" என்று தழைந்த மரியாதைக் குரலில் தெரிவிப்பார்கள். அவரும் இறங்கிப் போவார்.

ஒருநாள், "சரி, வரட்டுமே" என்றார் தலை நிமிராமல் தண்டபாணி. காவேரி திரும்பி இறங்கிவிட்டாள். சிவசு கீழேயே ஊஞ்சலில் உட்கார்ந்து பேசிவிட்டுப் போய்விட்டான்.

"இன்னிக்கி மத்யானம் சிவசு மாமா வந்திருந்தார்ப்பா" என்று இரவு அவர் அச்சாபீசிலிருந்து வந்தவுடன், பல செய்திகளுக்கு நடுவில் ஒன்றாகச் சொல்வார்கள். இப்பொழுது அதைக்கூடச் சொல்வதில்லை. அது அவ்வளவு முக்கியமான செய்தியில்லையா? அவன்தான் முக்கியமில்லாமல் போய்விட்டானா? இல்லை, பாலும் பழகிப் புளித்துப்போன சமாசாரமா?. . .

முகத்தைச் சுளித்துக் கொண்டார் தண்டபாணி - மனம் சூன்யமாகவில்லை, சாகவுமில்லை. பகவானைக் கடிந்து கொண்டார். உனக்கே இஷ்டமில்லையாக்கும் இங்குவந்து உட்கார? நானும் என்னாலான முயற்சியெல்லாம் செய்து பார்க்கிறேன். நீ மனது வைத்தால், இத்தனை அலைகளையும் ஓயச் செய்து, நீ வந்து உட்காரலாம். . . கும்பாபிஷேகம், கோவில் என்று அலைகிற பயல்களைத்தான் உனக்குப் பிடித்திருக்கிறாற் போலிருக்கிறது. . . என்று கோபித்து மீண்டும் மனதைச் சூன்யமாக்கிக் கொண்டார்.

சிவசு ஊட்டியின் குளிரையும் கோடைக்கானல் குளிரையும் ஒப்பிட்டுக் கொண்டிருக்கிறான். டில்லிக்கு விமானத்தில் போய்விட்டு வந்ததைப் பற்றிச் சொல்லுகிறான். . .

"அப்ப நான் வரட்டுமா. . . மன்னி?" என்று சொல்லிக்கொள்கிறான்.

'வரட்டுமா வரட்டுமா' என்று சொல்லுவது இது நாலாவது முறை உத்தரவு கிடைக்கவில்லை போலிருக்கிறது. அல்லது, ஊஞ்சலின் மகிமையாக இருக்க வேண்டும். அந்த ஊஞ்சல் அத்தனை அழகு. அது என்ன பலகையோ - தேக்கோ, கருங்காலியோ, பலாவோ - என்னவென்று கண்டுபிடிக்க முடியாமல் ஒரு வழவழப்பு, பளபளப்பு. நல்ல அகலம் வேறு - ஒரு ஆள் தாராளமாகப் படுத்துப் புரளலாம் . . . அகலமோ, பளபளப்போ, வைரமோ - அதில் உட்கார்ந்தால் ஒரு இதம், தன் வீட்டில் இருக்கிறாற்போன்ற ஒரு பாத்தியம் - எல்லாம் உண்டாகும். ஒரு ஜட ஊஞ்சலுக்கு எப்படி இவ்வளவு உயிர் வரும்! பிறரைச் சந்தோஷப்படுத்துகிற ஆற்றல்தான் எத்தனை! . . .

தண்டபாணிக்கு லேசாகப் புன்னகை வந்தது. கண்ணை மூடிக்கொண்டிருந்தவர், "மனசுகூட ஊஞ்சலாகத்தான் லேசாக ஆடுகிறது - நீ இதிலே வந்து உட்காரலாம் . . . இது தேக்கு ஊஞ்சலில்லை. நெட்டி ஊஞ்சல். மூச்சுவிட்டால் ஆடும். . . 'அதுகூடப் படாது - நான் வந்து உட்கார' என்று நீ சொல்லலாமோ. .? உனக்கு நெட்டியைவிட லேசாக இருக்க முடியுமே" என்று மல்லுக்கு நின்றுகொண்டிருந்தார். . .

மீண்டும் மனது வாலைச் சுருட்டிக்கொண்டது. படுதாவில் அசைவே இல்லை. கண்ணுக்குள் ஆரஞ்சு வர்ணம் மட்டும் குழம்பாகத் தெரிந்தது. . .

"அதெல்லாம் சரி, மன்னி. நீங்க ஆத்துப்பக்கமே வரலியே - வந்து மாசக் கணக்கா ஆயிருக்கும் போலிருக்கே. . . ரங்கம்கூட போன வாரம்

சொல்லிண்டேயிருந்தா - மன்னியைக் காணவேல்லியேன்னு. . ."

"பொய் பொய்" என்று மூடின கண்ணை இடுக்கினார் தண்டபாணி. புருவம் சுளித்தது. "ரங்கம் அப்படிச் சொல்லியிருக்கவே மாட்டாள். நீதான் சொல்லுகிறாய். அலங்காரத்தைக் குழியை வெட்டிப் புதைக்க வேண்டும் என்றுதான் அவள் சொல்லியிருப்பாள். . . அதுவும் சொல்வதற்கில்லை. ரங்கம் உண்மையாகவே அப்படிக் கேட்டிருக்கலாம். பொம்மனாட்டிகளில் ராட்சசிகளும் உண்டு. சீதையும் உண்டு. . . ராட்சசிகளிலேயே மந்தோதரி இல்லையோ. . ."

அலங்காரம் என்ன பதில் சொன்னாள் என்று காதில் விழவில்லை.

"நான்தான் இப்படி அலையறேன், வேலை மெனக்கட்டவன். . ." - சிவசுவின் குரல்.

"ஒழியவே இல்லை" என்று அலங்காரம் பதில் சொல்லியிருப்பாள் போலிருக்கிறது. அதைக் கேட்டுவிட்டுத்தான் இப்படிச் செல்லக் காய்ச்சல் காய்கிறான் சிவசு.

". . . இஷ்டமிருந்தா வரலாம். நானும்தான் வேலை செஞ்சுண்டிருக்கேன். நூத்தம்பது வேலி பயிர்ச் செலவையும் கவனிச்சுக்கறேன். கம்பெனி மீட்டிங்குக்குப் போறேன். பள்ளிக்கூடத்துக்கும் போய்க் கவனிச்சுக்கறேன். பட்டணம் வரேன். திருச்சி போறேன். ஊட்டிக்குப் போறேன். இங்கேயும் வரேன். வரணும்னு சிரத்தை இருந்தா வரலாம். அண்ணாவை அழச்சிண்டு நீங்கதான் வரப்படாதா என்ன?". . .

என்னை எதுக்காக அழச்சிண்டு வரணும்?. . . சிரத்தையா! ஏ அப்பா! பெரிய வார்த்தையாப் போடுகிறானே. பகவானைப் பார்க்கிற ஆசைக்குப் போடுகிற வார்த்தை ஆயிற்றே! . . .

"யார்ரீ அங்கே?. ." - அலங்காரத்தின் குரல்தான். வாசலில் சைக்கிள் ரிக்ஷா ப்ரேக் போட்டு நிற்கிற ஓசை.

"அப்பு அண்ணாம்மா! . ." காவேரியின் குரல்.

"என்னது!"

பெஞ்சில் உட்கார்ந்திருந்த தண்டபாணி விறுக்கென்று எழுந்து

ஜன்னலண்டை போனார். கீழே தெருவைப் பார்த்தார்.

அப்புதான், அப்புதான்! பெட்டியை எடுத்து வாசல்படியில் கொண்டு வைக்கிறான். அப்புதான்! குப்பென்று தொண்டையில் எதையோ அப்பி நிறைத்தாற்போலிருக்கிறது. அப்பு. . . அப்புதான்!

"அப்பா, அப்பா!" என்று குரல் கேட்டுத் திரும்பினார் தண்டபாணி.

காவேரி வகுப்பில் விடை சொல்லுவதுபோலக் கையைக் கையை உதறிக்கொண்டே, "அப்புண்ணாப்பா, அப்புண்ணாப்பா" என்று நெஞ்சுக்குள் எதையோ போட்டுக்கொண்டு குதித்தாள்.

தண்டபாணிக்கும் அப்படிக் குதிக்க வேண்டும் போலிருந்தது. ஆனால், அவர் நெஞ்சுக்குள் காவேரி மாதிரியே குதித்துக் கொண்டுதானிருந்தது.

"பார்த்தேண்டி."

"எங்கே?"

"இதோ."

"எப்ப?"

"இப்பத்தான் - இதோ."

"இதுகூட எனக்கு முன்னாலேயேதான் பார்க்கணுமாக்கும். மூஞ்சியைப் பாரு" என்று உதட்டைப் பிதுக்கினாள் காவேரி. தண்டபாணி இடையில் சுற்றியிருந்த உத்தரீயத்தைக்கூட அவிழ்த்து மேலே போட்டுக்கொள்ளாமல் காவேரியின் குதியைத் தொடர்ந்துகொண்டே கீழே இறங்கினார்.

வேம்பு படுக்கைச் சுருளை எடுத்து வந்தான். ரிக்ஷாக்காரன் ஒரு பெட்டியையும் அப்பு ஒரு பெட்டியையுமாக உள்ளே எடுத்து வந்தார்கள்.

"வாடா அப்பு."

"அப்பூ!" என்றாள் அலங்காரம்.

"அம்மா!"

"என்னடா கோபு, மீசையை எப்ப எடுத்தே?" என்று ஊஞ்சலைப் பார்த்தான் அப்பு. மறுகணமே சற்றுக் குழம்பி, உற்றுப் பார்த்தான்.

"சிவசு மாமாண்ணா!" என்றாள் காவேரி.

"ஆ! மாமா. . . சௌக்கியமா, சார்?" என்றான் அப்பு.

"சௌக்கியம்தான்."

"எந்த வண்டியிலே வரே?"

"தூத்துக்குடியிலேப்பா."

"அன்னிக்கே வரேன்னு எழுதியிருந்தியே!"

"எழுதியிருந்தேன். வாத்தியார் பேத்திக்குக் கலியாணம். உங்களுக்குப் பத்திரிகை வரலே?"

"வந்துது."

"அதுக்கு அத்தையும் புறப்பட்டுப் போனா. நான் வந்தப்பறம் போகலாம்னு சொன்னா."

"நீ போகலியோ?"

"வீட்டை யாராவது பார்த்துக்கணுமே. இருக்கச் சொன்னா. நம்ஸ்காரம் பண்றேம்பா" என்று அப்பா, அம்மா இருவரையும் விழுந்து வணங்கினான் அப்பு. "சிவசு சார், உங்களுக்கும் பண்றேன்."

"எனக்கு என்னத்துக்கு?" - கூசிக் குறுகி எழுந்தான் சிவசு. அதற்குள் அப்பு விழுந்துவிட்டான். எழுந்து காலைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக்கொண்டான். "அடாடா!" என்று நிர்மால்யம் காலில் பட்டுவிட்டது போலப் பின்னுக்கு நகர்ந்தான் சிவசு.

"என்னது! குழந்தை பண்றான்!" என்றாள் அலங்காரம்.

"குழந்தையா - நன்னாருக்கே" என்று அப்புவை நிமிர்ந்து பார்த்தான் சிவசு. சிவசுவே நிமிர்ந்து பார்க்கும் உயரம் அப்பு. பார்த்துக்கொண்டே

சொன்னான் சிவசு: "வேத வித்துன்னா! எனக்கு நமஸ்காரம் பண்ணவாவது. . . ஆனா, வயசிலே கூட இருக்கேனேன்னு காலைத் தொட்டுப்ட்டார். . . அதுவும் நல்லதுதான். அப்படியாவது தொடக் கிடைச்சுதே" என்று மீண்டும் குறுகினான் சிவசு.

"என்ன, நீளப் பேசிண்டே போறேளே!" என்றாள் அலங்காரம்.

தண்டபாணிக்கு முதுகுத்தண்டு சில்லிட்டது. "அட தடியா! . . உனக்குக்கூடவா இப்படியெல்லாம் பேசத் தோன்றுகிறது! ஒரு க்ஷணத்தில் பளிச்சென்று நல்லதாக ஒன்றைச் சொல்லிவிட்டானே. . . புத்திசாலியில்லாமலா இப்படி விளங்கறே நீ!" என்று மனத்திற்குள் திகைத்து நின்றார்.

அதற்குள், "நமஸ்காரம் பண்றேண்ணா" என்று காவேரி அப்புவின் முன்னால் வளைந்து வணங்கினாள். "நானும் பண்றேன்" என்று வேம்பு தொடர்ந்தான்.

மன்னி இதையெல்லாவற்றையும் பார்த்துக்கொண்டே எதிர் அறை நிலையண்டை வந்து நின்றாள்.

"யாரு, அங்கே?" என்று கேட்டுக்கொண்டே அப்போது கோபு குளிக்கும் அறையிலிருந்து வெளிப்பட்டு வந்தான். "அடேடே அப்புவா! எப்படா வந்தே!"

"இப்பதாண்டா வரேன்."

"நானும் நமஸ்காரம் பண்றேண்டா உனக்கு."

"ஏய், ஈர வேட்டியோட பண்ணாதேடா" என்று மறித்தார் தண்டபாணி.

"நீங்க போங்கப்பா; அப்பறம் மறந்து போயிடுவேன்" என்று அப்படியே விழுந்துவிட்டான் கோபு.

"டேய்! என்ன ஜோராயிட்டேடா நீ! என்ன ஹைட்டு! என்ன கர்த்து! நாளைக்கு நீ குடுமியை எடுத்திட்டு கிராப்பு வச்சுக்கடா. . . கிராப்பு மாத்திரம் வச்சான் அப்பு. . . இவன் பர்சனால்ட்டி ஒரு பயலுக்கு வராதும்மா இந்த மெட்ராஸ் ஸிட்டி முழுக்க . . . என்னா, சிவசு சார்! நான் சொல்றது சரிதானே. . . ரொம்ப ஜோரா இருக்கேடா!" என்று அவனைக்

கட்டிக்கொண்டு 'முச்'சென்று கன்னத்தில் ஒரு முத்தமிட்டான் கோபு.

"அச்சச்சோ!" என்று காவேரி குனிந்து முழங்கால் இடுக்கில் கையைக் கொடுத்துச் சிரித்தாள்.

"உட்கார்றா. . . இப்படி வாடா. . . ஊஞ்சல்லே உட்காரலாம். சிவசு சார், நீங்களும் உட்காருங்க. . . என்னம்மா காப்பி கொண்டாந்து கொடும்மா" என்று அப்புவை இழுத்துக்கொண்டு போனான் கோபு.

எல்லோரும் அப்புவைச் சுற்றிச் சுற்றி நின்றார்கள். சிவசு தனியாக நின்றான். நாலு விநாடி கழித்து "நான் வரேன், மன்னி" என்றான்.

"சரி" என்றாள் அலங்காரம்.

"நான் வரேன்" என்று பொதுப்படையாகச் சொல்லிக்கொண்டான் சிவசு. . .

"ரைட் சார். விஜிடெபிள்ஸுக்கெல்லாம் ரொம்ப தாங்ஸ், ஸார்."

அலங்காரம் மட்டும் இடைகழி வரையில் போனாள். திரும்பி வந்தாள். ஊஞ்சலண்டை வந்தாள். அவனைப் பார்த்தாள்.

அப்பு அக்னி மாதிரிதான் நின்றுகொண்டிருந்தான்.

"அம்மா!" என்று அவளைப் பார்த்தான் அப்பு.

அலங்காரத்துக்கு இரைத்தது - அப்படி அவனைப் பார்த்தாள். அப்புவுக்கு அந்த அலையைத் தாங்க முடியவில்லை. சட்டென்று எழுந்து பையிலிருந்து ஸ்ரீரங்கத்தில் வாங்கின பூப்பந்தை எடுத்துக்கொடுத்தான். "டேய், எத்தனை பெரிய குடுமிடா - பொம்பிளை மாதிரி - அவுத்துவிட்டா தலைமயிர் தொடை மட்டுக்கு வரும் போலிருக்கே! அப்படின்னா, பூவை இவனுக்குக் கொஞ்சம் வச்சிடும்மா" என்று அவனைத் தலையையும் மார்பையும் கையையும் மாறி மாறிப் பார்த்துப் பூரித்துக் கொண்டிருந்தான் கோபு.

காவேரி அதைப் பார்த்தாள். "என்னண்ணா, இப்படிப் பார்க்கறே. அப்புண்ணா மாதிரி உனக்கும் தட்டுக்கிடப் போறதேன்னு பார்த்து வச்சுக்கறயா" என்று சிரித்தாள்.

"தட்டுக்கிடவா? என்னது!"

"நீ குளிக்கப் போயிருந்தியோல்லியோ! அப்புண்ணா வந்து உள்ளே நுழஞ்சதும், ஊஞ்சல்லே சிவசு மாமா உட்கார்ந்திருக்கறதைப் பார்த்து, நீன்னு நெனச்சிண்டு, என்னடா கோபு, மீசையை எப்படா எடுத்தேன்னு சத்தம் போட்டுக் கத்தினாளே பார்ப்பம். சிவசு மாமா திரும்பினார். அப்புண்ணா மூஞ்சியை அப்ப பார்க்கணுமே. . ." என்று சிரித்தாள் காவேரி.

"சட்டுனு எதோ தட்டுகிட்டுப் போயிடுத்துடி."

"அதனாலென்னடி, என் பர்சனால்ட்டி ஜாஸ்தியாயிருக்குன்னுதானே ஆச்சு அப்ப? ஒரு ரண்டு செகிண்டு அப்படித்தான் இருக்கட்டுமே. . . சிவசு சார் மாதிரி பர்சனால்ட்டி, பணம், எல்லாம் இருந்திச்சின்னா நான் இங்கேயா இருப்பேன் - இந்த மாட்டுக்கொட்டா சந்திலே. . .? எங்கியோ இருப்பேன். சரி, இன்னக்கி ரண்டு சகிண்டு அப்படி ஆயிட்டேனாக்கும்!"

"சரிதாண்டா, சரி, பல்லைத் தேய்ச்சுட்டு வாடா குழந்தே. காபி சாப்பிடலாம்" என்று அலங்காரம் அப்புவை அவசரப்படுத்தினாள்.

"காபியா!. . . சரி. . . இதோ. . . வந்துட்டேன்."

"ஏண்டா, இழுக்கறியே. . . நீ காபி சாப்பிடமாட்டியா?" என்றான் கோபு.

"காபி ஏதுடா பாடசாலையிலே - அரிசிக் காப்பிதான்."

"நீராரமா! அதானே! இல்லாட்டி பர்சனால்ட்டி இப்படி இருக்குமா? யம்மா - அப்புவுக்கு ஒரு அண்டா நிறைய காப்பி போடு சொல்றேன்."

ஜாதகம் பார்க்க வந்த யாருடனோ பேசி மாடியில் உட்கார வைத்துவிட்டுத் திரும்பிய தண்டபாணி அங்கு வந்து நின்றார்.

"பவானியம்மா செளக்கியம்தானேடா, அப்பு?"

"செளக்கியம் தான்பா. உங்களை ரொம்ப விசாரிச்சா."

"அவ மருமா - அங்கதானே இருக்கா - இந்து?" என்றாள் அலங்காரம்.

"இருக்கா."

"ஏன், மாமியாரோட இல்லியா?"

"இல்லை, இங்கேதான் இருக்கா."

"ஏன்?"

"என்னமோ, ஒத்துக்கலியோ என்னமோ!"

"அப்படித் தகதகன்னு உருக்கி வார்த்த மாதிரி இருப்ப. அவளுக்கு வந்ததைப் பாரேன்" என்றார் தண்டபாணி.

"பாவம் - அப்பன்னா அங்க போறதேயில்லையா?"

"ம்ஹும்."

அந்தப் பெண்ணின் நினைவாகவே அப்புவின் முகத்தைப் பார்த்துக்கொண்டு நின்றாள் அலங்காரம்.

"ஏம்மா, பல் தேயின்னு அவனைச் சொல்லிட்டு, ஊர்க் கதையெல்லாம் பேசிட்டு நிக்கிறியே? டேய், நீ போடா, பல் தேயிடா. இங்கே வாடா, நான் பேஸ்ட் தரேன். இங்கே வாடா" என்று அவனை இழுத்துக்கொண்டு குளிக்கும் அறையில் விட்டு, எல்லாவற்றையும் கொடுத்துவிட்டு வந்தான் கோபு.

"ஈரத் துண்டோடவே இந்த உபசாரம் எல்லாம் செய்யணுமா? வேட்டியைக் கட்டிக்கோயேண்டா" என்றாள் அலங்காரம்.

"அவுருதான் வேதம் படிச்ச வித்வானாச்சே. அதனாலெ, ஆசாரமா ஈர வேட்டியோட கொடுத்திட்டு வர்றேன்."

"போறது. அதாவது தெரியறதே! உன் மீசையும் உன் தூக்கமும் நீயும். . ."

"என்னா அப்படிச் சொல்லிட்டே நீ! என் பர்சனால்ட்டிக்கு என்னாம்மா குறைச்சல்? அப்பு மாதிரி உசரமில்லை, அதுதானே? நான் தம்பிதானே! அதுக்காக அப்படியிருக்குறேன். வேற என்னா குறைச்சல்? அப்புவே சர்ட்டிபிகேட் கொடுத்திட்டானே - சிவசு சார் மாதிரி

இருக்குறேன்னு."

"சரித்தாண்டா போடா, போய் வேட்டியைக் கட்டிக்கோ முதல்லே" என்றாள் அலங்காரம். தண்டபாணி புன்னகை பூத்துக்கொண்டு நின்றார். அதையும் பார்த்தாள் அலங்காரம். வெறும் வறட்டுப் பார்வை. ஆனால் அது உள்ளுக்குள் அவரைச் சுட்டுச் சாம்பலாக்கிக் கொண்டிருக்கிறது என்று அவருக்கு உணராமல் இருக்க முடியவில்லை. சந்தோஷ வெறியில் அந்தப் புன்னகையை உள்ளே விழுங்கினார். அவர் நெஞ்சு அதை வாங்கிக்கொண்டு வெளியே தெரியாமல் சிரிக்கத் தொடங்கிற்று.

* * *

ஜாதகம் பார்க்க வந்தவர்கள் பார்த்துக்கொண்டு போய்விட்டார்கள். அவர்களை அனுப்பிவிட்டுத் தண்டபாணி கீழே இறங்கும்போது, இன்னொருவர் கீழேயிருந்து மேலே வந்துகொண்டிருந்தார்.

"நமஸ்காரம்" என்றார் வந்தவர் நிமிர்ந்துகொண்டே.

"நமஸ்காரம். இன்னிக்கி கடைகட்டியாச்சு ஸ்வாமி. இனிமே நாளைக்குத்தான். எனக்குக் கொஞ்சம் வேலையிருக்கு" என்று சொல்லிக்கொண்டே அவரைக் கடந்து இறங்கினார் தண்டபாணி. இறங்கி, அவரைத் திரும்பிப் பார்க்காமலே கூடத்திற்கு வந்துவிட்டார். கூடத்தில் எல்லோருக்கும் சாப்பிட இலை போடப்பட்டிருந்தது.

"அப்ப. . ." என்று கீழ்ப்படியில் நின்று இழுத்தார் வந்தவர்.

"நாளைக் காலமே வரலாம்."

வந்தவர் முகம் விழுந்து மெதுவாக நகர்ந்தார். காவேரி, அவர் வாசற்படி இறங்கியதும் கதவைத் தாழிட்டு வந்து, "பாவம்பா" என்று சொன்னவண்ணம், எல்லோரோடும் உட்கார்ந்துகொண்டாள்.

"அப்பா! என்ன இவ்வளவு நிர்தாக்ஷிண்யமா சொல்லி அனுப்பிச்சுட்டா. ஆச்சரியமா இருக்கே!" என்று அப்பு கண்ணை அகல விழித்துச் சிரித்தவாறு இலைமுன் உட்கார்ந்தான்.

"பின்னே என்ன? நம்பிக்கை இல்லாத காரியத்தை எத்தனை நாழிதான் போட்டுண்டு மாரடிக்க முடியும்?" என்று இலையில் நீரைத்

தெளித்துத் துடைத்தார் தண்டபாணி.

"நம்பிக்கை இல்லையா? என்ன இது!"

"பகவானை நிஜமா நம்பறவன் இப்படிக் கிடந்து அலைவானோ? இதிலெல்லாம் மனசைப் போட்டு இறைச்சா பகவான்கிட்ட நம்பிக்கை வராதுடாப்பா. இந்தப் பயல்கள் - என்னமோ எல்லாம் தாங்களே முன்னாடியே தெரிஞ்சுண்டு கிழிச்சுடப் போறாப்பல நினைச்சிண்டு அலையறான்கள்."

"அப்படின்னா நம்பிக்கை இல்லாமலா இத்தனை நாளும் நீங்க ஜாதகம் பார்த்துச் சொல்லிண்டிருக்கேள்!"

"நம்பிக்கையா! எனக்கா! லவலேசம் கிடையாதே. எனக்கு நம்பிக்கை இல்லே, என்னைத் தொந்தரவு பண்ணாதிங்கோன்னு சொல்லியுமாச்சு. கேக்கமாட்டேங்கறான்களே! நீங்க நம்பாட்டாப் பரவாயில்லே. அதுக்காக உங்க கணக்குப் பொய்யாயிடுமாங்கறான்கள். சரி, வாடகைக்கு ஆச்சு, பாலுக்கு ஆச்சு, காலேஜ் சம்பளத்துக்காச்சுன்னு வாங்கிப்போட்டுக்கிறேன்."

"எனக்கும் ஒன்றும் புரியலேப்பா" என்றான் அப்பு.

"என்ன புரியலே?"

"முதல்லெ உங்களுக்கு நம்பிக்கையில்லேன்னு சொல்றதே ஆச்சரியமாயிருக்கு."

"துளிக்கூட கிடையாது. உங்கண்ணா கலியாணத்துக்குக் கூட நான் ஜாதகம் பார்க்கலியே. பெண் பார்த்துட்டு வந்தான். பிடிச்சுதுன்னான். மனுஷாளையும் பிடிச்சிருந்தது. சரின்னாச்சு. உங்க மன்னி ஜாதகத்தை நான் பார்த்ததே இல்லியே. உன் கலியாணத்துக்கும் அப்படித்தான் நடக்கப்போறது."

"அவனுக்குக் கலியாணம் இருக்கட்டும். அவன் சம்பாதிக்கிறதுக்கு வழி பண்ணட்டும் முதல்லே" என்றாள் அலங்காரம்.

தண்டபாணி அவளைச் சற்று நிமிர்ந்து பார்த்தார்.

"வழி பண்ணாமலா சொல்றேன்?"

"என்ன பண்ணியிருக்கு?"

"அவன் அடுத்த மாசம் உன் கையிலே இருநூறு ரூபாயைக் கொண்டு வைப்பான். அப்ப அவனையே கேட்டுத் தெரிஞ்சுக்கோயேன்."

"இருநூறு ரூபாயா! சம்பளமா? எங்கேப்பா! எங்கேப்பா?" என்று பரந்தாள் காவேரி.

"எச்சக்கையை ஆட்டாதேடீ" என்றான் மூத்த பையன்.

"யப்பா யப்பா - சொல்லுங்கப்பா."

"இப்ப ஒண்ணும் சொல்றதுக்கில்லே. உனக்குப் பள்ளிக்கூடத்துக்கு நாழியாச்சு, பேசாம போ. அடுத்த மாசம் தானே தெரியும்."

"போங்கப்பா."

"நீ போ முதல்லெ சாப்பாட்டை முடிச்சிண்டு."

"சொல்லாட்டா போங்களேன்."

சாப்பாடு முடிந்தது. காவேரியும் பையன்களும் கிளம்பி விட்டார்கள். கோபுவுக்குக் கம்பெனியில் வேலை. அவன் ஒரு மணி முன்னமே போய்விட்டான்.

மாடிக்குப் போன தண்டபாணி அப்புவைக் கூப்பிட்டார்.

"என்னப்பா?" என்றுகொண்டே வந்தான் அவன்.

"உட்காரு இப்படி!"

"பரவாயில்லே."

"உட்காரு, சொல்றேன் - இப்படி."

அப்பு பெஞ்சுமீது உட்கார்ந்தான்.

"ராத்திரி ரயில்லே தூங்கினியோ?"

"சுமாராத் தூங்கினேன்."

"நன்னாத் தூங்கலியாக்கும்?"

"ரயில்லெ எப்படி முடியும்?"

"அப்படின்னா மத்யான்னம் முழுக்க ரெஸ்டு எடுத்துக்கோ. தூங்கு. சாயங்காலமா அஞ்சுமணி சுமாருக்கு ஆபீஸ் பக்கம் வரமுடியுமோ?"

"முடியறதென்னப்பா? வரேன்."

"பெரிய உத்யோகஸ்தர்கள் சிலபேருக்கு வேதாந்தப் பாடம் சொல்லிண்டு வரேன். அவர்கள்கிட்ட உன்னைப் பத்திச் சொல்லி வச்சிருக்கேன். வேதத்திலே முக்கியமான பாகமா சொல்லிக்கணும்னு ஆசை அவாளுக்கு. அர்த்தத்தோடு முழுக்கப் படிக்கணும்னு சொல்றா. உன்னாலெ முடியுமோ?"

"பார்க்கறேன்."

"பார்த்துத்தான் ஆகணும். பதினாறு வருஷம் உன்னை எங்கியோ அனுப்பிச்சு செத்துப்போன புஸ்தகம் எல்லாம் படிக்க வச்சுட்டேங்கறான் உங்க அண்ணா. இந்தச் செத்துப் போன ஞானத்துக்குப் பணமும் நிறைய சம்பாதிக்க முடியும்னு அவனுக்குத் தெரியணுமோல்லியோ? பணம் கொடுக்கிறதுன்னா உசிருள்ளதுதான்னு அவனுக்கு உரைக்கத் தொடங்கும்."

"அவன் வேடிக்கையாச¢ சொல்லியிருப்பான்பா. இல்லே, தன்னைப்போல நிறைய சம்பாதிக்க முடியாதே தம்பின்னு கவலையிலே சொல்லியிருப்பான். ஆனா, அவாளெல்லாரையும் விட என்னைத்தானே நீங்க உசந்த படிப்பாப் படிக்க வச்சிருக்கேள்!"

தண்டபாணி அவனை உற்றுப் பார்த்தார்.

"நிஜமாவா?" என்று கேட்டார்.

"எனக்கு மனசு நிம்மதியா இருக்குப்பா. எதைத் தெரிஞ்சுண்டா, வேற ஒண்ணும் முக்கியமில்லையோ, மற்றதெல்லாம் படிச்சாப்போல ஆயிடுமோ - அதுக்கு ஆதாரமானதைத் தெரிஞ்சிண்டிருக்கேன் - அப்படின்னு நிம்மதியா இருக்கு; நிறைவா இருக்கு."

"நிஜமாவா?"

"நான் வெளிக்காகவா பேசறேன்? ஏம்பா?"

தண்டபாணி தலையை மெதுவாக ஆட்டினார். "அப்படின்னா, எனக்கு ஒரு கவலை கிடையாதுடா அப்பு, துளிக்கூடக் கவலை கிடையாது."

"யார் உங்களைக் கவலைப்படச் சொன்னா?"

"இல்லேடா அப்பு. லோகம் ஆரமிச்ச நாளிலிருந்து சம்பாதிக்கிறவனுக்குத்தான் மதிப்பு. அதுவும் பொம்மனாட்டிகளுக்கு எல்லாம் இருந்தாத்தான் மதிப்பு வரும். நிறைய சம்பாதிக்கணும். அழகா இருக்கணும், முரடாவும் இருக்கணும். புத்திசாலியாவும் இருக்கணும். . . எல்லாமாகவும் இருக்கணும்; ஒண்ணு இருந்தால் மட்டும் போராது."

"அப்படியிருக்க முடியலேன்னா கலியாணமே பண்ணிக்காம இருந்தாப் போறது. . ."

"புத்திசாலியாயிருந்தா, பணக்காரனா இருக்கணும். பணக்காரனா இருந்தா புத்திசாலியா இருக்கணும், ரண்டுமாயிருந்தா, கீர்த்திமானா இருக்கணும். அதுவும் இருந்தா பலசாலியா இருக்கணும். அதுவும் இருந்தாலும் தன் மனசுப்படி நடக்கணும். . ."

அப்பு சற்றுக் குழம்பி அவரைப் பார்த்துக்கொண்டேயிருந்தான். "அதுக்காகத்தான் நான் ஒருவழி சொன்னேன் -கலியாணமே பண்ணிக்காம இருந்துவிட்டா? ஒரு வயித்துக்கு வேதம் எப்படியாவது சாப்பாடு போட்டுடும். அப்பா அம்மாவுக்கு அதிகமாச் செய்யறதுக்குப் பணம் கிடைக்காதோ என்னவோ. . ."

"கையை வலிக்கிறதுன்னா வெட்டிவிடலாம்னு வைத்தியம் சொல்றியேடா அப்பு. . . நான் ஒரு பேச்சுக்காகச் சொன்னேன். என் மேலே குறையா இருக்குமோ உனக்குன்னு சம்சயமாயிருந்துது. அதில்லைன்னு தெரிஞ்சுபோச்சு. . ."

"குறையில்லாதது மட்டுமில்லை. மத்த படிப்புப் படிக்க வச்சிருந்தா இப்படிச் சந்தோஷப்பட்டிருக்க மாட்டேன்."

நாற்காலியைவிட்டு எழுந்து பனியனையும் சட்டையையும் போட்டுக்கொண்டார் தண்டபாணி.

"அப்ப நாலரை அஞ்சுமணி சுமாருக்கு ஆபீஸ்பக்கம் வந்து சேரு. நான் வரட்டுமா?"

"சரிப்பா."

தண்டபாணி கீழே இறங்கினார். அப்புவும் தொடர்ந்தான். அவர் போனபிறகு கீழே நிற்கவும் கூச்சமாக இருந்தது. அம்மாவும் மன்னியும் சாப்பிட்டுக்கொண்டிருந்தார்கள்.

"கண்முழிச்சிருப்பியேடா அப்பு. மாடியிலே கொஞ்ச நாழி படுத்துண்டு தூங்கேன்" என்று அம்மா சொன்னதும் அப்பு மாடிக்கு ஏறிவிட்டான்.

அலமாரியிலிருந்த புத்தகங்களைப் புரட்டிப் புரட்டி இருந்த இடத்திலேயே வைத்தான். பெஞ்சில் ஒருக்களித்து முழங்கையைத் தலைக்கடியில் வைத்துப் படுத்தான்.

மோட்டார் ஹார்ன் சத்தங்கள் - எங்கோ மோட்டார் சைக்கிள் ஓடுகிறது. பஸ் ஓசை நெருங்கி வந்து தேய்கிறது. யாரோ துடைப்பம் விற்றுக்கொண்டு போகிறான். எதிர்ச் சரகில் மூன்று வீடு தள்ளியிருந்த குழாயடியில் வாக்குவாதம். கூச்சல் வலுக்கிறது. அப்பு எழுந்து ஜன்னல் வழியாகப் பார்த்தான். கூட்டம் அதிகமாக இல்லை; நாலைந்து பெண்பிள்ளைகள் தான் இருந்தார்கள். கூச்சலை மட்டும் கேட்டபோது, பெரிய கும்பலாகக் கூடியிருக்குமோ என்று தோன்றிற்று. திடீரென்று கூச்சல் போடுகிற ஒரு பெண்பிள்ளை கோபம் தாங்காமல் எதிரியின் முன்வந்து சட்டென்று திரும்பி அரைப்புடவையைத் தூக்கிப் பின் பக்கத்தைக் காட்டி, அவளை அவமானப்படுத்தி விட்டு இப்பால் வந்தாள். பெரிய சிரிப்பு ஒன்று எழுந்தது. அப்பு தலையை இழுத்துக்கொண்டான். இப்படி எதிரியை அவமானப்படுத்துகிற ஒரு காட்சியைப் பார்த்ததில்லை. அதுவும் பட்டணத்திலா. .!

அறை சின்ன அறைதான். அதில் ஒரு பெஞ்சு, மேஜை, நாற்காலி, அலமாரிகள். . .

எங்கேயோ விருந்தாக வந்திருப்பதுபோல் ஒரு நிமிடம் அப்புவுக்குத் தோன்றிற்று. புர்ரென்று மோட்டார்கள் ஓடும் சத்தம் ஓயாமல் காற்றில் ஏறுவதும் இறங்குவதுமாகத் தொங்கிக் கொண்டேயிருந்ததைப் பார்த்தால், ஏதோ புது இடத்தில் வந்து தங்கியிருப்பதுபோல் உடம்பு

பாவாமல் மிதந்தது. எங்கோ போகிற வழியில், நடுவில் ஒரு இடத்தில் தங்கியிருப்பதுபோல் - வண்டிக்காகக் காத்திருப்பதுபோல - ஒரு நிலைகொள்ளாமை. காற்றில் இந்த ஒலிகளைக் கேட்கும்போது இந்த நிலைகொள்ளாமை ஓங்குகிறது.

சற்றுக் கண்ணை மூடினான் அவன். சித்தன்குளத்தில் பாடசாலையில் இருப்பதுபோலிருந்தது. அங்கு தெருவில் பாரவண்டி எப்போதாவது கட்டுகட்டென்று நகருகிற ஓசை கேட்கும். மாட்டுச் சலங்கை கேட்கும், கொட்டிலில் மாடு வைக்கோலை இழுத்துச் சலசலத்திடும். ஓசை கேட்கும். ட்ரூட்ரூ என்று மணிப்புறா கோடிழுக்கும். சம்போத்து உம்மிடும். பவானியம்மாள் படுத்து ஆடும் ஊஞ்சல் முனகும். இல்லை, படுக்கும் நேரமில்லை. ஜபங்களை முடித்துவிட்டு, சாப்பிட உட்கார்ந்திருப்பாள். வாத்தியார் தாழம் பாயில் படுத்துக் காலைநீட்டிக் கண்ணை மூடிச் சற்று இளைப்பாறிக்கொண்டிருப்பார். அவருக்குத் தொந்தரவில்லாமல் இருப்பதற்காகப் பையன்கள் திண்ணையிலும் பவானியம்மாள் வீட்டுத் திண்ணையிலும் இரண்டு மூன்று பேராக உட்கார்ந்து பாடத்தைச் சொல்லிக்கொண்டிருப்பார்கள். வாத்தியார் உறங்குகிறவரையில் அவருக்கு விசிறிவிட்டு, அவர் மூச்சு நீளமாக, ஒழுங்காக ஏறி இறங்கத் தொடங்கியதும், இரண்டாம் கட்டில் கிணற்றங்கரை முற்றத்தில் துண்டை விரித்து நிலைப்படியைத் தலைக்கு உயரமாக வைத்துப் படுத்திருப்பான் அப்பு. தூக்கம் வராது. வெறுமே கண்ணை மூடி, பழைய பாடங்களை நினைத்துப் பார்ப்பான். அல்லது மனசு அங்குமிங்குமாக அலையும். சிலநாள் காங்கை பட்டுக் கண்கூடச் சற்று அயர்வதுண்டு.

பதினாறு வருடம் பழகிவிட்ட இடம். ஒவ்வொரு நாளும் இந்த வேளையில் கொட்டிலில் பாதிக் கண்ணைமூடி அசைபோடும் பசும் கன்றுபோல, மனது அசை போட்டுக்கொண்டேயிருக்கும். இந்த வேளை என்ன? எப்போதுமே அசை போடுகிறாற்போன்ற ஒரு நிலைதான் அது. கொல்லையைக் கொத்துவது, குளிப்பது, சாயங்காலம் குடியானவத்தெருப் பையன்களோடு விளையாடுவது, இவற்றைத் தவிர மற்ற வேளைகளெல்லாம் அசைபோடுகிற வேளைதான். சாப்பிடுவது, சொல்லிக்கொடுப்பதுகூட அசைபோடுவது போல்தானிருக்கும். காற்றில் தொங்குவதுபோல மிதக்கும் நிசப்தம் அதற்குச் சுருதி போடுவது போலிருக்கும்.

இந்த கார் ஒலிகளையும் பஸ் ஒலிகளையும் கேட்கும்போது அசை போடுகிறாற்போலவே இல்லை. போட்டால் ஆபத்து என்று தோன்றுகிறது. படுத்திருக்கிறவன்மேல் திடீர் என்று ஒரு கார் ஏறி நசுக்கிவிட்டுப்

போனாலும் போய்விடும்.

அப்புவின் வயிற்றில் லேசாகக் கனத்தது. எதற்காக இங்கு வந்திருக்கிறோம்? ஏன் வந்திருக்கிறோம்? திருப்பித் திருப்பிக் கேட்டுக்கொண்டிருந்தான் அவன். சற்றுப் பயமாகக்கூட இருந்தது. ஒன்றுக்கும் பதில் தெரியவில்லை. பாடசாலையில் விட்டு விட்டு மறுநாள் அப்பா ஊருக்குத் திரும்பிப் போய்விட்டாரே, அன்று இருந்தமாதிரியே இப்போது ஒரு பயம் வயிற்றில் பூசியிருந்தது. இங்கே பேசக்கூட ஆளில்லை. அப்பா, கோபு, இரண்டுபேரும் வேலைக்குப் போய்விட்டார்கள். காவேரியும் வேம்புவும் படிக்கப்போய்விட்டார்கள். பாடசாலைமாதிரி இந்த வீடும் தூங்கத்தான் தூங்குகிறது. ஆனால் பார்க்கும்போது தூக்கமாக இல்லை. கண்ணை மூடிக்கொண்டிருப்பதைப் பார்த்தால், தன்மீது பாய்வதற்காகப் புருவத்தைச் சுளித்து குறிபார்ப்பதுபோலிருக்கிறது. மன்னியோடு பேசமுடியாது; வழக்கமில்லை. அம்மாவோடு பேசலாம். அவள் சாப்பிடுகிறாள். சாப்பிட்டுவிட்டுத் தூங்கப்போனாலும் போய்விடுவாள்.

நிழல் தெரிந்தது. அம்மா வந்தாள். தூங்குகிறானோ என்று பார்த்துக்கொண்டே வருவதுமாதிரி இருந்தது.

"சாப்பிட்டாச்சாம்மா?"

"ஆச்சு. நீ தூங்கறேன்னா நெனச்சேன்."

"நீ தூங்கறியோன்னு நெனச்சிண்டிருந்தேன் நான்."

"எதுக்கு எழுந்துக்கறே? நீ படுத்துக்கோ."

அம்மா நாற்காலியில் உட்கார்ந்துகொண்டாள். ஒன்றும் பேசவில்லை. அவனைப் பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்தாள். குழந்தையைப் பார்ப்பதுபோல் பார்த்துக்கொண்டிருந்தாள். கூச்சம் தாளாமல் அப்பு கண்ணை மூடிக்கொண்டான். கண்ணுக்குள்ளும் நினைவு ஓடாமல் நின்றுவிட்டது. நாற்காலியில் இருந்த அம்மாவைத்தான் பார்த்துக்கொண்டிருந்தது. ஸ்நானம் செய்துவிட்டு அம்மா கூந்தலை நுனி முடிச்சுப் போட்டிருந்தாள். நெற்றியில் ஒரு குங்குமப் பொட்டு. அம்மா முகத்திற்கு ஒரு தனிக்களைதான். அம்மா என்பதற்காகச் சொல்லவில்லை. லட்சம் பெண்களைப் பார்த்தால் இப்படி ஒரு களை பத்து முகத்தில்தான் பார்க்கமுடியும். அம்மா நல்ல உயரம். நாற்காலியில் உட்கார்ந்திருப்பதே

கம்பீரமாக இருக்கிறது. அம்மா என்று சொல்வதற்கு ஏற்ற வடிவம். அம்மா வேறு எங்காவது பிறந்திருந்தால் ஒரு சிம்மாசனத்தில் உட்கார்ந்திருப்பாள் - ராணிமாதிரி, ராணியாகவே. அம்மா பார்க்கிறது, சிரிக்கிறது, பேசுகிறது, திரும்புகிறது, நடக்கிறது எல்லாமே அப்படித்தான் இருக்கும். கெஞ்ச மாட்டாள். வாசலில் கூடைக்காரன், கூடைக்காரிகள் வந்தால் பேரம் பேசமாட்டாள். கடைக்குப் போனாலும் அப்படித்தான். அவன் ஒரு விலை சொல்லுவான். சரியாகத் தோன்றவில்லை என்றால் அம்மா கீழே இறங்கிவிடுவாள். அவன்தான் வருந்திக் கூப்பிடவேண்டும். "நான் மதிப்புப் போட்டது இவ்வளவுதான்" என்று ஒரு விலையைச் சொல்லிவிட்டுக் கிளம்பத் தயாராகிவிடுவாள். "சரி, அதைச் சொன்னால்ல தெரியும்?" என்று வழிக்கு வர வேண்டும் அவன். இல்லாவிட்டால் அங்கே நிற்க முடியாது அம்மாவுக்கு. அநாவசியமாகப் பேசிக்கொண்டிருக்க முடியாது அவளுக்கு. அப்பாவுக்குக்கூட அதிகமாகப் பேச வாய் வராது அவளிடம். எல்லாருக்குமேதான்.

தலைமயிரை யாரோ தடவுகிறது போலிருந்தது. அப்பு கண்ணைத் திறந்தான். அம்மாதான். கீழே உட்கார்ந்து அவன் தலையைக் கோதிக்கொண்டிருந்தாள்.

"தூங்குடா குழந்தே."

அப்புவுக்கு உடல் குறுகிற்று. மன்னி வந்து பார்த்தால் 'பச்சைக் குழந்தையா, சீராட்டம் பாழ்போகிறது' என்று நினைத்துக்கொண்டால். . .

"வேதம் வேதம்தான்" என்றாள் அம்மா.

"என்னம்மா!'"

"வேதம் சொன்னா, அதற்குத் தனி தேஜஸ்தான். . . அது மனசைப் புடம்போட்டுடும், உடம்பையும் போட்டுடும். அதைச் சொன்னாலே உடம்புக்கு ஒரு வியாதி, ஒரு கிலேசம் வராது, புஷ்பம் மாதிரி ஆயிடும். ஆனால் பூ மாதிரி வாடிப் போயிடாது."

"என்னம்மாது?"

"நான் சும்மா சொல்லலேடா."

அப்பு சிறிது நேரம் பதில் பேசவில்லை. கூச்சத்தைப் போக்குவதற்காகப் பேச்சைத் தொடர்ந்தான். "வேதம் படிச்சா வியாதி

வக்கை வராம இருந்துடுமா? எத்தனை பேர் குழந்தையும் குட்டியுமா, சோகையும் வியாதியுமா கஷ்டப்படறா!"

"ரண்டணாவுக்கும், மூணணாவுக்கும் மந்திரத்தை வித்தா, அதுக்குக் கோபம் வந்துடறது, பறக்கவிட்டு வேடிக்கை பார்க்கிறது. உள்ளே எரியணும் அது. அங்கே அணைச்சுப்புட்டா, அது வெளியே எரிஞ்சு, இருக்கிறதைக் கரியாக்கி விடறது."

"நிஜமாவா?" என்று அப்பு கண்ணை மூடிக்கொண்டே சிரித்தான்.

"பின்னே வேதம் படிச்சுட்டுக் கஷ்டப்படலாமா?"

"நீ புதுசா என்னமோ சொல்றியேம்மா . . . நான்கூடப் பயந்துண்டுதான் இருந்தேன். . . இருக்கேன். வேதம் சொல்லிக்கிறவரையில் நன்னாத்தான் இருந்தது. சொல்லிண்டு முடிச்சப்புறம் பயமாயிருக்கு. ராமன் காலத்திலிருந்து, புரோகிதம் ஈனத் தொழில்னு நிலைச்சுப் போயிருக்கே."

"உன்னை அப்படி யாரும் விட்டு விடமாட்டா. காசு காசுன்னு பறக்காம இருந்தா, அது காப்பாத்தாம இருக்காது. கையை நீட்டிண்டு பிச்சை வாங்கற போதுதான், நீட்டின கை வழியாவே படிச்சுச் சேர்த்த தேஜஸ் எல்லாம் ஓடிப் போயிடறது. பிணக்களை வந்துடறது. வேதம் படிக்கவே வாண்டாம். வெறுமனே கைநீட்டினாலெ சவக்களை வந்துடும். புடவைக் கடை வச்சிருக்காரே முதலியார், அவர் அன்னிக்குத் திடீர்னு மத்யானம் வந்து கதவைத் தட்டினார். கதவைத் திறந்ததும் வாசல்லேயே, திண்ணையிலேயே நின்னுண்டு, "திருப்பதிக்கு வேண்டிண்டிருக்கேம்மா, பிச்சை வாங்கிண்டு வரதாக"ன்னு சொல்லிண்டே உள்ளே வராமலே நின்னார். அவருக்கு எத்தனை லக்ஷம் இருக்கு! ஆனா வாசல்லே வந்து நின்னுண்டு அப்படிக் கேட்கிறபோது, கண்ராவியா இருந்தது. அப்படி மூஞ்சியிலே ஒரு சிரிப்பு, ஒரு பைத்தாரக்களை, கங்காளிக்களை! யார் பேரைச் சொல்லிண்டு வந்தா என்ன? கையை நீட்டினா மூஞ்சியிலே அந்தக் களை வந்துடறதே."

அப்பு சிரித்தான்.

"ஏண்டா?"

"நீ சொல்றபோது, முதலியார் வந்து நிக்கறாப்பலவும் அவர்

மூஞ்சியிலே பரதேசிக்களை படர்ந்திருக்காப்போலவும் அப்படியே இருக்கும்மா. அதைப் பார்க்கிறபோது எனக்குப் பயமாவே இருக்கு. லக்ஷ ரூபாய்க்களை அத்தனையும் அப்படியே போய் . . . பாவம் . . ." என்று சொல்லிக்கொண்டே வந்தவன் "யாரு!" என்று சட்டென்று எழுந்து நிலைப்படியைப் பார்த்தான்.

"வாங்க சார்" என்று பெஞ்சை விட்டு எழுந்து நின்றான். சிவசு வந்து நிலைக்கு வெளியே நின்றான்.

அப்பு அம்மாவைப் பார்த்தான். அவள் முகத்தில் ஒரு நாணம். மறுகணம் புருவம் சுருங்கி மீண்டும் பழைய நிலையை அடைந்தது. புன்சிரிப்பு வரவில்லை. "வாங்கோ" என்று இடது தோளைப் புடவையால் மூடிக்கொண்டே எழுந்தாள். அப்புவின் அழைப்பில் ஒலித்த உபசாரப் பரபரப்பு அதிலே இல்லை. ஏன் முன்னறிவிப்பில்லாமல் வந்தாய் - என்று பிணங்குவது போலிருந்தது.

"உள்ள வாங்க சார்" என்றான் அப்பு.

சிவசு வந்து நாற்காலியில் உட்கார்ந்தான். அறையைச் சுற்றிமுற்றிப் பார்க்கவில்லை; புது இடத்திற்கு வந்தாற்போல இல்லை. பழக்கப்பட்டவன் போல் வந்து உட்கார்ந்துகொண்டான். "உட்காருங்கோ" என்றான் அப்புவைப் பார்த்து அவன்.

"உட்காருன்னு சொல்லுங்க சார். நான் ரொம்பச் சின்னவன்."

"என்னதுக்கு அதெல்லாம் திருத்திண்டு கஷ்டப்படணும் . . . பார்த்தவுடனே என்ன சொல்லத் தோணறதோ அப்படியே இருந்துட்டுப் போகட்டுமே" என்றான் சிவசு.

"அவன் சொல்றதுதான் சரி, அவன் குழந்தை" என்றாள் அம்மா.

"நான் குழந்தையில்லையே. எனக்குத் திருத்திக்கிறது சிரமம் . . ."

சிறிது நேரம் பேச்சு ஏதுமின்றி ஊர்ந்தது.

"மறுபடியும் வந்து பிராணனை எடுக்கிறானேன்னு நினைச்சுக்க வாண்டாம். காலமே இவர் நமஸ்காரம் பண்ணினபோது, ஏதாவது வச்சுக் கொடுக்கணும்னு நெனச்சேன். பர்ஸ் காரிலே இருந்தது - காரியஸ்தன்கிட்ட. சரி, அப்புறம் பார்த்துக்கலாம்னு போய்ட்டேன். ஒரு

தாம்பாளம் கொண்டு வந்தாத் தேவலை" என்றான் சிவசு.

"எதுக்கு?" என்றாள் அம்மா. அவள் முகம் சுருங்கிக் கிடந்தது.

"வேணும்."

மொட்டை மாடியிலிருந்து மாட்டுப் பெண்ணுக்கு உத்தரவு கொடுத்தாள் அம்மா. தாம்பாளம் வந்ததும் வாங்கிக்கொண்டு திரும்பி வந்தாள்.

சிவசு ஜிப்பா பையிலிருந்து ஒரு நூறு ரூபாயை எடுத்து வைத்து, இடது பையிலிருந்த வெற்றிலைகளையும் பாக்கையும் வைத்து அப்புவிடம் நீட்டினான்.

"எதுக்கு சார்?"

"அதுதான் சொன்னேனே."

"ரொம்ப அழகாயிருக்கு . . . அவன் அதெல்லாம் தொட மாட்டான்" என்றாள் அம்மா.

"நான் ஆசையாக் கொடுக்கணும்னு வந்திருக்கேன். எடுத்துக்கத்தான் வேணும்."

"எதுக்கு? நமஸ்காரம் பண்ணினதுக்கா?"

"ஆமாம்."

"அதுக்கெல்லாம் இப்படி ஒருத்தரும் கொடுக்கிற பழக்கமில்லை. அதெல்லாம் பேசப்படாது."

"சார்" என்று சிவசு சிறிது கெஞ்சுகிறாற்போல் அப்புவைப் பார்த்தான். அப்பு தலையை அசைத்தான்.

"நான் எடுத்துக்க மாட்டான்கறேன். அப்புறம் அவனைக் கேட்டா?" என்றாள் அம்மா. அப்பு அவளைப் பார்த்தான். பெரிய கோபமாக வரப்போவதுபோல் அந்த முகத்தில் ஈரம் வற்றிக் கிடந்தது.

"நிசமாத்தான் சொல்றேளா மன்னி?"

அம்மா தலையை அசைத்தாள். அந்த மூக்குச் சற்று மலர்ந்ததைப் பார்த்து அப்புவுக்குச் சற்றுப் பயமாயிருந்தது.

சிவசு சிறிது நேரம் கண்ணெடுக்காமல் அவளைப் பார்த்தான்.

"என்ன மன்னி இது! யாரோ முகம் தெரியாதவனுக்குச் சொல்றாப்போல . . ."

அம்மா மீண்டும் தலையை அசைக்கிறாள். பேசவில்லை. அந்த அசைப்பில் 'நடக்காது' என்ற ஒரு கண்டிப்பு.

"மன்னி."

"ம்ஹ்ம்."

"அவ்வளவுதானா!"

"இப்ப என்ன இதுக்கு முடை?"

"இப்படி என்னைப் புண்படுத்தறேளே!"

"வீணா மனசை அலட்டிக்கப்படாது. அனாவசியமாகக் கொடுத்தா வாங்கறவா மனசுதான் புண்ணாகும்."

"இப்படியே பேசிண்டிருந்தா இங்கேயே வச்சுட்டுப் போயிடுவேன் இதை."

'யாரு எடுக்கப்போறா?"

சிவசு பெருமூச்சு விட்டான். "அப்படின்னா நான் போக வேண்டியதுதானா?"

"அப்படி ஒருத்தரும் சொல்லலே. சொன்னாப் போலல்லவா கேட்டாறது!"

"ரொம்ப ஆசையா வந்தேன்."

"சமயமில்லாம ஆசைப்படப்படாது."

சிவசு அப்படியே நின்றான் - பேசாமல்.

"பாடசாலைக்கு லீவா இப்ப?"

"படிப்பே முடிஞ்சு போச்சு சார் எனக்கு. இனிமே இங்கேதானே இருக்கணும்."

"சரி, அப்படின்னா நிறைய பார்க்கலாம் . . . அப்ப நான் வரேன்" என்று அம்மாவைப் பார்த்தான் சிவசு.

"நான் சொன்னேனேன்னு வருத்தப்பட வாண்டாம்" என்றாள் அம்மா.

"அதெப்படி முடியும்? . . . நான் வரேன் சார்" என்று சொல்லிக்கொண்டே சிவசு திரும்பி, இறங்கிப் போய் விட்டான்.

அம்மா அவன் போன திக்கையே பார்த்துக்கொண்டிருந்தாள். முகம் கல்லாக ஓய்ந்து கிடந்தது.

"ஏம்மா?" என்று அவள் நினைவைக் கலைத்தான் அப்பு.

"ம்?" என்று திரும்பினாள் அம்மா.

"அவர் ஏதாவது நினைச்சிண்டிருப்பரோம்மா?"

"நெனச்சுக்கட்டுமே . . ."

"என்னத்துக்காக இப்படித் திடீர்னு நினைச்சிண்டு மறுபடியும் குடுகுடுன்னு ஓடி வந்தார்?" என்று அப்பு அவளைப் பார்த்தான்.

"பணம் இருக்கு. இவாள்ளாம் இப்படித்தான் அலைவா. ஒரு பைசா செலவு இல்லாமல் நிம்மதியை வாங்குவா மத்த பேர். இவா மூட்டை மூட்டையாகப் பணத்தைத் தூக்கிண்டு அதை எப்படியாவது வாங்கிவிட்டுத்தான் மறு காரியம் பார்க்கிறதுன்னு கிடந்து அலைஞ்சிண்டே இருப்பா. இவா போற சமயத்துக்கெல்லாம் கடையிலே ஸ்டாக் தீர்ந்துபோயிருக்கும்."

அம்மா இதைச் சொன்ன விதத்தைப் பார்த்ததும் அப்புவுக்குக் குப்பென்று சிரிப்பு வந்தது.

"என்னடாது, நான் பொய்யா சொல்றேன்?"

"இல்லேம்மா, உனக்கு வெடுக்குனு ஏதாவது தோண்றது பாரு. அதைக் கேட்டவுடனே சிரிப்பா வந்தது . . . அப்ப ஏதோ களை வரும்னு பேசிண்டிருந்தோமே. அதைப் பேசி முடிக்கிறத்துக்குள்ளேயும், இந்தா கை நீட்டுன்னு வந்துட்டார் பாரு இவர்!"

அம்மா சிறிது நேரம் உட்கார்ந்திருந்தாள். "சரிடா கொஞ்ச நாழி படுத்துண்டு தூங்கு. காப்பி போட்டுக் கூப்பிடறேன்."

பிறகு அப்பா வரச்சொன்னதை அவளிடம் சொன்னான். "அப்படியா?" என்று வியப்போடு கேட்டு, "எங்கிட்ட சொல்லப்படாதோ? ராமா ராமா" என்று சொல்லிக்கொண்டே எழுந்து போனாள் அவள்.

அப்பு படுத்தான்.

அம்மாவோடு சிறிது நேரம் உட்கார்ந்திருக்கிறதே ஒரு அனுபவம்தான். அவள் பேசுகிறது, நினைக்கிறது, பார்க்கிறது - எல்லாமே தனி. சிவசு தவித்த தவி . . .

என்ன இது?

அப்புவின் நெற்றி சுருங்கிற்று. ஏதோ நிழல் வந்து நின்றுவிட்டு யார் என்று பார்ப்பதற்குள் ஓடிவிட்டாற்போல ஒரு நினைவு வந்து உடனே ஓடிவிட்டது. என்ன அது?

சிவசு ஏன் திடீரென்று வந்தார்? அத்தனை பணத்தைக் கொண்டு நீட்டுவானேன்? அதுவும் காலையில் செய்த நமஸ்காரத்திற்காக! அம்மாவின் முகத்தில் குப்பென்று வந்த ஒரு நாணம்! பிறகு கோபம்! இவ்வளவு தெரிந்தவர் கொடுக்கும்போது வாங்கிக்கொண்டால்தான் என்ன? ஏன் இத்தனை பிடிவாதமாக அம்மா மறுக்க வேண்டும்?

ஒவ்வொரு பேச்சாக ஞாபகம் வந்தது அப்புவுக்கு. எத்தனை உரிமையோடு பேசுகிறார்! "மறுபடியும் வந்து பிராணனை வாங்கறதாக நினைச்சுக்கவாண்டாம்" என்று ஆரம்பித்தாரே. இத்தனை ஸ்வாதீனமாக, இவ்வளவு நெருக்கமாக, இவ்வளவு செல்ல அலுப்புடன் பேசுகிறதற்கு என்ன பாத்தியம்! அம்மா நறுக்நறுக்கென்று பேசியதில்தான் எத்தனை உரிமை! இத்தனை கடுமையாக இருப்பதற்கு எத்தனை உறவு, எத்தனை ஸ்வாதீனம் வேண்டும்?

சிவசுவின் உருவம் தெரிகிறது!

பளீர் என்று தலையில் அடித்தாற்போல ஒரு நினைவு. ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த சிவசுவைப் பார்த்ததும் "மீசையை எப்படா எடுத்தே?" என்று நான் உளறினேனே!

நானா உளறினேன்! ஒரு விநாடி அப்படியே கோபு என்றே சமைந்துவிட்டேனே!

தடதடவென்று நிதானமிழந்து தள்ளாடிக்கொண்டே பின்னால் நகர்ந்து சுவரில் முட்டிக்கொள்வது போலிருந்தது அப்புவுக்கு - மயக்கம்வந்து, உடம்பைக் கட்டுப்படுத்த முடியாததுபோல - யாரோ தள்ளுகிறமாதிரி.

உட்கார்ந்த வாக்கிலேயே பெஞ்சைப் பிடித்துக்கொண்டான் அப்பு.

இந்த இந்து, ராக்ஷசி, ஆவேசம் வந்தமாதிரி எதோ பிதற்றினாளே - நான் உளறியது மாதிரி! அவள் பிதற்றியதும் உண்மையின் பீறலா? ஆள் அயர்ந்திருக்கும்பொழுது, 'இதோ இருக்கிறேன், பார்த்துக்கொள்' என்று உண்மை திடும் என்று கண்ணருகில் வந்து சுயரூபத்தைக் காட்டிவிட்டுப் போயிற்றா?

இந்துவுக்குக் கசடு கபடே தெரியாதே! அவள் வாயில் பொய் எப்படி வரும்!

தன்னறியாமல் வாயைப் பொத்திக்கொண்டான் அப்பு. கண்ணில் கிலி படர்ந்தது. என் அம்மாவையா? நானா? நானா இப்படி நினைக்கிறேன்! இந்த அம்மாவையா?

இந்த சிவசுவுக்கு எத்தனை ஸ்வாதீனம்! அவனுக்கும் நமக்கும் என்ன சம்பந்தம்! ஏணி வைத்தாலும் எட்டாத அந்தஸ்துக்கும் இந்தத் திருவல்லிக்கேணி மாட்டுக்கொட்டில் சந்துக் குடும்பத்திற்கும் என்ன பிணை? எத்தனை உறவு கொண்டாடுகிறான்! எத்தனை உரிமை, எத்தனை கோபம் அவனுக்கு! அம்மாவின் கோபத்தில்தான் எத்தனை நெருக்கம்!

அப்பு இறுக வாயைப் பொத்திக் கொண்டான். இந்து! இந்து! நீ சொன்னது உண்மைதான். வேப்பிலை அடித்துச் சன்னதம் ஏறின பெண்பிள்ளை தலைசுற்றி ஆடிக்கொண்டே சொல்கிற மாதிரி, என்னத்தையோ சொல்லிவைத்தாயே - அது உண்மைதான்.

அப்புவுக்கு மூச்சு வேகமாக ஏறி இறங்கிற்று. அப்படியே தரையைப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான். இந்துவை அப்படியே முறுக்கிப் பிழிந்து, சக்கையை வீசி எறியவேண்டும் போலிருந்தது.

இல்லை, இல்லை, சிவசு அவனைப் பார்க்க வரவில்லை. அவனுக்குக் கொடுக்க வரவில்லை, மன்னிகூட அவன் வந்திருக்கிறான் என்று சொல்லவில்லையே - அப்படியல்லவா ஸ்வாதீனமாக மாடி ஏறி வந்தான் - சொந்த வீட்டில் வருவதுபோல. அவனுக்கு இதுவும் சொந்த வீடா . .?

அம்மா . . . அம்மா . . . ஏன் அம்மாவை மட்டும் புரிந்துகொள்ள முடியவில்லை? எல்லா அம்மாக்களையும் போல இவள் சாதாரணமாக இருக்கக்கூடாதோ?

ஏன் இந்தக் கம்பீர வடிவமும் பார்வையும்? ஏன் இந்த ஆட்டிவைக்கிற பெருமிதமும், பெரிய களையும்! மாட்டுக்கொட்டில் சந்துக் குடும்பத்து அம்மாவுக்கு இவை எல்லாம் எதற்காக? அம்மா . . . அம்மா! . . . எங்கோ இருக்கிற இந்துவிற்குக்கூடத் தெரியும்படியாக . . ! அவளுக்கு எப்படித் தெரிந்தது . .? கபடில்லாத ஆத்மாக்களுக்கு வரும் ஞானதிருஷ்டியா?

"அப்பவே சொன்னேனே . . . கேட்டியா?. . ."

கண்ணை மூடிக்கொண்டிருந்தவன் காதில் சட்டென்று இந்தக் குரல் கேட்டது. யார் இதைச் சொன்னார்கள்? கண்ணைத் திறந்து பார்த்தான்; யாருமில்லை. இவ்வளவு தெளிவாக, காதில் நன்கு விழும்படியாகச் சொன்னது யார்?. . . இந்துவின் குரல்தான். அதே குரல், அதே பேச்சுச் சாயல்தான்.

இவ்வளவும் பொய்யாக இருந்தால்? நினைக்க நினைக்க நல்லது தோன்றவில்லை. இதை நினைக்கும்போது ஏன் மறக்க முடியாமல், நேர் எதிர்த் திசையில் நெஞ்சு அறுத்துக்கொண்டு ஓடுகிறதுபோல் ஓடுகிறது - அத்தனை அழுக்கா என்னிடம்? குப்பையை நோக்கி ஓடுகிற வராகமா இந்த நெஞ்சு?

அம்மாவை மறுபடியும் பார்த்தால் இந்த அற்பத்தனம் எல்லாம் பொசுங்கிவிடும். இந்த அழுக்கும் நடுக்கமும் வந்த சுவடு தெரியாமல் ஓடிப்போகும்.

அப்பு எழுந்து கீழே இறங்கினான். ஊஞ்சலில் மன்னி ஒருக்களித்துப் படுத்திருந்தாள். அடுக்களையில் எட்டிப் பார்த்தான். எதிர் அறைக்குப் போனான். அந்தண்டைப் பக்க அறைக்குப் போனான். வாசல் திண்ணையைப் பார்த்துவிட்டுத் திரும்பினான். பின்கட்டுவரை போய்விட்டு வந்தான். அம்மாவைக் காணவில்லை.

திரும்பி வரும்பொழுது மன்னி எழுந்து நின்று விட்டாள்.

"அம்மா இல்லையா?"

"காப்பிப் பொடி வாங்கிண்டு வரேன்னு போனார்" என்று, ஒரு கணம் அவன் முகத்தைப் பார்த்து, குனிந்துகொண்டாள் மன்னி.

மன்னி என் கட்சியோ?

மன்னி நடக்கிற இடம், பார்க்கிற இடம் எல்லாம் மந்திர நீரை மாவிலையால் தெளித்ததுபோல் இருக்கும் என்று ஏன் தோன்றுகிறது?

மன்னி என் கட்சி மாதிரிதான் இருக்கிறது!

"மன்னீ, சிவசு அடிக்கடி வருவரா என்ன?" என்றான். அதைத் தைரியமாகக் கேட்க முடியவில்லை. வார்த்தைகள் துவண்டு நாக்கில் தள்ளாடித் தள்ளாடி வெளியே விழுந்தாற் போலிருந்தது. கேள்வியைக் கேட்கும்போதே உடல் நடுங்கிற்று.

மன்னி வழக்கம்போலப் பார்க்கிறாள். ஒரு நேர்ப்பார்வை. உடனே தரையை நோக்கி அடங்குகிறது.

"இப்ப வந்தமாதிரி அடிக்கடி மத்யானம் வருவரா?"

மன்னி தலையை அசைக்கிறாள்? அர்த்தம் தெரியவில்லை.

"என்ன?"

"தெரியாது" என்று பதில் வந்தது. மன்னி நகர்கிறாள் - இனிமேல் பேச இஷ்டமில்லை என்றுதான் அர்த்தம் அதற்கு.

நடுங்கிக்கொண்டே மாடிப்படி ஏறினான் அப்பு. பெஞ்சில் வந்து விழுந்தான். கண்ணை இறுக மூடிக்கொண்டான். வெட வெடவென்று

உடல் நடுங்கிற்று. தொடையில் வைத்திருந்த விரல் நடுங்குகிறது. மார்பு அடித்துக் கொள்ளுகிறதுகூடக் கேட்கிறது. தண்ணீர் குடிக்க வேண்டும் போலிருக்கிறது. கன்னத்திலும் மார்பிலும் கசிந்த வேர்வையைத் துடைத்துக் கொண்டான் அவன்.

இப்போது மனசு அங்கும் பாயவில்லை, இங்கும் பாயவில்லை - ஒன்றுமே செய்யாமல் ஒடித்துப் போட்டாற்போல் கிடந்தது. தக்தக்கென்று அடித்துக்கொண்டிருந்த மார்பு மட்டும் மெள்ள மெள்ள அடங்கிக்கொண்டேயிருந்தது.

தூங்கிவிட்டான் அவன்.

## 3

பகலும் நிசப்தமாகத்தான் இருக்கிறது. இரவும் நிசப்தமாகத்தான் இருக்கிறது. முதல்நாள் நினைத்தது போல் இரைச்சலாக இல்லை. கார் ஓடுகிறது. குழாய்ச் சண்டை கூச்சலிடுகிறது. எருமை ஓயாமல் கத்துகிறது. கடல் இரவெல்லாம் சீறுகிறது. கூர்க்காக்காரன் தடியால் இரவைத் தட்டித்தட்டி எழுப்பிக்கொண்டேயிருக்கிறான். கொளகொளவென்று குழாய் நீர் குறை சொல்லிக் கொண்டேயிருக்கிறது. எதிர்வீட்டுப் பையன் திண்ணையில் உட்கார்ந்து, ஊர்ப் பையன்கள் எல்லாம் ஒரு குரலாகக் குவிந்ததுபோலப் பாடத்தைக் கத்திக்கொண்டேயிருக்கிறான். அப்பா மொலு மொலுவென்று வேதமோ சுலோகமோ சொல்லிக்கொண்டு சுவாமியைக் கிச்சுக்கிச்சு மூட்டிக்கொண்டேயிருக்கிறார். அண்ணா வழக்கம்போல உச்சஸ்தாயியில் ட்யூஷன் சொல்லுகிறான். தெருவில் எங்கெங்கோ கிடக்கிற ஏழெட்டு நாய்கள் திடீரென்று நினைத்துக் கொண்டு ஒன்றுகூடி - கச்சேரியில் மிருதங்கம், பானை, டோலக்கு, கஞ்சிரா, கொன்னக்கோல் எல்லாரும் சேர்ந்து சண்டை போடுவார்களே - அதுபோல், ஒன்றின் மேல் ஒன்று விழுந்து கட்டுப் பட்டாசுபோல வெடிக்கின்றன. சைசை என்று யாரோ கத்துகிறார்கள். ஒரு நாய் உயீஉயீ என்று அழுதுகொண்டே ஓடுகிறது. பொட்டென்று கச்சேரி ஓய்ந்துவிட்டது. இருந்த இடம் தெரியவில்லை. அடுத்த வீட்டு கார்ப்பரேஷன் பில் கலெக்டர் சேர்ந்தாற்போல நாற்பது ஐம்பது தும்மல் போடுகிறார். நாலுநாள் வட்டம் அவருக்கு அது ஒரு கணக்கு.

ஆனால் நிசப்தமாகத்தான் இருக்கிறது. அப்பு மறந்து போகாமலிருப்பதற்காகக் காலையிலும் பகலிலும் வேதம் சொல்லிக்கொண்டேயிருப்பான். அப்போதெல்லாம் அவனுக்கு நிசப்தமாகத்தான் இருக்கும். இரவில் மனதுக்குள் சொல்லிக் கொண்டேயிருப்பான். அப்போதும் அவனுக்கு நிசப்தமாகத்தானிருக்கும்.

விடியற்காலையில் எழுந்துவிடுகிறான் அவன். குளிக்கிறான். ஓதுகிறான். மார்க்கெட்டுக்குப் போய்விட்டு வருகிறான். பஸ் ஏறி மாம்பலம் போகிறான். ஓய்வெடுத்துக் கொண்ட ஒரு என்ஜினீரின் வீட்டுக்குப் போகிறான். ஒரு ஏழெட்டுப் பேர் வருகிறார்கள்.

வயதானவர்கள். ஆனால், தளதளவென்றிருக்கிறார்கள். அவர்களுக்கு வேதம் சொல்லிக்கொடுக்கிறான். அர்த்தமும் சொல்லுகிறான். பத்து மணி சுமாருக்கு வீடு திரும்புகிறான். மீண்டும் தானே சொல்லுகிறான். காலையில் போலவே மாலையில் இன்னொரு நாலு கிழவர்களுக்கு ஒரு பள்ளிக்கூடக் கட்டிடத்தில் பாடம். அது வாரம் நான்கு நாள். மற்ற நாட்களில் பீச்சில் போய் உட்கார்ந்துகொண்டிருப்பான். அங்கே கடல் இரைகிறது. கூட்டம் மொணமொணவென்று முனகுகிறது. இத்தனையும் நிசப்தமாகத்தான் இருக்கிறது.

ஆனால், அம்மாவைப் பார்க்கும்போது, அப்பாவைப் பார்க்கும்போது, சிவசுவைப் பார்க்கும்போது, அந்த நாய்க் கச்சேரிக்குமேலே காதில் ஒரு இரைச்சல் - அம்மாவை எப்போதும் பார்க்கும்போது இல்லை - அப்பாவை எப்போதும் பார்க்கும்போதுமில்லை; சிவசு வந்துவிட்டுப் போகும் நாட்களில்தான் - அல்லது, அவன் நினைவு வரும்பொழுதுகளில் தான்.

திடுதிப்பென்று சிவசுவின் குரல் சில நாட்களில் பிற்பகல் நேரத்தில் கேட்கும். ஒரு ஐந்து நிமிஷம் கேட்கும். ஒரு நாள் மாடி அறைக்குள்ளேயே கேட்டது. அன்று அப்பு முழங்கைமீது தலைவைத்து, பெஞ்சின்மீது சுவர்ப்பக்கம் திரும்பி, கண்ணை மூடி ஒருக்களித்திருந்தான்.

"ஓகோ, சார் படுத்திண்டிருக்காரா!" என்று குரல் கேட்டது. அவன் திரும்பிப் பார்ப்பதற்குள் சிவசுவின் முதுகும் பின்தலையும் மாடிப்படியில் இறங்குவதுதான் தெரிந்தன. அப்புவுக்கு உடலில் நடுக்கம் எடுத்தது. "போ வெளியே" என்று தொண்டை கிழிய, நெற்றி நரம்பு புடைக்கக் கத்தவேண்டும் போலிருந்தது. கீழே சிவசு சிரிப்பது கேட்டது. காதில் இரைச்சலெடுத்தது. விரலைக் காதுக்குள் விட்டு அடைத்துக்கொண்டான். ஆனால் இரைச்சல் அடங்கவில்லை. மார்புக்குள்ளெல்லாம் புரையோடி விண்விண் என்று புண்ணின் நோவாக மோதிக்கொண்டேயிருந்தது. விறுவிறுவென்று கீழே இறங்கினான். சிவசு ஊஞ்சலில் உட்கார்ந்திருப்பது போலிருந்தது. தூணோரமாக அம்மா நிற்கிறாள். அதைப் பார்க்காமலேயே, முகத்தைச் சாதாரணமாக வைத்துக்கொண்டே விறுவிறுவென்று நடையைக் கடந்து தெருவில் இறங்கி வேகமாக நடந்து ஹைரோட்டில் ஏறினான். அப்பாடா! என்ன இரைச்சல்! என்ன சந்தடி! எத்தனை பஸ்கள்! எத்தனை கார்கள்! கார்ப்பரேஷன் குப்பை வண்டிகள் ஒரு வரிசை - பெரிய பெரிய மாடுகளுடன் லொங்குலொங்கென்று, கடகடவென்று வருகின்றன. எங்கோ கடையிலிருந்து வரும் நாடகக் கூச்சலும், ஒரு தட்டான் கடைச் சுத்தியடியலும் சேர்ந்து கொள்கின்றன. ட்ர்

ட்ர் ட்ர் ட்ர் என்று ஒரு மோட்டார் சைக்கிள் அமுதப் பேரிரைச்சலுடன் கடந்து ஓடுகிறது. பால், தேன் - இன்னும் சொல்ல முடியாத இனிமைகளாக எல்லாம் காதில் வந்து ஊற்றுகின்றன. பைக்ராப்ட்ஸ் சாலையில் திரும்பி, பீச்சை நோக்கி நடந்தான். அப்பு. பழக்கூவல்! பூக்கூவல்! லாரிகள்! ஒரே அமுதப் பொழியலாகப் பொழிகிறது! வெயில் வேறு தோலைப் பிழிகிறது. பீச்சு நெருங்குகிறது. நிமிர்ந்து கல்லூரிக் கடிகாரத்தைப் பார்த்தால் மணி மூன்றரைதானாகிறது. கடற்கரை மணல் பரப்பு சூன்யமாகக் கிடக்கிறது. இருந்தாலும் சாலையைக் கடந்து நகர்ந்து, ஒரு மரத்தினடியில் பெஞ்சுமீது உட்கார்ந்து கொண்டான் அவன். மௌனமாகத் துள்ளி விழுந்த கடல் இப்போது லேசாக இரைந்துகொண்டே விழுகிறது.

இங்கே வந்து உட்கார்ந்த பிறகுதான் தெரிகிறது. இங்கு வந்தும் பயனில்லை. இறுக மூடியிருந்த கதவைத் திறந்துவிட்டாற்போலக் காதில் திடீரென்று மீண்டும் சத்தம் கேட்கிறது. மனதுக்குள் அப்பா நின்றுகொண்டிருக்கிறார். அப்பாவை நினைக்கும்போது இந்த இரைச்சலே அருவருப்பே மணியமாகப் போய்விட்டது. அவர் நேரே இருக்கும்போது வருவதில்லை. அவரோடு பேசும் போது வரவில்லை. அவரோடு சேர்ந்து வேதம் ஓதும்போது வரவில்லை. அவர் வேதாந்தபாடம் நடத்தும்போது நாலைந்து நாள் போய், அவனும் இருந்து கேட்டான். அவருடைய தர்க்க மூளை, வக்கீல்களுக்கும் ஜட்ஜுகளுக்கும் சமமாக ஈடு கொடுப்பதையும், சிலசமயம் மீறிக்கொண்டு ஓங்கி வெற்றிக்களிப்புடன் ஒரு படி உயர்ந்து நிற்பதையும் பார்த்திருக்கிறான்; கர்வப்பட்டிருக்கிறான் - எங்கப்பா எங்கப்பா என்று. 'உங்களைப்போல் கார் இல்லாவிட்டால் என்ன, தோட்டம் இல்லாவிட்டால் என்ன, தோய்த்து உலர்த்திக் கசங்கிய அரைக்கைச் சட்டையைப் போட்டுக்கொண்டிருந்தால் என்ன, முக்கால் பழுப்புப் பஞ்சகச்சம் கட்டியிருந்தால் என்ன? எங்கப்பாவுக்கு உங்களை எல்லாரையும் ஒரு நிமிஷம் மட்டிகளாகப் பார்க்க முடியும்' என்று உள்ளுக்குள் சிரித்துக் கொள்ளுவான். ஒரு நாள் அந்த அரை நிமிஷ மட்டிகளைக் கடிந்து, அவர் மண்டையில் போட்டுக் கொள்வதைப் பார்த்து, வெதறிப்போய், சிரிப்பை அடக்கிக் கொண்டான் . . . அவரோடு நாலைந்து தடவை விடியற்காலையில் பேசிக்கொண்டே உலாவ இங்கெல்லாம் வந்திருக்கிறான். அப்போதெல்லாம் இல்லாமல், இப்படித் தனியாக உட்கார்ந்து அவரை நினைக்கும்போது மட்டும் இப்படி உள்ளே புகையும் அனலுமாக எரிவானேன்?

அம்மா அவனை உட்கார்த்தி வைத்து - இரண்டு நாள் மூன்று நாளைக்கு ஒரு முறை - "ரண்டு வாக்யம் கனம் சொல்லுடா கேக்கறேன்",

"குழந்தே! கணீர்னு ஏதாவது சொல்லேன் கொஞ்சம்" என்று கேட்பாள். தொண்டையைக் கனைத்துக்கொண்டு அவன் தொடங்குவான். அவள் முகம் மாறுவதைக் காணும்போது, சொல்லக்கூட ஓடாது. அதில் ஏதோ வெளிச்சம் வந்து படர்கிற மாதிரி இருக்கும். ஒரு நூறு வெள்ளை ரோஜாப் பூக்கள் வந்து லேசாக அசைந்து கொடுப்பது போலிருக்கும். கண்ணை மூடிக்கொண்டிருப்பாள் அம்மா. திடீர் என்று அதில் முத்துமுத்தாகப் பனி வழிகிற மாதிரி . . . என்ன இது . . . அம்மா கன்னத்தில் நீர்தான் ஓடுகிறது.

"என்னம்மா?" என்று நிறுத்தியவுடன் கேட்பான்.

"என்னமோடா குழந்தே. நீ சொல்ற போதெல்லாம் தாங்க முடியாம ஆயிடறதுடா இப்படி . . . யாருதான் இதையெல்லாம் பண்ணினாளோ!"

"பண்ணவாவதும்மா! வேதத்தை யாரும் பண்ணலே. ரிஷிகள் கண்டது அது. ஆகாசத்திலே அந்தத் தத்துவங்கள் எல்லாம் சூக்ஷ்மமா, கண்ணுக்குத் தெரியாம, புத்திக்குத் தெரியாம இருக்கும். ரிஷிகள் தியானம் பண்றபோது, தபஸ் பண்றபோது, ஒண்ணு ரண்டு அவா கண்ணிலே படும். அப்படியே நாக்கிலே சப்தமா மாறிவரும். நீ இப்ப இருக்கே பாரு, இந்த மாதிரி இப்படியே ரொம்ப தூரம் உள்ளுக்குள்ளே இறங்கி இறங்கிப் போயிருப்பா. அப்ப வந்து, ரண்டு மூணு, பூப் பூத்தாப்பல தெரியும். அதைப் பறிச்சிண்டு வந்துடுவா. யாரும் பண்ணலேம்மா. அது அங்கேயே இருக்கு."

"ஆமாண்டா, அப்பாகூடச் சொல்லியிருக்கா" என்று தலைப்பால் கன்னத்தைத் துடைத்துக்கொள்வாள் அம்மா.

அந்த அம்மாவை இப்போது நினைக்கும்போது, ஏன் இப்படி இரைச்சலும் புகையுமாகக் காதிலும் உள்ளிலும் மூச்சடைக்கிறது! ஆனால், அப்பாவை நினைக்கும்போது அது இன்னும் தாங்க முடியவில்லை. அப்பா ஏன் இப்படி இருக்கிறார் - ஒன்றையும் கவனிக்காமல்? ஏன் வீட்டை விட்டு ஓடவில்லை? சன்யாசி ஆகவில்லை? ஏன் அவள் பொங்கிப் போட்ட சோற்றை அவள் கையால் தின்று கொண்டே கிடக்கிறார்! சுசிருசியாக இல்லாதவர்களின் கையால் இட்ட சோறு நம்மையும் அழுக்காக, கரியாகத்தானே செய்யும்! பிருஹந்நளை மாதிரி, சிகண்டி மாதிரி ஆகிவிட்டாரா அப்பா! ஆனால் பிருஹந்நளைகூடப் பின்னலைத் தொங்க விட்டுக்கொண்டு யுத்தகளத்தில் சரமாடிச் சின்னாபின்னப்படுத்தினாளே! . . .

பொழுது நன்றாக இறங்கிவிட்டது. கடற்கரை மணல் முழுவதும் நட்சத்திரங்களைப்போல் மனிதர்கள் முளைத்துக் கிடந்தார்கள். அப்பு எழுந்து அலையண்டை போனான். தெற்கு நோக்கி நீள நடந்தான். ஈர மணல். நண்டுகள் அவனைக் கண்டதும் அப்படி அப்படியே மணலுக்குள் புதைந்து ஒளிந்தன. முன்னும் பின்னும் நகர்வது போதாதென்று பக்கவாட்டிலும் நகரும் அவற்றைப் பார்த்துத் தலையில் மிதிக்கவேண்டும் போலிருந்தது. ஐஸ் ஹவுஸ் அதோ தெரிகிறது. ஈரமணலிலிருந்து ஏறி, சற்று உட்பக்கமாக வந்து உட்கார்ந்துகொண்டான் அவன்.

வெளிச்சம் நரைத்துக்கொண்டே வருகிறது. மணலைச் சமன்படுத்திப் புள்ளி வைத்து வைத்துக் கலைத்துக்கொண்டிருந்தான் அவன். ஈர மணலில் அணைகட்டும் இரண்டு குழந்தைகளை - சின்னக்குழந்தையோடு ஆடையைத் தூக்கி நீர் காலில்பட நின்றுகொண்டிருந்த - அப்பாவும் அம்மாவும் வந்து அழைத்துக்கொண்டு போனார்கள். சிறிது தூரத்தில் 'சலாங்குடு' ஆடிக்கொண்டிருந்த கும்பலை இப்போது காணவில்லை. இருள் நன்கு கவிந்துவிட்டது. தூரத்தில் நீல விளக்குகள் பளிச்சென்று விழித்துக் கொண்டிருந்தன. அப்படியே உட்கார்ந்திருந்தான் அப்பு. மனம், புத்தி எல்லாம் வறண்டு கிடக்கின்றன. ஒன்றுமில்லாமல் வறண்டிருப்பது எத்தனை இதமாக இருக்கிறது! அப்படியே படுத்துக்கொண்டு தூங்க வேண்டும் போலிருக்கிறது. வெகுநேரம் தூங்கவேண்டும் - வெகுநேரம்.

மல்லாந்து படுத்தான். நட்சத்திரங்கள் கண்ணை உறுத்தின. ஒருக்களித்து உள்ளங்கைமீது தலை வைத்துப்படுத்து, கண்ணை மூடிக்கொண்டான். இனிமையான வறட்சி, இரைச்சல், ஒன்றுமே இல்லை. கடல் அலையும், மொணமொணவென்று எங்கோ மனிதர்கள் பேசுவதும், கடலுக்குப் பயந்து மெதுவாகக் கேட்கிற கார் சத்தமும்தான் காதில் விழுகின்றன.

அதிக நேரம் படுக்கை கொள்ளவுமில்லை. எழுந்து உட்கார்ந்தான்.

யாரது? . . . அப்பா மாதிரி இருக்கிறதே . . . அப்பாதான் . . . பயமாக இருந்தது - அவனுக்கு. கஷ்டமாகவும் இருந்தது. அவர் நடை சற்று நின்று, எங்கோ அவர் பார்த்தபோது தெரிந்த நிலை - இரண்டையும் பார்த்துப் பரிதாபப்பட வேண்டும் போலிருந்தது. நம்மைத்தான் பார்க்க வந்திருக்கிறாரோ! பார்க்காமல் போய்விடப் போகிறாரே என்று மார்பு பரந்தது.

"அப்பா!" என்று கூப்பிட்டான். அலையும் வெளியும் அதைச் சாப்பிட்டுவிட்டன. உரக்கக் கத்தவும் மனமின்றி எழுந்து அவரருகே போனான்.

"அப்பா!"

திரும்பினார் அவர்.

"அப்புவா! என்னடாது! இங்கேயா இருக்கே! மணல்லெ சுத்திச் சுத்தி வந்துண்டிருக்கேன் - அரைமணியா! . . . எங்கே போனானோ போனானோன்னு அம்மா புலம்பிண்டேயிருக்கா."

"எங்கே போயிடப்போறேன்? பச்சைக் குழந்தையா!"

"சரிடா, அவளைக் கவலைப்படாதேன்னு சொல்ல முடியுமா?"

"நான் ஊரிலே இல்லாதபோது?"

அவன் குரல் கட்டையாக, வறண்டு ஒலித்தது. அதிலே சாம்பல் பூத்தாற்போலக் கிடந்த கோபம் - இரண்டும் அவர் காதிலே பட்டுவிட்டனவோ என்னவோ - அவர் பதில் சொல்லவில்லை.

"உட்காரலாமாப்பா இப்படிக் கொஞ்சம்?"

"அம்மா காத்துண்டிருக்காடா."

"யாருக்காக?"

எப்படிப் பார்த்தாரோ அவர், இருட்டில் தெரியவில்லை. பேசாமல் சற்று நின்று, பிறகு உட்கார்ந்துவிட்டார்.

சிறிது நேரம் இருவரும் பேசவில்லை. நீதி மன்றத்தின் கலங்கரை விளக்கு இருமுறை சுற்றி வந்துவிட்டது. அலைகள் ஒன்றை ஒன்று இடித்துப் புரண்டன.

"காபிகூடச் சாப்பிடாம வந்திட்டியாமேடா?"

"மறந்து போய்ட்டேன்."

மீண்டும் சிறிது மௌனம்.

"இந்து லெட்டரைப் பார்த்துட்டுக் கவலைப்பட்டுண்டு வந்துட்டியா? இத்தனை நாழியா இங்கேயே உட்கார்ந்திருக்கியேன்னு கேட்கிறேன்" என்று அவன் வேண்டும் என்றே மௌனம் சாதிப்பதைக் குறை சொல்வதுபோல் கேட்டார் தண்டபாணி.

"இந்து லெட்டர் போட்டிருக்காளா?"

"என்னது! நீ பார்க்கலியா?"

"இல்லியே, எப்ப வந்தது?"

"உனக்குத் தெரியாதா? அப்படின்னா நீ வந்தப்புறம் சாயங்காலத் தபாலில் வந்துதோ என்னவோ!"

"இந்து எழுதியிருக்காளா?"

"ஆமா, பவானியம்மாள் திடீர்னு நாலாம் நாள் மயக்கமா விழுந்துவிட்டாளாம். இடதுகாலும் கையும் சுரணை இல்லாம போயிட்டுதாம். அப்புறம் டாக்டரைக் கூப்பிட்டுக் காமிச்சிருக்கா. ரத்தக் கொதிப்பு அதிகமா இருந்துதுன்னு இன்ஜெக்ஷன் போட்டானாம். கால் பாரிச வாயு மாதிரி இழுத்துடுத்தோன்னு முதலில் சந்தேகமா இருந்ததாம். நல்ல வேளையா அப்படி ஆகலியாம். நீட்டி மடக்கிறாளாம். நடக்கக்கூட முடியறதாம். ஆனா நடந்தால் சிரமமாயிருக்காம். உட்கார்ந்துண்டே தான் இருக்காளாம்."

அப்புவுக்கு அதைக் கேட்டுக் கவலை நமநமவென்றது. சிறிது நேரம் ஒன்றும் தோன்றாமல் உட்கார்ந்திருந்தான். பவானியம்மாளுக்கு வலிவான உடம்பு இல்லை. சாதாரணமாக இருப்பாள். ஆனால் வியாதி, தலைவலி, கால்வலி என்றெல்லாம் சொன்னது கிடையாது. பட்டினி கிடக்க அஞ்ச மாட்டாள். காயக்கிலேசம் பண்ணத் தயங்கமாட்டாள். அதனாலேயே உடலில் ஒரு அயர்வு நிரந்தரமாக ஒட்டிக் கொண்டுவிட்டது போலிருக்கும். வயது வேறு அறுபதுக்கு மேலாகிவிட்டது. முப்பது வருடக் காயக்கிலேசம் இப்போதுதான் கைவரிசையைக் காட்டுகிறதோ என்னவோ!

"நான் போய்ப் பார்த்து வந்தால் தேவலையே" என்றான் அவன்.

"கட்டாயம் போகத்தான் வேணும்."

மீண்டும் சிறிது மௌனம்.

"நீ அது தெரிஞ்சிண்டுதான் கவலைப்பட்டுண்டு வந்தியோன்னு நினைச்சேன்" என்றார் தண்டபாணி.

"அது நீங்க இப்ப சொல்லித்தானே தெரியும்?"

"அதுதான் சொல்றேன். இப்படிச் சொல்லாம, சாப்பிடாம வந்துட்டியேன்னுதான் அம்மா கவலைப்படறா . . . உன்னைப் பார்த்தா என்னமோ போலிருக்கே."

". . . "

"என்னன்னு சொல்லேன்."

"ஒண்ணுமில்லேப்பா."

"யாராவது ஏதாவது சொன்னாளா? அண்ணா, மன்னி யாராவது?"

"அவா என்மேலே உசிரா இருக்காப்பா. எனக்கு ஒரு கவலையுமில்லே. சும்மாத்தான் வந்தேன். இங்கேயே, இப்படியே சுத்திண்டிருக்கலாம் போலத் தோணித்து. இருந்துவிட்டேன்."

"திடீர்னு அப்படித் தோணாதுடா அப்பு! வேற யாராவது ஏதாவது சொன்னாளா?. . ."

"ம்ஹ்ம்."

"மத்தியான்னம் யாராவது வந்தாளா?"

". . . "

"கேட்டதுக்குப் பதில் சொல்லேன்."

"எத்தனையோ பேர் வீட்டுக்கு வரா, போறா. அதனாலெ என்ன இப்ப?"

"ஒண்ணுமில்லேன்னா நீ சொல்லப்படாதோ?"

". . . "

"சிவசு வந்தானோ?" என்று அவனைப் பார்க்காமல் சமுத்திரத்தைப் பார்த்துக்கொண்டே கேட்டார் தண்டபாணி.

"வந்தார். நான் படுத்துண்டிருந்ததைப் பார்த்துக் கீழே இறங்கிப் போயிட்டார்."

"அவன் அம்மாவைப் பார்க்கத்தானே வரான்."

அப்பு அவரைப் பார்த்துக்கொண்டேயிருந்தான். அவர் கிழக்கே கடலைப் பார்த்துக்கொண்டிருந்தார். அவருக்குப் பின்னால் தொலைவில் நீதிமன்றத்துக் கலங்கரை விளக்கு சற்றைக்கொருமுறை பளிச்சிட்டுவிட்டு மங்கிக்கொண்டிருந்தது. அலையும் சற்றைக்கொருமுறை ஓங்கி விட்டு மீண்டும் அடங்கிய ஓலமாகப் படிந்துகொண்டிருந்தது. அப்பா கல் மாதிரி உட்கார்ந்திருக்கிறார். முக்கால் இருளில் அவர் தலை மொத்தை நிழலாகத் தெரிந்ததே தவிர, வேறு ஒன்றும் புலப்படவில்லை.

"உங்களைப் பார்த்தால் அழவேண்டும் போலிருக்கிறது. 'நீ ஒரு மனுஷன்மாதிரி' என்று ஒரு 'சீ' போட்டு விட்டுப் போகவேண்டும் போலிருக்கிறது. 'அம்மாவைப் பார்க்கத்தானே வருகிறான்' என்று சொல்லிவிட்டு உட்கார்ந்துகொண்டிருந்த உங்களைக் கண்டால் குமட்டிக்கொண்டு வருகிறது. அந்த வீட்டை விட்டே விரட்டவேண்டும் போலிருக்கிறது" என்று வார்த்தைகள் உள்ளுக்குள்ளே புகைந்து உருண்டுகொண்டிருந்தன. ஆனால் வெளியே ஒன்றும் வரவில்லை. அஞ்சி, கூசி, அவரையே பார்த்துக்கொண்டு, அவனும் ஒரு கல்லாக உட்கார்ந்திருந்தான்.

எல்லாம் ஸ்தம்பித்துக் கிடப்பதுபோலிருந்தது. அலை உருண்டும் வண்டிகள் ஓடியும் விளக்குகள் எரிந்தும் காற்றுத் தவழ்ந்தும்கூட, அப்படியே உலகமே நின்றுவிட்டாற் போலிருந்தது. அப்பாவின் சுரணையற்ற அசட்டையைக் கண்டு காலமே நின்றுவிட்டாற்போலிருக்கிறது. மூச்சு, இயக்கம், எல்லாமே உறைந்துவிட்டாற் போலிருக்கிறது.

சட்டென்று அப்பு அசைந்து கொடுத்தான். எத்தனை நேரமாயிற்றோ, தெரியவில்லை.

"நாளைக்கு நான் சித்தன்குளத்துக்குப் போகலாம்னு பார்க்கிறேன்பா" என்றான் அவன்.

"ம்?" என்று திரும்பினார்.

மீண்டும் சொன்னான் அவன்.

"பவானியம்மாளைப் பார்க்கத்தானே?"

"ம்க்கும்."

"போய்ட்டுவா . . . போய்ட்டு உடனே திரும்பிவிடலாமோல்லியோ?

"அத்தை என்ன சொல்றாளோ! பார்த்துண்டுதானே வரணும்."

"சரி, அம்மா பரந்து போயிடுவ, சீக்கிரமா வராட்டா - அதுக்காகச் சொன்னேன்" என்று எழுந்தார் அவர்.

"ஏம்பா?"

"எத்தனை நாழி இங்கேயே இருக்கிறது? வீடுன்னு இருக்கு. வேற எங்கே போவேன்?" என்று அவன் எழுந்தவுடன் நடக்க ஆரம்பித்தார் அவர்.

"எனக்கு ஒண்ணும் புரியலேப்பா" என்று நடந்துகொண்டே சொன்னான் அப்பு.

"ஒண்ணையும் புரிஞ்சுக்கச் சிரமப்படப்படாது. பேசாமல் பார்த்துண்டேயிருக்கணும். அதுக்காகத்தான் ஸ்வாமி நம்மைப் படைச்சிருக்கார்."

அப்புவுக்குச் சற்றுத் திகைப்பாக இருந்தது. அதைக் கேட்டு, உள்ளுக்குள்ளே கொதித்தது. அடக்கிக்கொண்டே, "புரியறதோ என்னமோ - எனக்கு ஒண்ணும் பிடிக்கவேயில்லை" என்று உதட்டைக் கடித்துக்கொண்டான்.

"என்ன பண்றது?" என்றார் அவர். பிறகு இருவரும் பேசவில்லை.

வீட்டு வாசற்படி ஏறும்போதே, "என்னடா அப்பு? எங்கடா போயிட்டே? மத்தியானம் போனவன்!" என்று திண்ணையிலிருந்து எழுந்து வந்த அம்மா சட்டென்று நிறுத்திவிட்டாள். அதற்குமேல் பேச

முடியவில்லை. குரல் நடுங்கிக் கரகரத்தது.

"எங்கண்ணா போய்ட்டே?" என்று கேட்ட காவேரி அம்மா தழதழப்பதைப் பார்த்தாள்.

"சும்மாத்தாண்டி, பீச்சிலே போய் உட்கார்ந்திருந்தேன்."

"போண்ணா! அம்மாட்டகூடச் சொல்லாமதான் போறதாக்கும். இனிமே எங்கே போனாலும் சுருக்க வந்துடு அண்ணா. நாழியாகுமானா, சொல்லிட்டுப் போ" என்று அம்மாவைப் பார்த்துக்கொண்டே சொன்னாள் காவேரி.

"சரி சரி, போ. இது என்ன பரபரப்பு? யாராவது கேட்டா சிரிப்பா."

இதையெல்லாம் கேட்டு அப்புவுக்கு உடல் குன்றிற்று. அம்மா தன்னிடம் காட்டும் பரிவை - இவர்கள், காவேரிகூட - புரிந்துகொண்டு ஒத்து ஊதுகிறாளே என்று ஒரு லஜ்ஜை ஊவா முள்ளாகச் சிறு குத்தல் குத்திற்று. என்னைப் பார்த்தால் சின்னப் பையன் மாதிரி இருக்கிறதா? ஏன் இப்படி எல்லாரும் புலம்புகிறார்கள்? நானாக எதையும் செய்ய எனக்குத் திராணி கிடையாதா? சுய மூச்சுக் கிடையாதா? இல்லை, இந்த வீட்டையே கண்டு நான் சிணுங்குவதை இவர்கள் புரிந்துகொண்டு, என்னைக் குழந்தையாகவே அடித்து, வாயை மூடப்பார்க்கிறார்களா?

சாப்பிடுவதற்குமுன் ஜபத்திற்காக உட்கார்ந்த சிறு பொழுதில் இதையேதான் நினைத்துக் கொண்டிருந்தான் அவன். அப்பொழுது யாரும் அதிகமாய்ப் பேசவில்லை. கிருஷ்ணன் எதோ கல்லூரியில் நடந்ததைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தான். மற்றவர்கள் ஒட்டாமல் கேட்டுக் கொண்டிருந்தார்கள். காவேரி நிமிராமல் உம் போட்டுக் கொண்டிருந்த அப்புவையும் அம்மாவையும் மாறிமாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

சாப்பாடு முடிந்ததும் அப்பு சித்தன்குளத்துக் கடிதத்தை வாங்கிக்கொண்டு மாடிக்கு வந்துவிட்டான்.

"அப்புவுக்கு அநேக கோடி நமஸ்காரம்" - என்று ஆரம்பித்து, கடற்கரையில் அப்பா சொன்ன செய்திகளைக் கடிதம் உருளை எழுத்துகளில் சொல்லிற்று . . . "சிலசமயம் அத்தையைப் பார்க்கும்போது கவலையாகப் போய்விடுகிறது. எப்போது வரப்போகிறானோ என்று

உன்னைப் பற்றி இரண்டு தடவை சொன்னாள். நீ முடிந்தால் வந்து பார்த்துவிட்டுப் போனால் அவளுக்குத் திருப்தியாயிருக்கும். ஆனால் வேலை இருந்தால் சிரமப்பட வேண்டாம். அத்தை உன்னைப் பற்றிப் பேசத் தொடங்கினால் ஒரு மணி நேரம் பேசுகிறாள். உன் அம்மா, அப்பா எல்லாருக்கும் என் நமஸ்காரங்களைச் சொல்லவும். அத்தையும் ஆசி கூறுகிறாள். தப்பு இருந்தால் மன்னித்துக்கொள்ளவும். அநேக நமஸ்காரம் - இந்து."

நாலைந்து தடவை அதைப் படித்த அப்புவுக்குக் கண்ணை அப்பால் எடுக்க முடியவில்லை. பவானியம்மாளின் சோர்ந்த உடலும் பெருமூச்சும் அப்போதைக்கப்போது கண்முன் வந்துவிட்டுப் போயிற்று. இந்துகூட நன்றாக எழுதுகிறாளே! எங்கே உட்கார்ந்து எழுதியிருப்பாள்? எப்படி எழுதியிருப்பாள்? பலகை அல்லது ராமாயணப் புத்தகத்தை மடிமேல் வைத்துக் கொண்டு எழுதினாளா? அல்லது குமாஸ்தா மேஜை முன் வைத்து எழுதினாளா? . . . அந்த மேஜைமீது தலையை வைத்துச் சாய்ந்திருந்தபோதுதான் அன்றுவந்தாள். தலையை வருடினாள் . . . பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள். இந்து, இந்து . . . நான் எங்கேயோ வந்து உட்கார்ந்திருக்கிறேனே . . . சத்திரத்தில் வந்து தங்கினவன் மாதிரி இருக்கிறதே. இங்கு . . . தப்பு இருந்தால் மன்னித்துக் கொள்ளவுமா? எந்தத் தப்பைச் சொல்லுகிறாய்? எழுத்துத் தப்பு ஒன்றுமில்லையே . . .

கடிதத்தைப் பார்த்துக்கொண்டேயிருந்தான் அவன்.

"என்னடா அப்பு எழுதியிருக்கா?"

அம்மாவின் குரலைக் கேட்டுத் தூக்கி வாரிப்போட்டது.

"ஒண்ணுமில்லேம்மா, எழுத்துச் சரியாப் புரியலை. பார்த்துண்டிருந்தேன்" என்று திக்கிட்டுப் போனாற்போல் தடுமாறினான் அவன்.

"அதுக்கு இப்படிப் பதறுவானேன்?" என்று அவனைக் கண்ணெடுக்காமல் பார்த்தாள் அம்மா. அப்பு கடிதத்தை மடித்தான்.

"நாளைக்குச் சித்தன்குளத்துக்குப் போறியாமே?"

"ஆமாம்மா - பார்த்துவிட்டு வர வேண்டாமா?"

"பார்த்துவிட்டு வரத்தானே வேணும்."

அழுத்தம் பின்பகுதியில் விழுந்ததைக் கேட்டு நிமிர்ந்தான் அவன்.

"ஏம்மா?"

அம்மா ஒரு நிமிஷம் பதில் சொல்லவில்லை. திரும்பிப் பார்ப்பது போலவே, கடைக்கண்ணாலேயே நாலு பக்கமும் பார்ப்பது போலிருந்தது.

"அம்மாவைப் பிடிக்கலேன்னு அங்கேயே இருந்துவிட மாட்டியே . . ?" அவன் காதுக்கு மட்டும் எட்டும் தாழ்ந்த குரலில் வந்தது இது. ஆனால் முழுவதையும் சொல்லி முடிக்க முடியவில்லை அவளால். அதற்குள் கன்னம், உதடெல்லாம் கோணி நடுங்கின. கண்ணில் தெப்பம் கட்டிவிட்டது.

அப்பு தலையைக் குனிந்துகொண்டான்.

*

அப்புவின் மூத்த சகோதரி சேலத்தில் வாழ்க்கைப்பட்டிருந்தாள். கலியாணமாகி ஒன்பது வருடமாகிவிட்டது. ஆனால் மூன்று தடவைக்குமேல் பிறகு பெற்றோர் வீட்டுக்கு வந்ததில்லை. கடைசியாக வந்தது மூத்த பையன் கிருஷ்ணனின் கலியாணத்தின் பொழுது. கலியாணத்திற்கு நேராகச் சிதம்பரத்திற்கு வந்துவிட்டார்கள் கணவனும் மனைவியும். முகூர்த்தத்தன்று மாலையே மனைவியை அழைத்துக்கொண்டு புறப்பட்டு விட்டான் - அந்த மாப்பிள்ளை. வந்திருந்தவர்கள் நல்ல வார்த்தை சொல்லி, தாடையைப் பிடித்து, அவன் தங்கமுடியா விட்டால் அவளையாவது ஒரு வாரத்திற்கு விட்டுப் போகுமாறு கெஞ்சிய பிறகு, ஒன்றும் சொல்லவும் மெல்லவும் முடியாமல் அவன் மட்டும் புறப்பட்டுப்போனான். அப்படி முரடனுமல்ல. பேச்செல்லாம் நயமாக, அடக்கமாகத்தானிருக்கும். ஊருக்கு, உலகத்துக்கு அவன் நல்லவன்தான். அவன் மளிகை வியாபாரம் நடத்துகிற கடைத் தெருவில் அவனுக்கு நல்ல பெயர்தான். வியாபாரிகளைக் குற்றவாளிகளாக நினைக்கிற பல அதிகாரிகளிடம்கூட நல்ல பெயர் வாங்கியிருந்தான். மாமனார் வீட்டோடு மட்டும்தான் அவன் ஒட்டவில்லை.

"என்னமோ, நம்மைக் கண்டால் அவனுக்குப் பிடிக்கலெ" என்று

தண்டபாணி காவேரியிடம் ஒருநாள் சொன்னார்.

"அத்தோட விடவேண்டியதுதான். 'என்மேலே பிரியமா இருஇருன்னு, பல்லைக் காட்டிண்டு நிக்க முடியுமா நாம!" என்று அலங்காரமும் விட்டுவிட்டாள். கார்த்திகைச் சீர், நவராத்திரிச் சீர் என்று பெரிய பிள்ளையிடமே கொடுத்தனுப்பி விடுவாள்.

"ரொம்ப நாளாச்சே நீ அவளைப் பார்த்து. திருச்சினாப் பள்ளி வழியாகப் போறதுக்குப் பதிலா ஈரோடு வழியாப் போயேன். சேலத்திலே ஒருநாள் இறங்கிக்கோ. அவளைப் பார்த்துவிட்டு அப்புறம் நேராய் பஸ்ஸிலேகூடப் போயிடலாம். சுருக்குவழி. ஈரோடுகூடப் போகவேண்டாம்" என்று அப்புவை வழி திருப்பினாள் அலங்காரம்.

அதோடு நிற்கவில்லை. ஏழரை மணி சுமாருக்கு டாக்சி கொண்டுவரச் சொன்னாள். அப்புவை ஸ்டேஷனில் கொண்டு விடுவதற்காகத் தானும் கிளம்பிவிட்டாள். ஒரு நாளுமில்லாத திருநாளாகக் கோபு அன்று கிளப்பிலிருந்து சீக்கிரமே வீட்டுக்கு வந்துவிட்டான்.

"டேய், நீ எப்பவுமே ஸ்பெஷல்தாண்டா. உனக்குத் தனியா ஒரு படிப்பு. ஒரு குடுமி. நீ ஊருக்குப் போறேன்னா டாக்சி. அதுவும் அம்மாவே கொண்டுவிடவரா. நான் கல்கத்தாவுக்குப் போனேனே, ட்ரெயினிங்குக்கு, அப்பகூட அம்மா வரல்லெ. நீ தனி தாண்டா. நீ கனபாடில்ல! வேதம் படிச்சா அதுக்குத் தனி மரியாதை, தனி வாகனம்! எப்படியெல்லாம் நடக்குது பார்! சிவசு சார் மாத்திரம் இன்னக்கிக்காலமே இங்கே வந்திருக்கட்டும். 'ஓய் பிராமணா, உம்ம காரைக் கொடுத்தனுப்பும்யா கொஞ்சம்'னு நிச்சயம் அந்த ப்ளிமத்தை வாசல்லெ கொண்டு நிறுத்தியிருப்பா அம்மா. நீ பலே ராஜாடா!" என்று வேட்டியை லேசாகத் தூக்கித் தொடையிடுக்கில் செருகியவாறு ஒரு கையால் அப்புவின் முதுகில் அடித்தான் கோபு.

"பின்னே உனக்குத்தான் ஸ்பெஷலா செய்யணுமாக்கும்? கிளப்பிலே போய் தினம் மூணு சீட்டை வச்சிண்டு பாராயணம் பண்ணிண்டேயிருக்கியே - அதுக்கு பாத பூஜை பண்ணணுங்கிறியோ உன்னை உட்கார்த்திவச்சு!"

"யம்மா யம்மா - நான் நெஜம்மாத்தாம்மா சொன்னேன்" என்று அப்பால் நகர்ந்தான் கோபு.

டாக்சி வந்தது. அப்புவோடு அலங்காரத்தம்மாள் ஏறிக்கொண்டாள். வேறு யாரையும் அவள் துணைக்குக் கூப்பிடவில்லை. அந்தக் குழந்தைகள் வரட்டுமா என்று கேட்கவும் துணியவில்லை.

"சுருக்க வந்துசேரு" என்றார் தண்டபாணி.

"சரிப்பா."

டாக்சி மாடுகளைக் கடந்து ஊர்ந்தது.

அம்மா சிறிது நேரம் பேசவில்லை. மவுண்ட் ரோடு சேர்ந்ததும், "இந்தக் கோபு ஏதோ சொல்லித்தேன்னு வருத்தப்படறியோடா அப்பு?" என்று கேட்டாள்.

"வருத்தப்படும்படியா ஒண்ணும் சொல்லலியே அவன்."

"ஒரே பேத்தலா எப்பவும்போலப் பேத்தித்தே அது. உன்னை மட்டும் தனியா கவனிப்பேன்னுது. அவர்கிட்ட கார்கூடக் கேட்டிருப்பேன்னுது ஸ்டேஷனுக்கு உன்னைக் கொண்டுவிட!"

"அவன் வேடிக்கையாத்தானேம்மா சொன்னான்! நீ பண்றதெல்லாம் பார்த்தா எனக்கே வெட்கமாக இருக்கேம்மா. எனக்கு மட்டும் என்ன தனியா?"

அதற்குப் பதில் அப்பொழுது வரவில்லை. வெகுநேரம் கழித்து வந்தது. ஸ்டேஷனை அடைந்ததும் ப்ளாட்பாரத்துக்குள் போனபொழுது, நீலகிரி ரயில் புறப்படவேண்டிய பாதை வெறுமே கிடந்தது. வண்டி புறப்பட ஒரு மணிநேரம் இருந்தது. ஆனால் வண்டித்தொடரை இன்னும் ப்ளாட்பாரத்துக்குக் கொண்டுவரவில்லை. அப்புவும் அம்மாவும் ஒரு துணியை விரித்து உட்கார்ந்துகொண்டார்கள்.

"நீ தனிதாண்டா அப்பு. உன்னைத் தனியா கவனிச்சு கவனிச்சுத்தானேடா நான் பிராயச்சித்தம் பண்ணிக்கணும். நீதானே கடைசிப் பிள்ளை எனக்கு."

அம்மாவை நிமிர்ந்து பார்க்கப் பயமாயிருந்தது அவனுக்கு.

"என்னத்தைப் பண்ணிச் சுட்டுக்கலாம்னு, அலைஞ்சேன். நெருப்பாலே சுட்டுக்கறதா, கரண்டுலெ கொண்டு கையை வைக்கிறதா?

அதெல்லாம் என்ன பண்ணித்தொலைக்கும்? சாகத்தானே அடிக்கும்? சாம்பலாத்தானே அடிக்கும்? கடைசியிலே, உன்னைப் பாடசாலையிலே கொண்டு விட்டுவிடறதுன்னு நிச்சயம் பண்ணிண்டேன். வேதம் படிச்சா வயசேது? அவாள்ளாம் ரிஷியாயிடுவா. நெருப்பா ஆயிடுவா. அப்படி நீ வருவே, அப்ப உன்னைப் பார்த்து, உன் கால்லெ விழுந்து எல்லாத்தையும் எரிச்சுடலாம்னு தீர்மானம் பண்ணிண்டேன் . . ."

அம்மா உதட்டைக் கடித்து அழுதுகொண்டிருந்தாள். புடவைத் தலைப்பால் கண்ணைத் துடைத்துக்கொண்டாள். ஆங்காங்கு ப்ளாட்பாரத்தில் எட்ட நிற்பவர்கள் அதைப் பார்த்துக்கொண்டு நின்றார்கள்.

"என்னம்மா இது!" என்றான் அப்பு.

"பேசாம இரும்மா!"

அம்மா சிரமப்பட்டு அடக்கிக்கொண்டாள். முகத்தைத் துடைத்துக்கொண்டாள்.

"இந்த மூணுக்கும் - கோபு, வேம்பு, காவேரி - மூணுக்கும் என்னைக் கண்டா பிடிக்கலெ. காலைச் சுத்தின பாம்பானா விடாமல் வந்து தொலைச்சிண்டேயிருக்கு. அது வர்றபோதெல்லாம் கடைசி ரண்டும் துடிச்சுச் செத்துப் போறதுகள். மூஞ்சியைக் காமிக்காம எதிர்த்த உள்ளு இருட்டிலேபோய்க் கண்ணை அவிச்சிண்டு கிடக்கு ரண்டும். மன்னி அடுப்பை விட்டு வந்ததில்லே. தானும் சாதமா வெந்து போயிடப்படாதான்னு வேண்டிண்டிருக்கோ என்னமோ அது? . . . நான் என்னடா பண்ணுவேன்? உன்னோட வந்துடணும்போல இருந்தது. நானும் வரலாமோன்னு உன்னைக் கேட்கலாம்னு பார்த்தேன். காலமே பிடிச்சு யோசிச்சிண்டேயிருந்தேன். நீ போகப்படாது. போகப் படாதுன்னு ஏதோ சொல்லிண்டேயிருந்தது. அப்புறம்தான் ஸ்டேஷனுக்காவது போய்ட்டு வருவோம்னு வந்தேன். நீ திரும்பி வருவியோ வரமாட்டியோன்னு திக்குதிக்குங்கறது. அதுக்காகத்தான், கூடவே, உன்னை நாயாத் துரத்திண்டு வந்தேன்."

கடகடவென்று ஒரு ட்ராலியைத் தள்ளிக்கொண்டு கடந்து செல்கிறான் போர்ட்டர். நாலைந்து பேர் - மூன்று பேர் என்று பிரயாணிகள் கூட்டம் இருவரையும் நெருங்கி நின்றன. ப்ளாட்பாரத்துக் கூட்டம் பெருகிற்று. ஓரத்தில் இருந்தவர்கள் முன்னே வந்து நின்றார்கள். "வண்டி

வந்துண்டிருக்கும்மா" என்று எழுந்தான் அப்பு. அம்மாவும் எழுந்தாள்.

இருவரும் பேசவில்லை. கூட்டத்தை இடித்துக்கொண்டு ஏறி, இடம் பிடித்து உட்கார்ந்தும் பேசவில்லை. அம்மா ஜன்னலைப் பார்ப்பதும் அவனைப் பார்ப்பதுமாக உட்கார்ந்திருந்தாள். நடுநடுவே உதட்டைக் கடித்து அளவற்ற பிரயாசையுடன் அடக்கிக்கொள்வது போலிருந்தது. அதையும் மீறிக்கொண்டு அது கண்ணில் வந்து மிதந்தது. சுற்றிலும் ஏக இரைச்சல். இருக்கைக்கு அடியில் தள்ளும் பெட்டி முனைகளிலிருந்து காலைக் காத்துக்கொள்வதிலேயே பாதிப்பொழுது போய்விட்டது. அந்தப் பெட்டியை உள்ளேயிருந்து இழுத்திழுத்துத் திறந்துகொண்டிருந்தார் அதன் சொந்தக்காரர்.

சற்றுப் பேசாமலிருந்த அம்மா, "உனக்கு ஜாதகங்களும் வந்துண்டிருக்குடா அப்பு" என்று அவனை உற்றுப் பார்த்தாள்.

"எதுக்காக?"

"எதுக்காகவா? ஜாதகம் எதுக்குக் கொண்டு கொடுப்பா? ரொம்ப நன்னாருக்கு கேட்கிறது!"

அப்பு வாயை மூடிக்கொண்டான். சற்றுக் கழித்து, "இப்படியே இருந்தாப் போரும்" என்று, என்னென்னமோ குமுறி வந்ததை அடக்கிவிட்டு, முகத்தைச் சாதாரணமாக வைத்துக்கொண்டு சொன்னான்.

"குதிரையிலே விளக்கெண்ணெயைக் கலந்துவிடப் போறான்னு சொன்னானாம் ஒரு மாப்பிள்ளை. அந்த மாதிரி பேசறியே! . . . நல்ல இடமாக வரணும்னுதான் நான் பேசாமல் இருக்கேன். சேஷராமன் இருக்கானே, தமிழ் வாத்தியார் - அவன்கூட அனுப்பிச்சிருக்கான்."

"போன வாரங்கூட அவரைப் பார்க்கப் போயிருந்தேனே. அப்பா ஏதோ ப்ரூஃபைக் கொடுத்துட்டு வரச் சொன்னாளே."

"அந்தப் பொண்ணைப் பார்த்தியோ?"

"பார்த்தேன்."

"எப்படி யிருக்கா?"

"ரொம்ப லட்சணமாத்தான் இருக்கா."

"வெறுமே சொல்றதா லட்சணம்னு? லட்சம் பொண்களை நிறுத்தி வச்சா கிடைக்காது அந்த மாதிரி."

அப்பு நினைத்துப் பார்த்தான். உண்மைதான். அசாதாரண வடிவம்தான். அவன் 'ப்ரூஃபை' எடுத்துப்போனபோது சேஷ ராமன் வீட்டில் இல்லை. அவருடைய இரண்டு பையன்களும், இந்தப் பெண்ணும், அதை அக்கா என்று கூப்பிட்டு அவன் வந்ததைத் தெரிவித்த ஒரு பத்து வயதுப் பெண்ணும்தானிருந்தார்கள்.

"யாரு?" என்று கேட்டுக்கொண்டு அந்தப் பெரிய பெண் பிறகு வந்தது. எத்தனை பெரிய கண்! இமைதான் எத்தனை நீளம்! எவ்வளவு வளைவு! வேறு ஒன்றையும் சிறிது நேரம் பார்க்க முடியாதபடி அடித்துவிடுகிற கண் அது! ஆண் பிள்ளைகளைக் கண்டு பொய் மிரட்சி மிரளுகிற பெண்களைப் போல் மிரளாமல் அது சற்று ஏற இறங்கப் பார்த்தது அவனை. அவன் உயரத்தைப் பார்த்துத்தான் பிரமித்ததோ என்னவோ! பிறகு அடங்கிய புன்சிரிப்புடன் யாரென்று கேட்டது. முகம் சற்றுச் சதுரம். பிலிபிலுவென்று தலையின் முன் மயிர் ஸ்நானம் செய்து உலர்த்திப் பம்மியிருந்தது.

"சேஷராமன் இருக்காரா?"

"இல்லையே. நீங்க யாரு? . . . உள்ள வாங்களேன்."

"பரவாயில்லெ, இந்தக் கவரை அவர் வந்தா, கொடுத்துவிடணும். தண்டபாணி அனுப்பிச்சார்னு சொல்லணும்."

"தண்டபாணி மாமா அனுப்பிச்சாரா?"

"ஆமா"

"நீங்க . . .?"

"நான் அவர் பிள்ளை."

"அப்புவா?"

"ஆமாம் . . ." அவனுக்குத் திகைப்பாக இருந்தது 'உங்களுக்கு எப்படித் தெரியும்?' என்று கேட்க வேண்டும் போலிருந்தது.

"அப்புவா?" என்று கேட்டவுடன் அவள் கண் இன்னும் பெரிதாகிவிட்டது. புன்னகை இன்னும் நீண்டு ஓரத்தில் புள்ளியிட்டது. "உள்ளே வாங்களேன்" என்று பின்னே நகர்ந்தாள் அவள். அப்பா! எப்படி இத்தனை அழகாயிருக்கிறாள்! ஐயோ ஐயோ! என்று கூசி நடுங்கிக்கொண்டே உள்ளே தொடர்ந்தான்.

"அடையாளமே புரியல்லியே, ஓரேடியா உசந்து போய்!" என்றாள் அந்தப் பெண்.

"நான் பார்த்ததே இல்லியே" என்று பெஞ்சு முனையில் உட்கார்ந்து கொண்டு இழுத்தான் அவன். கூடம், அப்பால் முற்றம், குழாயடி, அங்கே கரியேறிய வெண்கலப் பானை, பற்றுப் பாத்திரங்கள் எல்லாம் தேய்க்கப் போட்டிருந்தன. ஒரே அழுக்கும் பாசியும் பிடித்த தண்ணீர்த் தொட்டி. குழாயிலிருந்து அதைவிடக் கறுப்பாக ஒரு பழைய தகரக் கூடல்வாய் தொட்டிமீது சாய்ந்து இணைந்திருந்தது. அந்தச் சூழ்நிலைக்கும் அவளுக்கும் பொருத்தமோ பாந்தமோ இல்லை.

"உங்க அக்கா கலியாணத்தின்போது நான், அம்மா, அப்பா எல்லாம் வந்திருந்தோமே. நான் அப்ப ரண்டாவது பாரம் படிச்சிண்டிருந்தேன் . . . அப்ப நீங்க சின்னப்பையனா. . . இப்போ அடையாளமே தெரியலியே! . . . இருங்கோ, அண்ணாவைக் கூப்பிடறேன்" என்று முற்றத்தை ஒட்டியிருந்த மாடிப் படி ஏறினாள் அவள். ஒரு நிமிஷத்திற்குள் ஒரு அண்ணா இல்லை, இரண்டு அண்ணாக்கள் வந்தார்கள்.

"தண்டபாணி மாமா பிள்ளையா நீங்க?" என்று சொல்லிக்கொண்டே வந்தான் சற்று உயரமாக இருந்தவன், இந்தத் தங்கைக்கும் இவர்களுக்கும் எத்தனை வித்தியாசம்! மூக்கு நீளம், நீளத்தலை, மிகச் சாதாரண முகம். கன்னமும் மோவாயும் தான் அந்தத் தங்கை மாதிரி - இருந்தன. உள்ளே போன தங்கை வெளியே வந்தாள். வேலை செய்து வேர்த்துப் பளபளத்த முகத்தைத் துடைத்துக்கொண்டு வந்தாள் போலிருக்கிறது. மூக்கிலும் கன்ன எலும்பிலும் கண்ட எண்ணெய் அகன்று, துடைத்த இலைமாதிரி இருந்தது. இப்போது அண்ணன்களோடு பேசிக்கொண்டிருந்த அப்புவின் கண்முன் அந்தப் பெரிய கண்களும், அசாதாரணமாக நீண்டு வளைந்த இமை மயிரும்தான் இமைத்துக் கொண்டிருந்தன. இந்த வீட்டில் இவ்வளவு அழகாக எப்படியிருக்க முடிகிறது இவளால் என்று நினைத்துக்கொண்டேயிருந்தவன், முதலில் அவர்கள் கேட்ட கேள்விகளைக்கூடச் சரியாகக் காதில் வாங்கிக்கொள்ளாமல், பின்பு ஜாக்ரதைப் படுத்திக்கொண்டான். அவன் படிப்பு, சம்பாத்யம், எல்லாம்

பற்றிக் கேட்டார்கள் அவர்கள். பாடசாலையில் பதினாறு வருடம் படித்தது, மைசூரில் பரிட்சை கொடுத்தது, இப்போது மாசம் முன்னூறு ரூபாய் சம்பாதிப்பது - எல்லாவற்றையும் கேட்கக்கேட்கச் சொல்லிக் கொண்டே வந்தான். நடுநடுவே அவளைப் பார்த்தான். சமையல் அறை நிலையோரமாக நின்றிருந்தவளைப் பார்க்கும்போது யாரோ அழகாகக் கோலம் போட்டு நிமிர்த்தி நிறுத்தியது போலிருந்தது. இடையில் மட்டும் ஒரு வர்ணம்போன பூப்போட்ட புடைவை. வேலை செய்த ஈரம், துவளல், கசங்கல் எல்லாம் அதில் ஒண்டிக் கிடந்தன. சமையலறைக்குள் சற்றுப் போவதும், மீண்டும் வந்து நின்று பேச்சைக் கேட்பதுமாக இருந்த அவள் முகத்தின் மலர்ச்சியையும் பரபரப்பையும் பார்க்கும்போது, வீட்டில் ஏதோ பண்டிகை வந்துவிட்டதுபோலிருந்தது.

காபி போட்டுக் கொடுப்பதற்காகத்தான் அவ்வளவு அலைச்சல் உள்ளுக்கும் கூடத்திற்கும்.

குடித்துவிட்டு, விடை பெற்றுக்கொண்டுவந்து பஸ்ஸில் ஏறியவன், வெகு நேரம்வரையில் அந்த வீட்டையே நினைத்துக் கொண்டிருந்தான். தாயாரில்லாத குடும்பம் என்று - இரவு அப்பாவிடம் செய்தியைச் சொல்லும்போதுதான் தெரிந்தது. அவள் மாநிறத்துக்கும் குறைவான பழுப்பு. ஆனால் அந்தக் கண்ணும் முகச் சதுரமும் அசாதாரணக் களையும் புஷ்டியும் அந்தப் பழுப்பை வெண்கல விளக்கை விபூதியிட்டுத் தேய்த்தது போலத் துடைத்துவிட்டுப் பொலிய வைத்தன.

இப்போது அம்மா சொன்னதும், அத்தனையையும் அந்த இரைச்சலுக்கிடையில், நெருக்கத்திற்கிடையில், இறுக்கத்திற்கிடையில் பார்த்தான் அவன்.

"லட்சணம் கிடக்கட்டும். சமர்த்துன்னா சமர்த்தா அது? அதுக்கென்ன? பள்ளிக்கூடம் முழுக்கப் படிக்க முடியலெ. அவ அம்மா செத்துப்போயிட்டா. வீட்டைக் கவனிச்சுக்க ஆளில்லை. படிப்பை நிறுத்திட்டார் அவர். ஆனா உடம்போடு பிறந்த சமர்த்தை நிறுத்த முடியுமோ? படிச்சாமட்டும் வராத பணிக்கையும் குரலையும் பேச்சையும் நிறுத்த முடியுமோ! . . . அதெல்லாம் பார்த்துத்தான் உங்கப்பா மாஞ்சுபோய்ட்டா. நீ போயிட்டுவந்த மூணா நாளைக்கே ஜாதகத்தைத் தூக்கிண்டு வந்தது அந்தப் பிராமணன். நல்லவேளையா அப்பா இல்லெ. இருந்திருந்தா, 'ஜாதகத்திலெல்லாம் எனக்கு நம்பிக்கை கிடையாது ஸ்வாமி. பையன் மனசுக்குப் பிடிச்சா சரி'ன்னு எத்தையாவது உளறிக்கொட்டிருப்பா. நான் ஜாதகத்தை வாங்கி வச்சிண்டு, 'வந்தாக்

கொடுக்கறேன்'னு சொன்னேன். அப்பா வந்ததும் கொடுத்தேன். அப்புவுக்கு நிச்சயமா அந்தப் பெண்ணைப் பிடிக்கத்தான் பிடிக்கும்னு ஆரமிச்சா அப்பா. ரொம்ப அழகாயிருக்கு, இந்தக் கிரிசை கெட்டவ பொண்ணைப் பண்ணிக்கவா பதினாறு வருஷம் தபஸ் பண்ண அனுப்பினேன் நம்ம பிள்ளையைன்னு சத்தம் போட்டப்புறம் அப்பா பேச்சை நிறுத்தினா. சேஷராமன் சாதுதான். ஆனா, அவ செத்துப் போயிட்டா. சொல்லப்படாது - அவ சேஷராமன்மாதிரி இருந்திருந்தா சரின்னு தாராளமாப் பண்ணலாம். முதல்லெ ஒரு சேட்டுப் பள்ளிக்கூடத்திலே அந்தப் பிராமணன் வேலையாயிருந்துது. பிள்ளைக்குப் பூணல் போடறேன்னு அது எல்லாரையும் ஒரு நாளைக்குக் கூப்பிட்டிருக்கு. சேட்டையும் கூப்பிட்டிருக்கு, அவன் வந்தான். அப்புறம், அவா ரண்டு பேரையும் ஏதோ விசேஷம்னு கூப்பிட்டான். போனா. அப்புறம் அவ சேட்டு வீட்டுக்கு ஊறுகாய் பண்ணிக்கொண்டு கொடுப்ப. நம்ம சமையல் அவன் பெண்டாட்டிக்குப் பண்ணக் கத்துக் கொடுக்கிறேன்னு போவ. அவ்வளவுதான், ரொம்ப தூரத்துக்குப் போயிடுத்து. சேஷராமன் ரண்டு வருஷம் சகிச்சுப் பார்த்தான்; முடியலெ. அந்தப் பள்ளிக்கூடத்தையே விட்டுவிட்டு இன்னொரு கோடிக்குப் போவோம்னு, சைதாப்பேட்டையைப் பார்க்க வந்து சேர்ந்தான். எத்தனை தூரம் வந்தால் என்ன? வாழைப் பால் கறை வெளுத்தா போயிடும்? துணி கிழிஞ்சாத்தான் உண்டு. இந்த சம்பந்தத்துக்கா பதினாறு வருஷம் புடம்போட்டேன்? ஜாதகம் பொருந்தலேன்னு லெட்டர் போட்டுவிட்டு மறுகாரியம் பார்க்கட்டும்னு சொன்னேன். எழுதச் சொல்லி, லெட்டரை போஸ்ட் பண்ணினப்புறம்தான் எனக்குக் குளிர் விட்டுது. அப்புறம்தான் தெரிஞ்சுது அப்பா வேணும்னுதான் உன்னை அங்கே ப்ரூஃபைக் கொடுக்கச்சொல்லி அனுப்பிச்சான்னு. நீ அவளைப் பார்க்கணுமாம். உனக்குப் பிடிச்சிருக்கான்னு தெரிஞ்சுக்கறதுக்காக அனுப்பிச்சாளாம்! என்னை ஒரு வார்த்தை கேட்கப்படாதான்னேன். பேசாம முழிக்கிறா. உனக்கு ரொம்பப் பிடிக்கும்னு நெனச்சேன்னு இழுத்தா, அப்புறம். 'நான் பிடிக்கலேன்னு சொல்லுவேனா? அப்படிச் சொன்ன வாய்க்குச் சோறு கிடைக்காது. எனக்கும் உங்களுக்கும் பிடிச்சுட்டுதுன்னா, அத்யயனம் பண்ணின குழந்தையைக் கசாப்புக் கடையிலே விட்டுவிட முடியுமா?'ன்னு கேட்டேன். அப்புறம்தான் வாயை மூடிண்டா அப்பா . . ."

தெருவோடு போகும்போது சரக்கென்று பருந்து ஒன்று கையிலிருக்கிறதை லாவிக்கொண்டு, தோலையும் கீறிவிட்டுப் போனதுபோல் இருந்தது, அப்புவுக்கு. முட்டி வேடிக்கை பார்த்த அந்தத் திகைப்பை இரண்டு மூன்று விநாடி கழித்துச் சமாளித்துக்கொண்டான்.

சேஷராமனின் பெண்ணை அவன் பிறகு அதிகமாக நினைத்துப் பார்க்கவில்லை. ஏழெட்டுத் தடவை அந்த ஞாபகம் வந்தபொழுதுகூட, ஒரு வியப்புத்தான் வரும் -மேகத்தை, அதில் உருகி ஓடும் வெள்ளியைப் பார்ப்பதுபோல. அதைக் கையில் பிடிக்கவேண்டும் என்று நினைக்க என்ன இடம்? இப்போது அம்மா செய்ததைக் கேட்டதும் நெஞ்சுத் தோல் கீறிக் கிடந்தது.

எந்த அம்மா பேசுகிறாள்? முதல் அம்மாவா? இரண்டாவது அம்மாவா? கோபு, வேம்பு, காவேரியின் அம்மாவா? கிருஷ்ணன், விசாலம், அப்புவின் அம்மாவா? உன்மத்தம், பேய், சங்காதோஷம் என்று ஏதாவது தொற்றிக்கொண்டு விட்டதா இவளை?

திரும்பி அம்மாவை ஒருதடவை பார்த்தபோது சாதாரணமாக, அதே அம்மாவாகத்தான் இருக்கிறாள். அதே நிதானம், பெருமிதம், எங்குபோனாலும் சிம்மாசனத்தைத் தூக்கிக்கொண்டு போகிற அம்மாவாகத்தான் இருக்கிறது.

அம்மா பிறகு ஏதோ சொன்னாள். அப்புவுக்கு அது காதில் ஏறவில்லை. திகைப்பும் நினைவும் காதை அடைத்து விட்டிருந்தன.

"நான் இறங்கிக்கறேண்டா, அப்பு" என்று கூட்டம் நடையை அடைப்பதைக் கண்டு எழுந்தாள் அம்மா. "அக்கா, அத்திம்பேர், எல்லார் சௌக்யத்துக்கும் லெட்டர் போடு" என்று, குரலைத் தாழ்த்திக்கொண்டு, "அத்திம்பேர் கலகலன்னு இல்லாம இருந்தார்னா, அதுக்காக அலட்டிண்டே இருக்க வாண்டாம் நீ. ஏதோ பார்க்கணும்னு போனோம், பார்த்தாச்சுன்னு திருப்தியா இருந்துவிட வேண்டியதுதான். எல்லாரும் நன்னா இருக்கவேண்டியது. நம்மகிட்ட பேசினா என்ன, பேசாட்டா என்ன? சொல்லணும்னு தோணித்து, சொல்லி வச்சேன்" என்று நகர்ந்து கீழே இறங்கிவிட்டாள்.

## 2

மாடியில் அந்தப் பெரிய அறையின் இதமான குளிர்ச்சியை அனுபவித்துக்கொண்டே, சாய்வு நாற்காலியின் சட்டத்தை முன்தள்ளி, காலை நீட்டிப் படுத்திருந்தான் அப்பு. வெளியே குருட்டு வெயில் அயர அடித்தது. ஆனால் அறையின் அமைப்புக் காங்கையை வடிக்கட்டி, காற்றைக் குளிர்வித்துப் பரப்புவது போலிருந்தது. வெளிச்சமும் அரை

வெளிச்சமாக வடிகட்டினாற் போலிருந்தது. கண்ணுக்கும் தோலுக்கும் வந்த இதத்தில், பக்கத்தில் கிடந்த பத்திரிகைகளைக்கூடப் படிக்க மனமில்லாமல் ஜன்னலைத் தவழ்ந்து வெளியே தெரிந்த மாமர இலைகளையும் ஊடே பூசின வான் நீலத்தையும் பார்த்துக்கொண்டே சாய்ந்திருந்தான் அவன்.

அவளுடைய சகோதரியின் கணவன் பகல் சாப்பாட்டுக்கு வந்தவர், சாப்பிட்டு, ஒரு பூனைத் தூக்கம் போட்டுவிட்டு மீண்டும் கடைக்குப் போய்விட்டார். குழந்தைகள் இரண்டும் பள்ளிக்கூடம் போயிருந்தன.

அவருக்குப் பலசரக்கு வியாபாரம். அவர் ஒரு சின்ன மொத்த வியாபாரி. பெரிய கடை. வீடும் பெரிய வீடு. கறவைக்கு இரண்டு பசுக்கள், ஒரு எருமை, அவற்றிற்கு வைக்கோல் போர், ஒரு காங்கயம் மாடு போட்ட வில்வண்டி, இரண்டு மாமரங்கள், காய்கறித் தோட்டம் - எல்லாம் வீட்டைச் சூழ்ந்திருந்தன. மாடியில் ஒரு பெரிய ஹால், அதை ஒட்டி இரு பக்கமும் இரண்டு அறைகள், முன்னால் ஒரு மொட்டை மாடி. இந்த ஹாலில்தான் அவர் விவகாரங்கள் செய்வார் போலிருக்கிறது. மழமழவென்று சுவரோரமாக நாலு கருங்காலி பெஞ்சுகள், நடுவில் ஒரு ஊஞ்சல், அதற்கு நாலு வெள்ளிக் கமலப் பூண்கள், கருங்காலி நாற்காலிகள் நாலைந்து, சாய்வு நாற்காலியில் ஒரு மான்தோல், இரண்டு எஃகு பீரோக்கள், சுவரில் தைத்த புத்தக அலமாரி, ஒரு கண்ணாடி வைத்த ஒற்றைக் கதவு பீரோ, - சித்தன்குளத்துப் பண்ணைக்காரர்களைப் போல இவரும் வீட்டை நிகுநிகுவென்று, எல்லா வசதிகளையும் வைத்து நிறைத்திருந்தார். அதிலேயே பகட்டும் டம்பமும் இல்லாத ஒரு சிக்கனம் வேறு.

அக்காவுக்குக் கலியாணம் ஆனபொழுது அவர் சாதாரணமாகத்தானிருந்தார். சில்லறைக் கடை. வீடும் சொந்த வீடில்லை. அடுத்த தெருவில் குடியிருந்தார். கலியாணம் ஆன மறு வருடமே, மொத்த வியாபாரத்தில் இறங்கி இந்த வீட்டை வாங்கி, இடித்துக் கட்டிவிட்டாராம். அக்காவின் சாந்திக் கலியாணம் அந்தக் குடியிருந்த வீட்டில் நடந்தது. அதற்குப் பிறகு எட்டு வருடங்களுக்குப் பிறகு, இப்போதுதான் வந்திருக்கிறான் அப்பு. இந்த வீடு கட்டின கிரகப்பிரவேசத்திற்கு அப்பாவும் அம்மாவும் வந்தார்களாம். அவர்களோடு பெரிய சண்டையாகப் போட்டு அனுப்பினாள் அக்காளின் மாமியார். அவள் இப்போது கீழே பெரிய படுக்கையாக முன் அறையில் படுத்திருக்கிறாள். தலைமாட்டில் மஞ்சளும் வெள்ளையுமாக இருபது மருந்துப் பெட்டிகள் - மாத்திரைகள், ஊசி மருந்துகள், டானிக்குகள். அவளுக்கு ஏதோ இதயக்

கோளாறாம். நான்கு வருடமாக அப்படியே படுத்திருக்கிறாளாம். வீட்டிற்குள்ளேயே சிறு நடமாட்டம்தான். நாளுக்குப் பதினாறு மணிநேரம் தூக்கம். இப்போதும் தூங்கிக் கொண்டுதானிருக்கிறாள். சம்பந்தி அம்மாளை நிமிர்ந்து பார்த்துக்கூடப் பேசமாட்டாளாம். பிள்ளையைப் பெற்ற பெருமை. அதோடு பண ஏற்றம், வீம்பு. போக்குவரத்துக்கூட நின்று போனதற்கு இந்த அம்மாள்தான் காரணமோ என்னமோ. எப்போதாவது சீர்கொடுத்து அண்ணாவை அனுப்புவாளாம் அம்மா. "என்னத்துக்கு இதெல்லாம்? அவாவா இருக்கிற இடத்திலே இருந்தாலே போருமே. இதையெல்லாம் நாங்க எதிர்பார்க்கலேன்னு சொல்லிவிடுங்கோ" என்றாளாம் இந்த மாமியார் ஒருமுறை அண்ணாவிடம். அதிலிருந்து அவன் இங்கே வருவதை நிறுத்திவிட்டானாம்.

காலையில் அப்பு வந்து இங்கு படியேறியபொழுது அக்கா எங்கோ கொல்லையிலிருந்தவள் அகல முகமும் சிரிப்பும் வியப்புமாக ஓடி வந்தாள். தனக்கும் சேர்ந்து அவள் பூரித்துவிட்டாற்போல, "அட அப்புவா! வாப்பா, எப்ப வந்தே?" -என்று புன்னகையை அதிகமாக மலரவிட்டு விடாமல் நிறுத்திக்கொண்டார் அவள் கணவர். அதையேதான் செய்தாள் படுத்திருந்த தாயாரும். அவர் உதட்டில் வெகுநேரம் புன்னகை நீடித்துத் தங்கியே கிடந்தது. தாயார் மறுகணமே உதட்டைப் பழைய நிலைக்குக் கொண்டுவந்து விட்டாள். அதுதான் வித்தியாசம். ஆனால், அவளையும் சொல்லி என்ன? அவளுக்கு இருந்த உடம்பில் புன்னகை செய்வதற்காக உதட்டைச் சற்று விரிப்பதுகூடப் பாடாக இருக்கும்போல் தோன்றுகிறது.

அவரும் பேசாமலில்லை. அப்பா, அம்மா, சகோதரர்கள் எல்லாரையும் பற்றி விசாரித்தார். அப்புவின் படிப்பு, சம்பாத்தியம் பற்றி எல்லாம் விசாரித்தார். சுருக்கமாக இருந்தாலும் எதையும் விடவில்லை. கடைசியில் நாலுநாள் இருந்துவிட்டுப் போகலாம் என்றும், ஏர்க்காடு, குகை, மேட்டூர் எல்லாம் பார்த்துவிட்டுப் போகலாம் என்றும் உபசாரம் செய்துவிட்டுத்தான் கடைக்குப் போனார். அத்தனையையும் ஏற்றுக்கொள்ள முடியாவிட்டாலும் ஒன்றிரண்டையாவது செய்துதான் தீர வேண்டும். இல்லாவிட்டால், கொஞ்ச நஞ்சம் இருக்கிற நைந்த தொடர்பும் இற்றுவிடும் என்று தீர்மானம் செய்துகொண்டான் அப்பு.

லேசாக அடியோசை கேட்டுத் திரும்பினான் அவன். நாலைந்து முறுக்கின ஈரத் துணிகளைத் தோளில் போட்டு வந்த அக்கா, மொட்டை மாடியில் உலர்த்திவிட்டு உள்ளே வந்தாள்.

"அப்பாடா" என்று பக்கத்திலிருந்த பெஞ்சின்மீது உட்கார்ந்தாள்.

"வீடு ரொம்ப அழகாயிருக்குடீ விசாலம். அதுவும் இந்த ஹால் எப்படிக் குளுகுளுன்னு இருக்கு!"

"ம்" என்று அஸ்வாரஸ்யமாகத் தலையாட்டினாள் அக்கா. "எல்லாம் நன்னாத்தானிருக்கு. இதோ அலமாரி நிறைய புஸ்தகம் வாங்கிக் கொடுத்திருக்கார்" என்று எழுந்து, அலமாரியைத் திறந்து காட்டினாள் அவள். தமிழும் இங்கிலீஷுமாகப் புதிது புதிதாக அடுக்கியிருந்தன அதில்.

"உனக்கு வாசிக்க நேரம் இருக்கோ?"

"மத்யானம் எல்லாம் என்ன பண்றது? அதுகளும் பள்ளிக்கூடம் போயிடறதுகள். மாமியாரும் தூங்கிண்டிருப்பர். என்னதான் பண்றது? . . . ஆனா, படிக்கணும்னு உட்கார்ந்துப்பேன். கொஞ்சம் வாசிப்பேன். அப்பா நினைவு வரும். அப்பாகிட்ட குமாரசம்பவம், ரகுவம்சம், சுந்தர காண்டம், நாலாந் திருமுறை எல்லாம் வாசிச்சேண்டா அப்பு. அதெல்லாம் நினைச்சுட்டா, படிக்க ஓடாது. அப்பாவை ஒரு பத்து நாளைக்கு இங்கே அழைச்சு வச்சுக்கணும்னு நினைப்பேன். எங்க நடக்கப் போறது?"

"லெட்டர் போட்டா வரமாட்டாளா?"

"நான் லெட்டர் போட்டாப் போருமா?"

"ஏன் அவர் போடமாட்டாரா?"

"அதெல்லாம் நடக்காதுடா அப்பு."

"ஏன் அப்படிச் சொல்றே?"

"அம்மா இருக்கிற வரையில் நடக்காதுடா."

"என்ன அப்படிக் கசப்பு உங்க மாமியாருக்கு - அப்பா அம்மாகிட்டே."

"அப்பாகிட்ட என்ன கசப்பு! அம்மாகிட்டதான். அப்பா அம்மாவுக்கு ஆமடையானா இருக்காரோல்லியோ, அதுதான் அப்பா பண்ற தப்பு!"

"அம்மா என்ன பண்ணிவிட்டா - இவா கண்ணை உறுத்தும்படியா?"

"அதைப்பத்தி இப்ப என்ன? விட்டுத் தள்ளு."

"நானும் பதினாறு வருஷம் வீட்டிலேயே இல்லை, விசாலம்."

"நல்லவேளையா கண் காணாமல் போயிருந்தே. ஸ்வாமியாத்தான் கொண்டுபோனார்னு வச்சுக்கோ - இந்த எழவெல்லாம் கண்ணிலே படாமல்."

"வந்தப்பறம், என் கண்ணிலேயும் படறாப்பல இருக்கே."

"என்னது! . . . இன்னுமா அம்மாவுக்குப் புத்தி வரல்லெ?. . . சிவசு இன்னுமா வந்துண்டிருக்கான்?"

சரேலென்று கோபுவை ஊஞ்சலில் பார்ப்பதுபோலிருந்தது அப்புவுக்கு.

"நான் வந்து இரண்டு மாசமாகப் போறது. அதுக்குள்ளே காலமேயும் மத்யானமுமா அவனைப் பதினைஞ்சு தடவைக்கு மேலே பார்த்து விட்டேன்."

அக்கா பேசாமல் உட்கார்ந்திருந்தாள். ணிக்ணிக் என்று ஒரு மாமரத்து அணில் மோனத்தில் ஆணியடித்துக்கொண்டிருந்தது. இடையிடையே எங்கோ வானில் பறந்துகொண்டே ஒரு கழுகு குழந்தைபோலக் கத்தும் குழைவு கேட்டது. வெகு நேரம் பேசவில்லை அக்கா. மறுபடியும் அவள் ஆரம்பித்த பொழுது ஒரு முப்பது வருடம் போய்விட்ட மாதிரியிருந்தது.

"அம்மாவை நினைச்சா அங்கலாய்ப்பா இருக்குடா அப்பு . . . அப்பாவோடு இருக்கிறது கஷ்டமோ என்னமோ, எனக்குத் தெரியலெ . . . ஆனா, கடைசி மூணும்தான் அவமனசோட பெத்த குழந்தைகள்னு தோணறது. அவ சுய புத்தியோடதான் இருக்கா. சிவசுவைப் பார்க்காமல் அவளாலெ இருக்க முடியாது. நீயும் நானும் மாமியாரும் ஆமடையானும் ஊரும் உலகமும் கோச்சுண்டு என்ன பண்றது?"

"என்னது!" முதலில் ஒன்றும் புரியவில்லை அவனுக்கு. நன்றாகப் புரிந்துகொள்ளச் சிறிது நேரமாயிற்று. ஏதோ வழுக்கு மரத்தின் நடுவில் இருந்த கயிறு - பிடிப்புகளைக்கூடப் பற்றிக் கொள்ள முடியாமல் விர்ரென்று வழுக்கி இறங்குவதுபோலிருந்தது.

"சிவசு வராமல் இருக்க மாட்டான். சொன்னால் அப்பாவைத்தான் ஏதாவது சொல்லணும். அவர் துணியைக் கிழிச்சுக் கோவணம் கட்டிண்டு சன்னாசியாகப் போயிருக்கணும். அதுகூட வாண்டாம். அவரைக்கொண்டு இங்கேயே வச்சுனுட முடியும் என்னாலெ. ஆனா, அப்பா வரமாட்டாரே. அம்மாவை விட்டுவிட்டு அவராலே இருக்க முடியாதே. இத்தனையும் சகிச்சிண்டு அவளைப் பார்த்துண்டு இருப்பாரே தவிர, விட்டுவிட்டு வரமாட்டார். பிராணன் போறவரைக்கும் இப்படித்தான் இருக்கப்போறார். ஆனா, அவரை இந்தண்டை இழுத்துண்டு வந்துட்டா, சீக்கிரம் அவர் பிராணன் போய்விடும்."

அப்புவுக்குச் சட்டென்று மனம், புத்தி, எல்லாம் மரத்தாற் போலாகிவிட்டன. குனிந்து, கோத்த புறங்கைகளைப் பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்தான்.

மனது இயங்கத் தொடங்கினபொழுது, ஸ்டேஷனில் உட்கார்ந்து அம்மா அழுததைச் சொன்னான் . . . "நீ தாண்டா எனக்குக் கடைசிப் பிள்ளைன்னு அழுதாடி, அம்மா. 'பிராயச்சித்தம் பண்ணிக்கிறதுக்காகவே உன்னை வேதத்திலெ கொண்டு விட்டேன். அப்புறம் உன் கால்லெ விழுந்து எரிச்சுக்கலாம்னு பார்த்தேன்'னுவேறு சொல்லி, என்னை ஒரு க்ஷணம் பிழிஞ்சு போட்டா. நீயானா என்னத்தையோ சொல்றே?"

அக்காவின் கண் வெறித்தது - ஒரு நிமிடம்.

"பாவம் பண்ணிவிட்டதாக நினைச்சிண்டு அப்படிச் சொல்லியிருக்கா. அதுக்காகக் கடைசி மூணும்தான் சந்தோஷமாய்ப் பெத்த குழந்தைகள் என்கிறது பொய்யாகிவிடுமா?"

"எனக்கு ஒண்ணும் புரியலே விசாலம்!"

"புரிஞ்சிண்டு என்ன ஆகப்போறது. பேசாம இரு."

"எனக்கு அங்கே இருக்க முடியாது போலிருக்கே."

"உன்னை யாரு இருக்கச் சொல்றா?"

"அம்மா துடிச்சுப் போய்ட்டாளே - நான் வருவேனோ மாட்டேனோன்னு."

"நான் என்னத்தைச் சொல்றது? அம்மா வேணும்னா அம்மாவோட

இரு. வேறு என்னென்னமோவெல்லாம் வேணும்னா, நான் என்னத்தைச் சொல்றது? எனக்குப் பட்டதைச் சொல்லியாச்சு."

அப்பு மறுபடியும் புறங்கையைப் பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்தான். இப்போது மாமரத்தில் இரண்டு அணில்கள் மாறி மாறி ணிக்கிட்டுக் கொண்டு இருந்தன.

"நான் மாமியாருக்கு மருந்து எடுத்துக் கொடுக்கணும். பழம் பிழிஞ்சு கொடுக்கணும். கீழே போறேன். கொஞ்சம் தூங்கேன். இல்லாட்டா பத்திரிகையெல்லாம் இருக்கு. பார்த்துண்டிரேன்" என்று, உலர அவிழ்த்திருந்த தலைமயிரைக் கட்டி முடிந்துகொண்டே கீழே இறங்கினாள் அக்கா.

அவள் ஏதோ கட்டளையிட்டுவிட்டதுபோல, பத்திரிகைகளையெல்லாம் புரட்டிப் பார்த்தான் அப்பு. புத்தக அலமாரியிலிருந்து புரட்டிப் புரட்டிப் பார்த்தான். அலுப்புத்தான் மிஞ்சிற்று. ஜன்னலில் உட்கார்ந்து வேடிக்கைகளும் மாடிப்படி நிலைகளுமாகக் கண்ணை உறுத்தின. அது சற்று ஒதுங்கினாற்போலிருந்த தெரு. நடமாட்டம் இல்லை. நிசப்தமாயிருந்தது. வீடும் சற்று உள் தள்ளின வீடு.

கோமாளி வேடம் போடுகிறவன் பேசுவதைக் கேட்டு எல்லாரும் சிரிப்பார்கள். ஆனால் தனக்கு எல்லாருமாகச் சேர்ந்து கோமாளி வேடம் போட்டு - அவன் சிரிக்க வைப்பதற்குப் பதிலாக - அவர்களே அவனைப் பார்த்துச் சிரிப்பது போலிருந்தது அவனுக்கு.

காப்பியைக் குடித்துவிட்டுக் கடைத் தெருவைச் சுற்றினான். சாக்கடையாக மாறிவிட்ட ஆற்றைப் பார்த்துச் சிறிது நேரம் நின்றுகொண்டிருந்தான். இரவு அக்காளின் கணவரோடு ஒரு சினிமாவுக்குப் போனான். மறுநாளைக்கு அவரோடு ஏர்க்காட்டுக்குப் போனான். எதிலும் பொருளோ வியப்போ இல்லை. சினிமாவுக்கு ஏன் போனோம், ஏர்க்காட்டுக்கு ஏன் போனோம், என்ன பார்த்தோம் - என்று புரியாமல் மனம் இயக்கமின்றி, சலனமின்றிச் சலவைக்குப் போடுகிற துணி மூட்டையாகக் கிடந்தது.

வந்த மூன்றாம்நாளே பஸ் ஏறி, சித்தன்குளத்திற்குப் புறப்பட்டுவிட்டான்.

# 3

வேலூர், கரூர், எல்லாம் தாண்டியாகிவிட்டது - காவேரி பக்கத்திலேயே வரத் தொடங்கிவிட்டது. நகர்ந்தும் நெருங்கியும் மாறிமாறி வந்த நதியை வெற்று நெஞ்சோடுதான் பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்தான் அப்பு. தூரத்தில் கொல்லிமலை வானத்திற்கே நீலம் பூசி நீண்டு கிடந்தது. வெற்று நெஞ்சம்தான் . . . ஆனால் இந்த வெற்று நெஞ்சம் வேறு மாதிரியாக இருக்கிறது. சேலத்தில் இரண்டு நாள் சுருண்டு மூலையில் கிடந்த மூட்டையாக இல்லை. குளிர்க்காற்று வீசுமுன் நிற்கும் மந்தம்போல எதற்கோ இடத்தை ஒழித்து விடுகிற வெற்று நெஞ்சமாக மிதந்தது. எதோ முப்பது வருடங்களுக்கு முன்னால் விட்டுவிட்ட பாடசாலையைப் பார்க்கப் போவதுபோல் பொங்கி நிரம்பிற்று. ஒருகணம் அவனால் அதைத் தாங்கக்கூட முடியவில்லை. எதிரே உட்கார்ந்திருப்பவர்கள் - முன்னும் பின்னும் உட்கார்ந்திருப்பவர்கள் - அத்தனை பேரும் தெரிந்த முகங்கள்போல நெஞ்சு சொந்தம் கொண்டாடிற்று. இந்தச் சாலைத்திருப்பங்கள், இந்த வயல்கள், இந்தக் கடை, இந்த ரயிலடி - எல்லாம் அப்படியே தானிருக்கின்றன - அன்று பார்த்தமாதிரி. கால், மார்பு எல்லாம் கிளுகிளுத்தன. சித்தன் குளத்துச் சாலையில் இறங்கி ஊருக்குள் நடக்கும்பொழுது கால் பாவுகிறாற் போலவே இல்லை, மிதப்பது போலிருந்தது. ஜன்னலில் உட்கார்ந்திருந்த மணியக்காரர் அவன் போவதைப் பார்த்துச் சட்டென்று எழுந்து வாசலுக்கு வந்து, "அப்புவா?" என்று குரல் கொடுத்தார். துரைசாமியின் குழந்தை வழக்கம் போலக் கீழ்த்திண்ணையில் காலைத் தொங்கப் போட்டு உட்கார்ந்திருந்தது. சற்றுப் பெருத்திருந்தது. வாயில் பாம்பு விரலையும் மோதிர விரலையும் போட்டுக் கொண்டிருந்த அந்தக் குழந்தை வழக்கம்போல் அவனைப் பார்த்துப் புன்னகை பூத்தது. இன்னுமா இதற்கு ஞாபகம் இருக்கிறது என்னை என்று பதிலுக்குச் சிரித்துக்கொண்டே நடந்தான். பாடசாலைத் திண்ணையில் உட்கார்ந்திருந்த இரண்டு பையன்கள் அவனைப் பார்த்ததும், "அப்புடா, அப்பு!" என்று எழுந்து உள்ளே ஓடினார்கள். அவர்கள் என்ன சொன்னார்களோ - அவன் வாசற்படி ஏறி, இடை கழியைக் கடப்பதற்குள் - ஊஞ்சலில் படுத்திருந்த பவானியம்மாள் எழுந்து உட்கார்ந்து, மெதுவாக அவனைப் பார்க்கத் திரும்பிக்கொண்டிருந்தாள். சமையல் அறையிலிருந்து இந்து எட்டிப் பார்த்துவிட்டு, "அப்புதான் அத்தை! வா, அப்பு" என்று மேல் புடவையைச் சீர்படுத்திக்கொண்டு கூடத்திற்கு வந்தாள். பையன்கள் இரண்டு பேரும் ஓடி வந்து அவன் கையிலிருந்த இரண்டு பைகளையும் வாங்கி வைத்தார்கள்.

"வாடா அப்பு!" என்று திரும்பிக் காலை இந்தப் பக்கம் போட்டு அவனை வரவேற்ற பவானியம்மாள், "இப்பதான் வறியா?" என்று தழதழத்தாள். "வா" என்று அப்புறம் ஒரு வார்த்தைதான் சொன்னாள் அவள். மேலே பேச முடியாமல் கண் மல்கி மங்கிற்று.

"இப்பதான் வரேன் அத்தை! உடம்பு எப்படியிருக்கு?" என்று அப்படியே நீளமாகக் கீழே விழுந்து சேவித்தான் அப்பு.

"தீர்க்காயுசா மகாராஜனா இருக்கணும்" என்று அவள் கண்ணைத் துடைத்துக்கொண்டாள். "அப்பு நாளைக்கு வருவண்டீன்னு சொல்லிண்டேயிருந்தேன் இந்துகிட்ட - இந்து, பார்த்தியாடீ? எங்க போயிட்டே அதுக்குள்ள?"

"வரேன் அத்தை" என்று - அத்தை அழுவதைப் பார்த்துத் தனக்கும் கண்டம் கலங்கி, அதை அடக்குவதற்காக உள்ளே போன இந்து - கண்ணைத் துடைத்துக்கொண்டே வெளியே வந்தாள்.

"நேத்தி முழுக்க, அப்பு வந்துடுவன் பாரு நாளைக்கு, அப்பு வந்துடுவன் பாரு நாளைக்குன்னு ஓயாமல் உன் ஸ்மரணையாவே இருந்தா அத்தை."

"உன்னைப் பார்க்காமல் எப்படி அப்பு செத்துப்போக முடியும் எனக்கு? அந்த வரையில் எனக்கு நல்ல மனசுதாண்டா" என்று மீண்டும் அத்தை தழதழக்க ஆரம்பித்துவிட்டாள்.

"என்ன பண்ணித்து உடம்பு?"

"போன சனிக்கிழமைதான். மத்தியானம் சாப்பிடறதுக்கு இலை போட்டுக் கூப்பிட்டேன். கையைக் காலை அலம்பிண்டு வரேன்னு கிணத்தங்கரைக்குப் போனா. என்ன ஆச்சோ! அங்கேயே மடேர்னு சொம்பைப் போட்டுண்டு விழுந்தா. கிடுகிடுன்னு ஓடினேன். இந்தப் பசங்க ரண்டும் ஓடி வந்தது. கிட்டக்கப் போனா, ஒரே மூர்ச்சையாப் போட்டுக்கிடக்கு அத்தைக்கு. உடனே கருப்பையாவுக்குச் சொல்லி அனுப்பிச்சுது. வந்தான். ரண்டு மாத்திரையை உரைச்சுக் கொடுத்தான். கைக்கும் காலுக்கும் துவளை போடச் சொல்லி எண்ணெய் கொடுத்தான். போட்டுது. மத்தியான்னம் சாம்புவை அனுப்பிச்சு பண்ட் ஆஸ்பத்திரி டாக்டரை அழைச்சிண்டு வரச் சொல்லித்து. அவர் வந்து சோதிச்சுப் பார்த்தார். ரத்தக் கொதிப்பு இருக்குன்னார். இன்ஜக்ஷன் போட்டார்.

உள்ளுக்கு மருந்து கொடுத்திருக்கார். நான்தான் லெட்டர்லே எழுதியிருந்தேனே - இடது கையும் காலும் தொங்கியே போயிடுமோன்னு நினச்சுது. ரண்டு நாள் போனப்பறம்தான் சொல்ல முடியும்னார் டாக்டர். அப்புறம் மறுபடியும் வந்தார். நல்ல வேளையா கையும் காலும் பிழைச்சுது. வாத்தியாரும் ஊரிலே இல்லே. பேத்திக்கு சாந்திக் கலியாணம்னு போனார். போன இடத்திலே ஜுரம் வந்துவிட்டதாம். ஒரு மாசம் ஆகும் போலிருக்கு வரதுக்குன்னு எழுதிவிட்டார். அன்னிக்கு இருந்ததைப் பார்த்தா பயமாத்தான் இருந்தது. எதுக்கும் அப்புக்கு லெட்டர் போடுடீன்னா. ஒரு மாசமா பாடமோ இல்லை. பையன்களை வச்சுண்டு என்ன பண்றது? சார்ஜைக் கொடுத்து எல்லாரையும் ஊருக்குப் போகச் சொல்லியாச்சு. இந்த ரண்டு பசங்கதான் இருக்கு. கூப்பிட்ட குரலுக்கு மனுஷா வேணுமே . . ." என்று இந்து சொல்லிக்கொண்டிருந்தாள். அப்பு அவளையே பார்த்துக் கொண்டிருந்தான் - அவனறியாமல்.

திடீர் என்று அவள் கண்ணில் நாணம் நெளிந்தது. உதட்டில் வேறு தவழ்ந்தது. பேச்சுச் சட்டென்று நின்றது. அப்பு முகத்தைத் திருப்பிக்கொண்டான். இந்து என்ன இவ்வளவு அழகாக இருக்கிறாள்!

"வாத்தியாரும் இல்லை. பசங்களும் ஊருக்குப் போயிடுத்து. ஆண் பிள்ளையானாலும் சாண் பிள்ளைதானே இந்த ரண்டும்! இதுகளை வச்சிண்டு என்னன்னு செஞ்சுக்க முடியும்? அப்புவைக் கொண்டுவிட மாட்டியான்னு ஸ்வாமிகிட்ட புலம்பிண்டேயிருந்தேன்."

"இப்ப என்ன? நீ ஊருக்குப் போய் நாலஞ்சு நாள் வரைக்கும் 'ஏண்டா அப்பு' - ன்னு ஒரு தடவைக் கூப்பிட்டுட்டுத்தான் திருத்திப்ப அத்தை." இந்துவின் குரல் தணிந்திருந்தது.

"இனிமே ஒண்ணும் சொல்றதுக்கில்லை. மூணு தடவைதான் இந்த மயக்கம் வருமாம். மூணாவது மயக்கத்திலே ஸ்வாமி அழச்சிண்டு போயிடுவார். ஆனா எப்ப வரதோ -இன்னிக்கும் நாளைக்கும் வருமாம் - நாளைக்கோ, அடுத்த மாசமோ, அடுத்த வருஷமோ!"

"எனக்கு அப்படியெல்லாம் பயமாத் தோணலே அத்தே" என்றான் அப்பு.

"பயமென்ன பயம்? ரண்டு மூணு பேர் இந்த மாதிரி கிடந்ததைப் பார்த்திருக்கேனே, அதனாலெ சொல்றேன். நான் - போறதைப் பத்திப் பயப்படலேடா அப்பு. நீயும் போய்ட்டே. இனிமே வாத்தியார்

உடம்பையும் நம்பறத்துக்கில்லெ. நம்ம மண்டை சாஞ்ச கையோட பாடசாலையும் மண்டையைப் போட்டுவிடுமோன்னு கிலியா இருக்கு. அதை நினைச்சா படபடன்னு வந்துடறது. விரையைப் போட்டுட்டா வளர்ந்துண்டேயிருக்க வாண்டாமோ? ஆரமிச்ச காரியத்தை நிறுத்தலாமோ? மனுஷா வருவா, போவா; ஸ்வாமி காரியம் நின்னு போயிடலாமோ அதுக்காக . . .?"

பவானியம்மாளுக்கு லேசாக இரைத்தது. பேசவே சிரமப்பட்டாள். முகத்தில் எல்லையில்லாத கவலையும் பயமும் உறைந்து கிடந்தன. அப்பு பேசாமலிருந்தான்.

"உனக்கு வெளியிலே சம்பாத்தியம் வரும். இப்பவே பெரிய மனுஷாள்ளாம் ரொம்ப ஆதரவா, கௌரவமா இருக்கான்னு எழுதியிருந்தே. உன் லெட்டரை வாசிக்கிறபோது தட்சிணாமூர்த்தி உட்கார்ந்து சொல்லிக் கொடுக்கிறாப்போல இருந்தது. எப்பவும் சின்னவாதான் பெரியவாளுக்குச் சொல்லிக் கொடுக்கணும். எனக்கும் எல்லாம் ஒடுங்கறதைப் பார்த்தேன், அந்தக் கிழவாளுக்குச் சொல்றாப்பல எனக்கும் ஏதாவது சொல்லுவியோன்னுதான், முடிஞ்சா வரச் சொல்லி எழுதுடிம்மான்னு இந்துகிட்டச் சொன்னேன்."

"என்ன அத்தே, என்னென்னமோ சொல்றேள்?"

"நான் நினைச்சதைச் சொல்றேன். நான் உபதேசம் வாங்கிக்கணும்னு உன்னைக் கூப்பிடலே. இந்தக் காரியம் தொடர்ந்து நடக்கணுமே - அதுக்கு ஏதாவது வழி சொல்லு."

"நான் என்ன அத்தே சொல்லணும்? நீங்க எப்படிச் சொன்னாலும், செய்யறதுக்குத்தானே நான் இருக்கேன். எனக்கு வாயைவிட்டுச் சொல்றதுக்கு . . . முகத்துக்கு நேராச் சொல்றதுக்கு முடியலெ. நீங்க சொல்றதைச் செய்யறதைவிட எனக்கு ஒண்ணும் . . . இருக்க முடியாது . . ." என்று குரலில் வந்த நடுக்கத்தைக் காட்டிக் கொள்ளாமலிருப்பதற்காக, பேசாமல் நிறுத்திக் கொண்டான் அப்பு. பேச முடியவில்லை. நன்றி நெஞ்சைக் கட்டி அடைத்துக்கொண்டு நின்றது. தலையைக் குனிந்துகொண்டான்.

"முன்னாலேயே சொன்னேன். இப்ப மறுபடியும் சொல்றேன். வாத்தியாருக்குத் தள்ளலே. நீயே இருந்தாத் தேவலைன்னு தோணித்தப்பா எனக்கு. ஆனா ஊரிலே அத்தனை பெரியவா ஆதரவையெல்லாம்

விட்டுட்டு . . ."

"நீங்கதான் எனக்குப் பெரியவா. நான் இருந்துவிடறேன், அத்தே" என்று இடைமறித்தான் அப்பு. அவள் தயங்கித் தயங்கிக் கெஞ்சுவதைக் கண்டு அவனுக்கே சிறுமை தாங்கவில்லை. "நான் இங்கேதான் இருக்கப் போறேன். அவ்வளவுதானே அத்தை!"

"என்னடாது அப்பு!"

"ஆமா அத்தே."

சமையலறை நிலையின் இரு பக்கங்களிலும் வெள்ளைக் கைகளை வைத்து நின்று, அதைக் கேட்டுக்கொண்டிருந்த இந்து உதட்டைக் கடித்துக்கொண்டாள். மறுகணம் சுவருக்குப் பின் மறைந்துவிட்டது அந்த உருவம்.

பவானியம்மாள் ஒன்றும் சொல்லவில்லை. மௌனமாகத் தலையை ஆட்டினாள். சற்றுக் கழித்து "அப்பு, நீ சொல்றாப் போல இல்லேடா இந்த வார்த்தை. ஸ்வாமியே சொல்றாப்பல இருக்கு . . . எனக்கு வேறு ஒன்றும் சொல்லத் தெரியலெ . . . நான் சித்தெ இப்படிப் படுத்துக்கறேன். உட்கார முடியலெ ரொம்ப நாழி" என்று ஊஞ்சலில் ஒருக்களித்துக்கொண்டாள்.

## 4

பழைய நிசப்தம் வந்துவிட்டது. ஆற்றங்கரை வெளியில் மணிப்புறாக்கள் ட்ரூவ்ட்ரூவ் என்று கத்துவதும், சம்போத்து வெட்டுவதும் கேட்கின்றன. அப்பு அதில் மனதைக் கொடுத்து ஓய்ந்துபோனாற்போல் உட்கார்ந்திருந்தான். ஆற்று வெளியைப் பார்க்க நடக்கவேண்டும்போல் இருந்தது. அதேசமயம், இங்கேயே கூடத்தின் பாதி இருளில் முடங்கிக் கிடக்க வேண்டும் போலவும் இருந்தது.

அயர்வு மிகுதியாலோ என்னவோ, பவானியம்மாள் ஆழ்ந்து உறங்கிக்கொண்டிருந்தாள். கறிகாய் - பூக்கொல்லை எப்படியிருக்கிறது என்று பார்ப்பதற்காக எழுந்து, அப்பு சந்தடியின்றி மெதுவாக நடந்தான். கொல்லைத் தாழ்வாரத்தில் அடுப்பில் பெரிய அண்டாவைப் போட்டு நெல் புழுக்கிக் கொண்டிருந்த இந்து - அவன் வருவதைப் பார்த்து வேர்த்துக் கசிந்த முகத்தைத் துடைத்துக்கொண்டாள்.

திடீரென்று அம்மாவின் ஞாபகம் வந்தது அவனுக்கு. சேஷராமனின் பெண்ணின் ஞாபகமும் வந்தது. அம்மாவைக் கண்டால் பயமாயிருக்கிறது. சேஷராமனின் பெண்ணைக் கண்டு ஐயோ எப்படி இத்தனை அழகாக இருக்க முடியும் என வியப்பாக இருந்தது. இந்துவைக் காணும் போதெல்லாம் ஒரு இரக்கம். அதோடு, சண்டை போட வேண்டும், அழவைத்துப் பார்க்க வேண்டும் என்ற ஒரு வெறி. அவளை இரண்டு கைகளாலும் கட்டி, நொறுக்கி, மூச்சை மெலியச் செய்து, கீழே எறிந்துவிட வேண்டும்போல ஒரு ஆத்திரம். அவ்வளவு பாத்தியமும் நெருக்கமும்தான் அவளைப் பார்க்கும்போதே நெஞ்சு கொள்ளாத - உடம்பே கொள்ளாத - ஒரு பரபரப்பையும், மூச்சு முட்டும் ஆனந்தத்தையும் ஏற்றுகின்றன போலிருக்கிறது.

"என் மேலே கோபமாக்கும்?" என்று பக்கத்தில் இருந்த உரல்மீது உட்கார்ந்து, முன் கையைத் துடைத்துக்கொண்டாள் இந்து.

"கோபம்தான்."

"என்ன கோபம்?"

"உனக்கு எப்படித் தெரியும்?"

"எது?"

அப்பு அவளைச் சற்று அசையாமல் பார்த்தான். இந்து தலையைக் குனிந்து கொண்டாள்.

"எதுன்னு நிஜமாத் தெரியாமலா கேட்கிறே?" இந்து பேசவில்லை.

"என் வாயிலிருந்து பிடுங்கணும்! நான் என் வாயாலே சொல்லி, அதைப் பார்த்து ஒரு அசுர சந்தோஷப்படணும் உனக்கு. இல்லையா?"

"என்ன அப்பு இது!"

"ஆமாம், உனக்கு அந்தச் சந்தோஷப்படாமல் இருக்க முடியாது. இல்லாவிட்டால் எப்படி நீயா இருக்க முடியும், நீ?"

"அப்பு! ஏன் என்னைக் கண்டா இப்படிப் பூனையா ஆயிடறே நீ? திடீர்னு ராத்திரி தூங்க விடாம பெரிசா அழுமே, அந்த மாதிரி?" என்று தலையைக் கவிழ்த்துக் கொண்டாள் இந்து.

"நீ அன்னிக்கு என்னத்தையோ இடியைத் தலையிலே தள்றாப்போலச் சொன்னே. உன் கழுத்தை நெரிக்கணும்போல ஆவேசம் வந்துது. ஊருக்குப் போய்ப் பார்த்தா . . . அது, அப்படியே . . . உண்மையா இருக்கு. அப்ப இன்னும் கோபம் வந்துது. உனக்கு எப்படித் தெரியும்?"

"எதைச் சொல்றே நீ?"

"மறுபடியும் இப்படியே பேசறே பார்த்தியா? உனக்கு இன்னும் கொதறணும்னு ஆசையாயிருக்கு . . . சரி. . . சந்தோஷப்படு . . . நான் அம்மாவைப் பத்தித்தான் சொன்னேன்" என்று ஆணவம் எல்லாம் கரைந்து சரிந்தாற்போலக் குறுகி நின்றான் அவன்.

இந்து சிறிது நேரம் ஒன்றும் சொல்லவில்லை.

"நான் உன்னை ரொம்ப வதைச்சுட்டேன். ஆங்காரத்திலே என்னமோ சொல்லிட்டேன்."

"எப்படிச் சொன்னாலும் அது உண்மைதான். எப்படித் தெரிஞ்சுதுன்னுதான் கேட்கிறேன்."

"நீ இவ்வளவு சாதுவா இருக்கியே அப்பு. இது என்ன கேள்வி! இதெல்லாம் வீட்டுக்கு முன்னாலெ ஊருக்கெல்லாம் தெரிஞ்சுபோற சேதிதானே. என்னத்துக்காக இப்படிக் கிண்டிக் கிண்டிக் கேட்டு, நீயே கொதற அடிச்சுக்கறே?"

"அப்படின்னா உனக்கு ரொம்ப நாளாத் தெரியுமா?"

". . ."

"அத்தைக்குத் தெரியுமா?"

". . ."

"இந்த ஊரிலே இன்னும் யாருக்காவது தெரியுமா?"

". . ."

"இந்து, சொல்லேன்."

"நீ உள்ளே போ அப்பு. கொஞ்ச நேரம் படுத்துத் தூங்கு. நல்ல வெயில்லெ பஸ்ஸிலே வந்திருக்கே."

"நான் கேட்டேன் பாரு ஒரு மட்டி. சேலத்திலே அக்காவுக்குத் தெரிஞ்சிருக்கு. அவ ஆமடையானுக்குத் தெரிஞ்சிருக்கு. அவ மாமியாருக்குத் தெரிஞ்சிருக்கு. அதுக்காகப் பிறந்த வீட்டுக்குக்கூட அவளை ஒரு நாளைக்கு அனுப்ப மாட்டேங்கறா - சாந்திக் கலியாணம் ஆகிக்கொண்டு விட்டதிலேர்ந்து. எங்க மன்னிக்குத் தெரிஞ்சிருக்கு. இங்கே உனக்குத் தெரிஞ்சிருக்கு. அத்தைக்கும் தெரியாமலா இருக்கும்? ஊரிலேயும் தெரியாமலா இருக்கும்?"

அப்பு அப்படியே தாழ்வாரத்தின் ஓரமாக, முற்றத்தில் காலை வைத்து உட்கார்ந்துவிட்டான்.

இந்து சட்டென்று உள்ளே போனாள். கன்னத்தை இரு கைகளிலும் தாங்கி உட்கார்ந்திருந்தான் அவன். ஒரு நிமிடம் கழித்து இடைக் கதவைச் சாத்துகிறாற் போலிருந்தது. இந்து மெதுவாக வந்தாள். அவன் முன்பு வந்து, கன்னத்திலிருந்த கைகளை எடுத்தாள். முன்னுக்கு இழுத்து உயர்த்தினாள். அவனும் எழுந்து, பொம்மை மாதிரி நடந்தான். முற்றத்தின் இரு பக்கமும் தாழ்வாரங்கள். இந்தண்டைத் தாழ்வாரத்தின் மீது பின் பக்கமாகவே நகர்ந்து ஏறினாள் இந்து - அவன் கையைப் பிடித்துக்கொண்டே. சுவரோரமாக வந்து நின்று, அவன் தோளிரண்டையும் பின்பக்கமாகப் பற்றினாள்.

"வருத்தப்படாதே அப்பு. யார் எப்படியிருந்தா என்ன? நீ ஸ்படிகம். ஒரு மாசு, ஒரு மரு ஏறாது அதிலே. ஏன் இப்படிக் கிடந்து உருகறே? . . . இத பாரு . . . எதாயிருந்தாலும் எங்கிட்ட சொல்லு. உன்னாலெ இதையெல்லாம் தாங்க முடியாதடா அப்பு. எங்கிட்ட சொல்றியா எதாயிருந்தாலும்? சொல்றேன்னு சொல்லேன்."

அவன் தோள் உலுங்கிற்று. வாயைத் திறக்காமல் தலையை ஆட்டினான் அவன்.

"நிச்சயமாகச் சொல்லுவியா?"

மீண்டும் அவன் தலை சரி என்று ஆடிற்று.

"அப்பா!" என்று அவன் மார்பில் கன்னத்தைப் புதைத்தாள் அவள்.

"அப்பா! அப்பா! . . . என்னைக்கூட மதிச்சு சரின்னு சொல்லிவிட்டியே. அப்பா! அப்பா! என்னாலெ தாங்க முடியலியே. என்னைப் பாரு. எத்தனை கல்லா வந்து விழுந்தாலும் என் தலைக்கு மாத்திவிடு அப்பு" என்று அவன் உதட்டோடு உதடாகப் பதிந்துகொண்டாள் அவள்.

அவன் பேசவில்லை. கண்ணை மூடிக்கொண்டான். அவனுடைய கைகளைத் தன் முதுகில்விட்டு இறுக்கிக்கொண்ட அந்த உடலை மெதுவாக, பதியப்பதிய அழுத்திக் கொண்டான். மேனி வெதவெதக்க உணர்விழந்து நின்றான்.

ஒரு நிமிஷம் கழித்து இந்து மெதுவாக நகர்ந்து, விரலால் இடைக் கதவைத் தள்ளித் திறந்தாள். நின்று கவனித்தாள். மீண்டும் அப்புவை வந்து அணைத்து, முகத்தோடு முகமாக நின்றாள். பிறகு விடுபட்டு நகர்ந்து, எதிர்த் தாழ்வாரத்தில் தணிந்திருந்த நெல் புழுக்கும் அடுப்பை விசிறியால் விசிறத் தொடங்கினாள். அப்பு நடந்து கடைக் கதவைத் திறந்து, கொல்லையில் இறங்கினான்.

நந்தியாவட்டைச் செடிகள் அடர்ந்து கதகதவென்று பூத்துக் கிடந்தன. முக்கால்வாசி மலர்கள் பறிக்கப்படவில்லை. ஒரு காற்று வீசவே அப்படியே எல்லாம் அசைந்து ஆடிக் கொடுத்தன. அடுக்குக் காசித் தும்பைகளைக்கூட யாரும் பறிக்கவில்லை. அப்பு நந்தியாவட்டைச் செடிகளின் பரப்புக்குள் நுழைந்து உராய்ந்து உடலில் தேய்த்துக் கொண்டான். ஒரு பூவைப் பறிக்காமல் கண்ணில் வைத்துப் பொத்திக்கொண்டான். பசு அவனைப் பார்த்து இரண்டு மூன்று முறை குரல் கொடுத்தது. சிவப்பாகப் பிறந்த கன்று சற்று வெள்ளை பூத்து விட்டிருந்தது. அவன் அருகில் வந்ததும் ஒரு தடவை துள்ளிவிட்டு நின்றது. வாழைகள் அவன் அன்று பார்த்ததற்குப் பிறகு நாலைந்து இலைகள் விட்டு, புதிய குருத்துகள் சுருள் பிரியத் தொடங்கியிருந்தன. தோட்டம் முன்னைப்போல் அவ்வளவு சுத்தமாக இல்லை. கீழே பெருக்கியிருந்ததே தவிர, குப்பைமேனி, குப்பைக் கீரை, மூக்கரட்டை, கீழ்க்காய்நெல்லி, எல்லாம் ஆங்காங்கு முளைத்துக் கிடந்தன. களைகளைப் பிடுங்கி எறியவேண்டும் போலிருந்தது. ஆனால் மனம் இல்லாமல் பார்த்துக்கொண்டு நின்றான். அவனுள்ளே பொங்கி வழிந்துகொண்டிருந்தது. எல்லாவற்றையும் மார்போடு தழுவிக்கொள்ள வேண்டும்போலிருந்தது. செடி கொடிகளின் இலை தளிர்களையெல்லாம் முகத்தில் புதைத்து உராய வேண்டும் போலிருந்தது. சற்று வாடி, மஞ்சள் பூத்த இலைகளோடு கரளை தட்டிக் கிடந்த குப்பைமேனிகளைத் தடவிக் கொடுத்தால் நல்லது என்று தோன்றிற்று. ஒன்றும் செய்யத் தோன்றாமல்

நிரம்பிப்போய், தோட்டத்தைப் பார்த்துக்கொண்டே நின்றான்.

சற்றுக் கழித்துக் காவேரிப்பக்கம் போனான். படித்துறையில் உட்கார்ந்திருந்தான். மாலை மயங்கியதும் திரும்பி வந்து, சாப்பிட்டான். அத்தையுடன் ஊர்க்கதையெல்லாம் பேசினான். அம்மா, அப்பா, தம்பிகளைப்பற்றிப் பேசினான். சேலம் வந்ததைப்பற்றிப் பேசினான். இத்தனையும் - அந்த உடலையும் உள்ளத்தையும் இண்டு இடுக்கெல்லாம் ஊடுருவி நிரம்பியிருந்த நிறைவை - ததும்பின உவகையை - கரைத்து விடவில்லை. வெகுநேரம் வரையில் தூக்கம் வராமல் தடுத்து நின்றது அந்த நிறைவின் ஊட்டம். சோர்வின்றி மிதந்தது போலிருந்ததால் படுக்கைகூடக் கொள்ளவில்லை. எங்காவது நடந்துகொண்டேயிருக்க வேண்டும் போலிருந்தது. இரவு வேளையாயிற்றே, படுத்திருக்க வேண்டுமே என்று மரபுக்குப் பணிந்து கொடுப்பது போல்தான் படுத்துக் கிடந்தான். நடுநிசி தாண்டி வெகுநேரம் சென்றுதான் உறக்கம் இமையைக் கூட்டிற்று. காலையில் விழித்தபொழுது, தூங்கியதும் அதே நிலையில் தூங்கினதுபோல் தோன்றிற்று. அன்று பகல், மாலை வரையில் அது அவனை விட்டு அகலவில்லை.

## 5

பவானியம்மாளுக்கு உடல் சற்றுத் தேறத் தொடங்கிற்று. ரணமாக வலித்துக்கொண்டிருந்த காலும் கையும் நோவு நீங்கி, நீட்ட மடக்கவும், பின்பு வீட்டுக்குள்ளே கொல்லை வரையிலும் நடமாடவும் தெம்பு பெற்றன. ஆனால் ஒருமுறை கொல்லைக்கும் வாசலுக்கும் போய்விட்டால், ஊஞ்சலில் வந்து களைத்துச் சாய்ந்துவிடுவாள். வேண்டும்பொழுது அப்பு அவளைப் பிடித்து அழைத்துச் செல்லுவான். படுக்கையைத் தட்டிப் போடுவான். உட்கார்ந்து பேசிக்கொண்டேயிருப்பான். வேதத் துதிகளை எடுத்து அர்த்தம் சொல்லுவான். கேட்க வேண்டும் என்று விரும்பினால், ஒரு நாழிகை கனம் சொல்லுவான்.

முதல் நாள் வந்த நிறைவு அப்படியே இல்லாவிட்டாலும் நீடித்துக்கொண்டேதான் இருந்தது. காவிரியின் முன் உட்கார்ந்து அதையே நினைத்துக்கொண்டு உட்கார்ந்திருப்பான். காலையில் குளிக்கப் போனால், நீருக்குள் மார்பளவுக்கு நின்று மெய்மறந்து அந்தக் கணத்தை நினைத்துக்கொண்டிருப்பான். அந்த முதல் மாலை மட்டுமில்லை. பவானியம்மாள் சோர்ந்து உறங்கும்பொழுது, அந்த இரண்டு

பையன்களும் சாலைக்கடைக்குப் போயிருக்கும்பொழுது, கொல்லைத் தாழ்வாரம் அவனையும் இந்துவையும் பலமுறை சேர்த்து வைத்துப் பார்த்துக்கொண்டுதானிருந்தது. கிணற்றங்கரை முற்றத்தில் உட்கார்ந்திருப்பான் அவன். திடீரென்று வருவாள் அவள். அவனை நிற்கவைத்து இழுத்துக் கொண்டே நகருவாள் . . . கண்ணைமூடி, ஒரு உடலாக நின்ற அந்தக் கணங்களை நினைத்துக்கொண்டே நீரில் கிடந்தது அவன் உடல். குருக்களைக் கண்டால் அவரை உட்காரவைத்துப் பாடச் சொல்ல வேண்டும்போல் தோன்றும். அவரும் ராஜரத்னத்தின் தோடியை அப்படியே ஒரு அச்செடுத்துப் பாடிக் காட்டுவார். கிட்டப்பா பாடின பாட்டு இரண்டைப் பாடுவார். பிறகு, படுகையில் குடியானவத் தெருப் பையன்கள் சலாங்குடு விளையாட வந்தால் ஒரு ஆட்டம் தானும் சேர்ந்துகொள்வான் அப்பு. சில சமயம் சாலை மளிகைக் கடையின் சார்ப்பில் உட்கார்ந்து, லாரிகளையும் பஸ்களையும் கோட்டைக்குப் போய் வரும் ரயில்வண்டிகளையும் பார்த்தவாறு மணிக்கணக்கில் உட்கார்ந்திருப்பான்.

அன்று மளிகைக்கடை வாசலில் உட்கார்ந்திருக்கும்போது சட்டென்று பஸ் நின்றது. பஸ்ஸிலிருந்து யாரோ இறங்குகிறார்கள். தாந்தோணிக் கவுண்டன்தான். அவன் வலது கண்ணில் ஒரு கறுப்புப் பட்டி தொங்கிக்கொண்டிருந்தது. அவனை மெதுவாகப் பிடித்து அழைத்துக்கொண்டே மகன் கடையோரமாக வந்து நின்றான். தாந்தோணி இருபது நாளாக வரவில்லை வீட்டுக்கு. கண்ணில் சதை வளர்ந்து அறுவைக்காகக் கோட்டைக்குப் போயிருந்தானாம்.

"என்ன கவுண்டரே! இப்பதான் வறியா?" என்றான் அப்பு.

"யாருடாது, சின்னையா! நம்ம பட்டணத்துசாமி குரலாட்டம் இருக்கே?" என்று கடைப் பக்கம் பார்த்தான் தாந்தோணி.

"ஆமாப்பா . . . எப்ப வந்தீங்க?" என்றான் மகன்.

"நான் வந்து பத்து நாளாச்சு."

"பத்து நாளாச்சா? ஊரிலே எல்லாரும் சொகம் தானே?"

"ம் . . . ஆபரேஷன் ஆயிடுத்தா?"

"ஆச்சு சாமி. சாளேசரம் மாட்டிக்கணம். இன்னொரு நடை

போவணும். எனக்கு இதெல்லாம் வராதுன்னு நெனச்சேன். பாருங்களேன், எங்கப்பன், பாட்டன் எல்லாம் இப்படிக் கண்ணை அவிச்சுக்கிட்டு கயிட்டப் பட்டதில்லே சாமி. எனக்குப் பாருங்களேன்."

"கவலைப்படாதே, அவியாது! கண்ணாடி போட்டா சரியாப் போயிடறது."

"சரியாகணம். அம்மா, சின்னம்மா எல்லாரும் சொகங்களா? பெரியம்மாவுக்கு உடம்பு சொகமில்லேன்னான் பையன். இப்ப எப்படி இருக்கு?"

"தேவலாம். நடமாடறாங்க கொஞ்சம்."

"அப்படிச் சொல்லுங்க, சாமி . . . நீங்க ஊருக்குப் போனதிலேருந்து உங்களைப்பத்திப் பேசற மணியம்தான் பெரியம்மாளுக்கு . . . ரொம்ப நிக்க முடியலெ சாமி, எனக்கு இன்னம் சுணக்கம் உண்டா?"

"இருப்பேன்."

"அப்ப காலமே வாரேன் சாமி. அம்மாகிட்ட சொல்லுங்க. என்னடா, வந்தவனுக்கு நேர வந்து பார்க்கறதைக் காட்டியும் என்ன மணியம்னு நெனச்சிக்கப் போறாங்க!- அப்படி நினைக்கிறவங்க இல்லே . . ."

"நீ போய் உடம்பைப் பாத்துக்கோ, தாந்தோணி. காலமே வந்தாப் போறது."

தாந்தோணி மெதுவாக, பிள்ளையைப் பிடித்துக் கொண்டு நடந்தான். அப்போதுதான் அப்புவுக்கு வயிற்றில் கனத்தது. வந்த நாளிலிருந்து எண்ணிப் பார்த்தான். பன்னிரண்டு நாட்கள் ஆகிவிட்டன. அதுவும், தாந்தோணியைப் பார்த்ததும், அவன் அன்று வண்டியில் ஸ்டேஷனுக்குக் கொண்டுவிட்ட நினைவு வந்தது. 'என்ன கவுண்டரே உளர்றே?' என்று வெடுக்கென்று அவனை அன்று கடிந்துகொண்டு, வயதில் மூத்தவனைச் சட்டென்று அப்படி அதட்டியதை நினைத்துச் சிறிது நேரம் புழுங்கினது, வண்டியில் ஏறுவதற்குமுன் அவனோடு சற்று அதிகமாகவே நின்று பேசி, தன் தவறுக்குச் சரிக்கட்ட முயன்றது - எல்லாம் இப்பொழுது நினைவிற்கு வந்தன. . . எதற்காக நாம் இங்கே சாலைக்கடை வாசலில் இப்படிப் பொழுதைப் போக்குகிறோம்? ஏன் வந்திருக்கிறோம் இங்கே? இங்கே ஏன் இப்படித் தங்கிக்கொண்டேயிருக்கிறோம்?

தாந்தோணி எதையோ கண்டுபிடித்துச் சிரிப்பதுபோல ஒரு பிரமை அவன் வயிற்றுக் கனத்தை இன்னும் சுமந்து உட்காரச் செய்தது. ஏன் அந்த மாதிரி சொன்னான் அன்று? இவனுக்கு ஏதாவது சந்தேகமா?. . . அன்று சந்தேகப்பட்டிருந்தால் அது பொய். இன்று?. . .

உட்கார முடியவில்லை; எழுந்தான். பிற்பகல் வெயில் கண்ணை நெருக்கிற்று. வீட்டை நோக்கி நடந்தான். வெயிலிலிருந்து வீட்டுக்குள் நுழையும்போது சற்றுத் தடவி நடக்க வேண்டியிருந்தது.

அவன் காலோசை கேட்டவுடனேயே, "அப்புவா! அப்பு, உனக்கு லெட்டர் வந்திருக்கே!" என்று ஊஞ்சலில் படுத்திருந்த பவானியம்மாள் மெதுவாக எழுந்து, தலைக்கு உயரக் கட்டையின் அடியில் இருந்த கார்டை எடுத்துக் கொடுத்தாள். "தபால்காரன் கொண்டு கொடுத்தான். ஒரு நாழியாச்சு . . . மெட்ராஸ்லேர்ந்து வந்திருக்காப் போலிருக்கே, யார் எழுதியிருக்கா?"

வெளிச்சத்தில் பிடித்துப் பார்த்து, "அப்பா" என்று, மௌனமாகப் படிக்கத் தொடங்கினான். செய்தி ஒன்றும் குறிப்பிடும்படியாக இல்லை. அப்பு ஏன் போனது முதல் கடிதமே எழுதவில்லை என்று கேட்டுவிட்டு, பவானியம்மாளின் உடல் நலத்தைப்பற்றி விசாரித்திருந்தது. சேலத்திலிருந்து அவனைப் பற்றி விசாலத்தின் கடிதம் மூலம் தெரிந்துகொண்டதாகவும் குறிப்பிட்டிருந்தது. 'நீ எப்பொழுது திரும்பி வருகிறாய் என்று அம்மா கேட்டு எழுதச் சொன்னாள்.' பிறகு வழக்கம்போல, 'அம்மா பூரணமாக ஆசீர்வாதம் செய்கிறாள். காவேரிக்கு, நீ கடிதம் போடவில்லையே என்று ரொம்பவும் கோபம்' என்று முடித்திருந்தார் தண்டபாணி.

பவானியம்மாளிடம் எல்லாவற்றையும் சொன்னான் அப்பு.

"எப்ப திரும்பி வரப்போறேன்னு கேட்டிருக்காராக்கும்!" என்று அவனைப் பார்க்காமலேயே திருப்பிச் சொன்னாள் பவானியம்மாள்.

". . ."

"என்ன எழுதறதாக உத்தேசம்?"

". . ."

சிறிது நேரம் மௌனமாகக் கழிந்தது. "உனக்கே ஒண்ணும் புரியலெ

போலிருக்கு" என்று மீண்டும் கிளறினாள் பவானி.

அப்பு பேசாமல் நின்றான். கொல்லைத் தாழ்வாரத்தை நினைத்து, திக்திக்கென்றது மார்புக்குள். நிற்க முடியாமல் கால் ஆடிற்று. கடுதாசைப் பிடித்திருந்த கை இலைபோல நடுங்கிற்று. சற்றுத் தூணோரமாக நின்று கையால் பிடித்துச் சமாளித்துக்கொண்டான்.

"என்னடா அப்பு!"

"ம் . .?"

"திரும்பிப் போகணும்னுதான் தோண்றதோ?"

"நான் வேற என்னமோ நினச்சுண்டிருந்தேன் அத்தே" என்று, கடுதாசியைப் பிடித்த கை தன்னையும் மீறி ஆடுவதையுணர்ந்து, தூணை உள்ளங்கையை வைத்து அழுத்திப் பற்றிக் கொண்டான்.

"நீ சொல்லிக் கொடுக்கறவாளுக்கெல்லாம் என்ன பதில் சொல்றதுன்னு நினைச்சிண்டிருந்தயோ?"

"இல்லை, அத்தே."

"என்னன்னுதான் மனசைத் திறந்து சொல்லேன்" என்று மெதுவாக எழுந்தாள் பவானியம்மாள். இடைக்கட்டு நிலை வழியாகப் பாடசாலைக்குள் போனாள். அந்த இரண்டு பையன்களும் அந்த வீட்டின் கிணற்றங்கரை முற்றத்தின் தாழ்வாரத்தில் உறங்கிக்கொண்டிருந்தனர். திரும்பி வந்தாள். மெதுவாகக் கொல்லை வரையில் நடந்தாள். இந்து கொல்லைத் தாழ்வாரத்தில் சப்பணங்கட்டி அமர்ந்து, காலில் ஒரு பலகையைச் சாய்த்துப் பயறு உருட்டிக் கல் துழாவிக் கொண்டிருந்தது தெரிந்தது. திரும்பி வந்து, மீண்டும் ஊஞ்சலில் உட்காராமல் வாசலும் கொல்லையும் தெரியும்படியாக, சுவரோரமாக இருந்த பெஞ்சில் உட்கார்ந்துகொண்டாள்.

"கொல்லைத் தாவாரமே சொர்க்கம்னு கிடக்கா இந்து" என்று அங்கே திரும்பிப் பார்த்தாள்.

"ஏன் அத்தே! ஏதாவது வேணுமா?"

"கொஞ்சம் வெந்நீர் வேணும். நீயே சமையலுள்ளே போய்க்

கெட்டில்லேர்ந்து ஒரு டம்ளர் கொண்டு கொடு. அவளைக் கூப்பிட வாண்டாம்."

அப்பு உள்ளே போய் எடுத்து வந்தான். ஆனால், கெட்டிலிலிருந்து டம்ளரில் ஊற்றுவதற்குள் கீழேல்லாம் வெந்நீர் இறைந்தது. கை நடுக்கத்தை நிதானித்துக் கொள்ள முடியவில்லை. சிரமப்பட்டு டம்ளரை எடுத்து வந்து பெஞ்சுமீது வைத்துவிட்டு நின்றான்.

மறுபடியும் ஒரு மௌனம். விண்ணென்று இழுத்துக் கட்டினாற் போலிருந்தது அது. சுண்டினால், அறுந்து அவலமாக ஒலிக்கிற இழுப்பு! . . . காற்றுக்கூட அதற்கு அஞ்சி மூச்சை அடக்கிக் கொண்டிருந்தாற் போலிருந்தது.

"பட்டணம் மாதிரி இங்கே பணம் வராது. அது தெரியும் உனக்கு . . ."

"நான் சம்பாதிக்கிறதைப்பத்திக் கவலைப்படலெ அத்தே."

"பின்னே?"

"எனக்கு ஒண்ணுமே பிடிக்கலெ."

"அப்படின்னா?"

"எனக்குப் பட்டணத்திலெ இருக்கவும் பிடிக்கலெ."

"அப்படின்னா, இங்கே இருந்துவிடேன்."

"ம்?"

"எனக்குப் பிற்காலத்திலெ என்ன ஆகும்னு பார்க்கிறே?"

". . ."

"கோட்டையிலேர்ந்து விச்வத்தை வரச் சொல்லி, எழுதியிருக்கேன். அதுக்குத்தான்" என்றாள் பவானி.

"எந்த விச்வம்?"

"வக்கீல் குமாஸ்தா இருக்கானே விச்வம் - அவனைத்தான் . . .

சாசனத்தை மாத்தி எழுதணும்"

"எந்த சாசனத்தை அத்தே?"

"பாடசாலைக்கு எழுதி வச்சதைத்தான். நான் கட்டையைப் போட்ட அப்புறம் எப்படி ஆகும், என்ன ஆகும்னு, என்னத்தைச் சொல்லமுடியும்? நீதான் இருந்து நடத்தப் போறே. இந்து வீட்டைப் பார்த்துப்பள். ஊரிலே எல்லாருக்கும் கண்ணை உறுத்தப் போறது. நீ இப்படிப் பாடசாலைக் கட்டிடத்திலே வாத்தியாரா இருக்கறதும், அவ இப்படி இந்த வீட்டை ஆண்டுண்டு இருக்கறதும் - மனுஷாளைச் சும்மாயிருக்க விடா துடா அப்பு. வேதம் சொல்லித் தரானாம் வேதம்னு உன்னைப் பார்த்து உலகத்துக்கு நல்ல வழியைக் காட்ட அலையறவன் ரண்டு பேர் கத்துவன். பாடசாலை நடத்தறாளாம் பாடசாலைன்னு இந்துவைப் பார்த்து இன்னும் நாலு பேர் சேர்ந்துப்பன். அப்புறம் இங்கே யாரு வந்து படிக்கப் போறா?. . . நீ இல்லாம வேறு ஒருத்தரைப் போட்டு நடத்தலாம். அதுக்கு என் மனசு இடங்கொடுக்காது போலிருக்கு. இந்து சாப்பிடாம, ஜலம் குடிக்காம, பட்டினி கிடந்து, ஆறு மாசத்திலே சாகணும்னாத்தான் அப்படிப் பண்ணணும் . . . மோகம் முப்பது நாள். வேதத்துமேலே மோகம் வந்துதான் இப்படிப் பண்ணி வச்சேன். முப்பது வருஷம் நடந்துடுத்து. போன மாசம் எண்ணிக்கூடப் பார்த்தேன். நூத்திநாலு பேர் இங்கே தங்கி, அத்யயனம் பண்ணிவிட்டுப் போயிருக்கா. ரண்டு பையங்கதான் இல்லெ இப்ப. ஆயுசு இல்லெ, போயிடுத்து. மீதி நூத்திரண்டு பேரும் இப்ப வேதத்தைச் சொல்லிப் பிழைச்சிண்டிருக்கா. கேசவ பட்டன் அரிசிக்கரையிலே பாடசாலையே நடத்தறானாம். நரசு பம்பாயிலேபோய் வேதம் சொல்லிக் கொடுக்கறானாம். நூறு பேருக்குச் சொல்லிக் கொடுத்தனுப்பிச்சாச்சு. நூறு அசுவமேதம் பண்ணினாப்போல இருக்கு எனக்கு . . . போருமே. இனிமே என்ன? நூறு, நூத்தம்பது, இருநூறுன்னு தலையை எண்ணிண்டே போகலாம். இதிலெ என்ன பெருமை வந்துடப் போறது . . ."

பவானி மெதுவாகச் சொல்லிக் கொண்டிருந்தபோது இந்து வருவது தெரிந்தது. சமையலறைக்குள் நுழைந்தாள் இந்து. பவானியம்மாள் அதைப் பார்த்து, சற்று நிறுத்திவிட்டு, மீண்டும் சொன்னாள்.

"வேதம் நாலு பேருக்குச் சொல்லிக் கொடுக்கணும்னு ஆசை. சொல்லியாச்சு. தலையை எண்ணிண்டிருப்பானேன்? அதுவும் ஒரு அகம்பாவம்தானே? நாம இல்லாட்டா வேதம் பிழைக்காதா? அது அனாதி. காத்திலெ கிடந்தது. யாரோ பார்த்து, வாயாலெ சொல்ல ஆரமிச்சா.

மறுபடியும் வாயை விட்டு, காத்துக்கே போகட்டுமே. அது என்னிக்கும் இருக்கத்தான் போறது. பவானியையும் பாடசாலையையுமா நம்பிண்டிருக்கு! . . . வேதம் சொல்லிக் கொடுக்கிறவன் சுகப் பிரும்மம் மாதிரி இருக்கணும். பீஷ்மன் மாதிரி இருக்கணும்னு, அவனைப் போட்டு நெருக்கறா எல்லாரும். இல்லாட்டா, பிடிக்கிறதோ பிடிக்கலையோ யாரோ ஒருத்தியைப் பெண்டாட்டின்னு பண்ணிண்டு இருக்கணும் . . . அப்படி நான் வந்து இருந்தேனே, எத்தனை நாள் இருந்தேன். எத்தனை நாள் வாழ்ந்தேன்! . . ."

வெந்நீரை எடுத்து ஒரு வாய் குடித்தாள் பவானி.

"அதுக்குத்தான் சாசனத்தை மாத்தி எழுதிவிடலாம்னு பார்க்கிறேன். முடிஞ்சா வேதத்தைச் சொல்லிக் கொடு. இல்லாட்டா பத்துப் பிள்ளைகளுக்குச் சாப்பாடு போட்டு வச்சிண்டு, தமிழ்ப் பள்ளிக்கூடத்துக்கோ, இங்கிலீஷ் பள்ளிக்கூடத்துக்கோ - எதுக்கோ அனுப்பிச்சிண்டிரு. அதுகளோட இஷ்டம் அது. வேதம் படிச்சா என்ன? வாதம் படிச்சா என்ன? இல்லாததுகள் வயித்திலெ ரண்டு சாதம் விழணும். பசிதான் ஸ்வாமி. அதுக்கு நைவேத்யம் பண்ணினாப் போதும். . . அதுகூட அகம்பாவம்தான். நாம எத்தனை பேருக்கு நைவேத்யம் பண்ண முடியும்?. . . முடியாது. ஆனா, ஸ்வாமி ஞாபகம் வரணுமோல்லியோ, பசி ரூபத்திலேதானே இருக்கான் அவன் . . . இதை நீ ஞாபகம் வச்சிண்டாப் போரும் . . . எனக்காக."

பவானி மெள்ள மெள்ளத்தான் பேசிக்கொண்டிருந்தாள். அப்புவுக்கு ஒவ்வொரு வார்த்தையும் சந்தேகமில்லாமல் காதில் விழுந்துகொண்டிருந்தது. இந்து கூடத்திற்கு வந்து, ஊஞ்சல் சங்கிலியைப் பற்றியவாறு - அதைப் பார்த்துக்கொண்டே நின்றாள்.

அப்புவின் தலை நிமிரவில்லை. இற்றுவிட்டாற்போல் கால் துவண்டது. வேதனை தாளாமல் நின்று கொண்டேயிருந்தான்.

பவானியம்மாளின் பேச்சு நின்று வெகு நேரமாகிவிட்டது. இப்போது விண்ணென்று தெறித்து நின்ற மௌனமாக இல்லை. தந்தியெல்லாம் தளர்ந்து, படிந்த நிசப்தமாக ஓய்ந்திருந்தது.

பவானி வெந்நீரை மீண்டும் ஒரு வாய் குடித்துவிட்டு மெதுவாக நடந்து ஊஞ்சலில் வந்து படுத்தாள். "பயறு முழுக்கத்திலாத்தியாச்சா?"

"இல்லேத்தே."

"பாதிலே விட்டுட்டு வருவானேன்?"

"தாகமாயிருந்துது, வந்தேன், இதோ போறேன்" என்று நகர்ந்தாள் இந்து. அப்புவுக்கு இப்பொழுதுதான் நெஞ்சு விண்டு வெடித்தது.

"ஹ்!" என்று நீளமாகக் கேவினான்.

"என்னடா அப்பு?"

அப்பு குழந்தை மாதிரி அழுதுகொண்டிருந்தான். வாயை மூடி அடக்கச் சிரமப்பட்டுக் கொண்டிருந்தான்.

"நீ ஒண்ணும் செய்யலேடா அப்பு. என்னாலெ இந்து கஷ்டப்படறதைச் சகிச்சிண்டிருக்க முடியாது. அதனாலெதான் சொன்னேன். நீ என்னதுக்கு வேதனைப்படறே. பேசாமல் இரு."

பாடசாலைக் கிணற்றங்கரைக்கட்டில் தூங்கிக்கொண்டிருந்த பையன்கள் எழுந்துவிட்டார்கள் போலிருக்கிறது. கிணற்றிலிருந்து நீர் மொள்ளும் ஓசை கேட்டது.

"நீ போடா அப்பு. பசங்க ரண்டும் எழுந்துடுத்து. அதுகளுக்கு மோரும் சாதத்தைப் பிசைஞ்சு போடச் சொல்லு, இந்துகிட்ட. அப்புறம், மிஷினுக்குப் போய் அரப்போ சீயக்காயோ அரைக்கணும்னா இந்து. ரண்டும் போய்விட்டு வரட்டும். இந்துகிட்டச் சொல்லு" என்றாள் பவானி.

முகத்தைத் துடைத்துக்கொண்டே கொல்லைத் தாழ் வாரத்தைப் பார்க்க நடந்தான் அப்பு.

## 6

பவானியம்மாளைப் பார்க்கவும், அவள் கண்ணில் படவும் கூச்சமாயிருந்தது. பிற்பகல் வெயிலில், கொதிப்பு அடங்கி வெறும் சூடாக மாறும் வேளையிலேயே வீட்டைவிட்டு வெளியே கிளம்பிவிட்டான் அப்பு. வெட்கமோ, குறுகுறுப்போ, கோபமோ, வேதனையோ - எதுவாயிருந்தாலும் யாரிடம் சொல்லிக் கரைத்துக் கொள்வது? இருக்கவே இருக்கிறது காவேரி என்று ஆற்றைப் பார்க்க நடந்தான். தண்டவாளத்தைத்

தாண்டி, சவுக்குத் தோப்புப் பாதையைக் கடந்து, சிவன் கோயில் முன் மண்டபத்தில் நின்றான். படித்துறையில் வெயில் இன்னும் இருந்தது. அதன் ஒரு பக்கத்தில் படிந்த ஆற்றோர மரநிழல் இன்னும் சிறிது நேரத்தில் துறை முழுவதும் பரந்து விடும். ஆனால் சூடு இருந்துகொண்டேதானிருக்கும். மண்டபத்தின் தண்மையிலேயே உட்கார்ந்துகொண்டான் அவன்.

ஆமாம் - எதாயிருந்தாலும் இந்த இடத்தில், இந்த வெளியில், இந்தக் காவேரியிடம் வந்துதான் சொல்லி அழ வேண்டும். அதாவது, தன்னிடம். படிப்பை முடித்து, கடைசியாக ஊரை விட்டுக் கிளம்பப் போவதாக நினைத்துக்கொண்டு வந்த அன்று இருட்ட இருட்ட உட்கார்ந்து கொண்டிருந்தானே, அந்த மாலை நினைவுக்கு வந்தது. அன்று மாதிரியேதான் இன்றும் இருந்தது. என்னமோ இன்றும் முதல்முதலாகப் பார்ப்பதுபோல் தானிருக்கிறது காவேரி. இதை விட்டுவிட்டுப் போக முடியாது போலிருக்கிறது.

பவானியம்மாள் சொன்னதை நினைக்கும்போது லேசாக ஒரு அதிர்ச்சி - குற்றம் செய்த ஒரு குறுகுறுப்பு. எனக்காகவா! எனக்காகவா! இந்து கஷ்டப்படுவதைச் சகிக்க மாட்டேன் என்கிறாள். அதாவது, நான் கஷ்டப்படுவதைச் சகிக்க மாட்டாள்.

முப்பது வருடமாகக் கட்டின கோட்டைகளை எல்லாம் இடித்துத் தள்ளி . . . எனக்காக எல்லாவற்றையும் அடியோடு புரட்டிக் கலைத்து . . . நான் ஒன்றுகூடச் செய்யவில்லையே இதற்கெல்லாம்!

'வேண்டாம் வேண்டாம்' என்று சொல்லி, காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டு ஓடிவிடவேண்டும் போலிருக்கிறது. ஆனால் எங்கே ஓடுகிறது? இந்து இல்லாமல் எந்த இடத்தில் இருக்க முடியும்? எவ்வளவு தூரம் போனாலும் அவள் நினைவும் ஏக்கமுமாகக் கூட இருந்து கொண்டுதானே இருப்பாள் - கண்ணுக்குத் தெரியாமல் உள்ளேயே விழுந்த நிழலைப் போல.

அவள் கலியாணம் நினைவுக்கு வந்தது. பிறகு ஈரோட்டுக்கு அவளைக் கொண்டுவிடத் தயார் செய்த நாள் முன்னே வந்தது. அன்று அவன் ஓடியே போய்விட்டான். அவள் வாசலில் வண்டியில் ஏறும்போது கண்ணில் படவில்லை. ரயிலுக்கும் போகவில்லை. நன்றாக ஞாபகம் இருக்கிறது. ஆற்றுக்குப்போகிற பாதையில் அரசமரத்து மேடையில் பிள்ளையாரோடு பிள்ளையாராக உட்கார்ந்து, மேடைக் கற்களின்

இடுக்கில் முளைத்த அருகம் பில்லைப் பிடுங்கிப் பிடுங்கிக் கடித்துக்கொண்டே உட்கார்ந்திருந்தான். பவானி, இந்து, பரசு, யாரை நினைத்தாலும் கோபம்; கசப்பு! பசிக்கக்கூட இல்லை. வயிற்றைப் புரட்டிற்று. எழுந்து வந்து வாய்க்காலில் கழுத்தளவு வளர்ந்திருந்த கோரை நாலைந்தை உருவிப் பிடுங்கி உய்உய் என்று சுழற்றினான். ஒரு கோரையால் இடது உள்ளங்கையில் வீசினான். சுளீர் என்றது. ஒடித்து ஒடித்து உள்ளே இருக்கிற சோற்றைக் கடித்துக் கடித்துத் துப்பினான். சாந்திக் கலியாண அறைகூடக் கண்முன் வந்தது. 'ஏ' என்று நோஞ்சல் உடம்பும், குச்சிக்கையும் நீளக்கழுத்தும் குனிந்த முதுகுமாக அவன் இந்துவை வந்து தொடுகிறான். இந்து முகத்தைச் சிணுக்குகிறாள். அப்பு அவனைக் கோரையால் உய் என்று விலாவில் ஓங்கி இழுக்கிறான். அது ஓடிகிறது. இன்னொரு கோரையை - கோரை எவ்வளவு அழகாக இருக்கிறது பிடுங்க - வழ வழ வழவென்று - ஒவ்வொரு கோரையாகப் பிடுங்கிப் பரசுவை அடிக்கிறான் அவன். இந்துவின் முழங்கையில்கூட நாலு அடி விழுந்துவிட்டது. விழட்டும் . . . அப்புவும் ஒரு செங்கல்லை எடுத்துப் பவானியம்மாளின் நெற்றியைப் பார்க்க வீசுகிறான் . . .

அப்பு சட்டென்று 'ஸ்' என்று வாய்விட்டே சொல்லி முகத்தைச் சுளுக்கினான். சிவன் கோயில் மண்டபம், எதிரே காவேரி, இப்பால் சவுக்கைத் தோப்பு.

அன்று ஏன் அம்மா மாதிரி, தங்கை மாதிரி என்று பொய் சொல்ல வந்தது - அவள்மேல், பரசுமேல், பவானி மேல் வந்த ஆத்திரமா . .?

நெற்றியில் கையைவைத்துக் கண்ணை மூடி அசைத்து இந்த நினைவுகளை ஆட்டி உதிர்த்துவிட முயன்றான் அப்பு.

முர்ரென்று உறுமுவது போலிருந்தது. திரும்பினான் அவன். வெள்ளையாக ஒரு நாய் வந்து நின்றது. சட்டென்று அவன் முகத்தில் மணல் படர்ந்தது. மறுகணம் கையை ஓங்கினான். சரசரவென்று ஓடிற்று அது. சிறிது தூரம் ஓடி நின்று "ழ் . . . ழொழ்ழ் . . . ழ்" என்று தெருவில் கூப்பாடு போடுவது போல் அவனைப் பார்த்துக் குரைத்துத் திட்டிற்று. அவன் மறுபடியும் கையை ஓங்கினான். மீண்டும் ஒரு ஓட்டம் ஓடி நின்று, ஒருமுறை திட்டிவிட்டுச் சவுக்குக் காட்டுக்குள் மறைந்தது அது.

அப்புவுக்குச் சிரிப்பு வந்தது. உட்கார்ந்தது போதும் என்று தோன்றிற்று. எழுந்து கிளம்பினான். ஆனால் மறுகணமே கால் நின்றுவிட்டது. தொலைவில் சவுக்குத் தோப்புப் பாதையில் இந்து

குடத்தை எடுத்துக்கொண்டு வருவது தெரிந்தது. சாயங்காலம் ஒரு நடை காவிரித் தண்ணீர் மொண்டுபோகிற வழக்கம். மணி நாலரைகூட ஆகியிராது என்று அப்போதுதான் ஊகிக்க முடிந்தது. மீண்டும் அப்படியே உட்கார்ந்தான் அவன்.

அருகே வந்ததும், "எங்கே, நல்ல வெய்யில் வேளையிலே வந்து உட்கார்ந்திருக்கே இங்கே?" என்று கேட்டாள் இந்து.

"வெயிலோ, மழையோ, இங்கே வந்தாத்தான் கரைச்சுக் கொட்ட முடியறது."

இந்து பதில் சொல்லவில்லை. படிக்கட்டின் ஓரத்தில் ஒதுங்கியிருந்த மணலால் குடத்தைத் தேய்க்கத் தொடங்கினாள்.

"நான் வந்து படிச்சதோட பலன் வில்வமரத்தை எல்லாம் வெட்டி எறிஞ்சு, முருங்க மரமா நட்டுவிடுவேன் போலிருக்கு" என்றான்.

"வில்வ மரத்தை வச்சுண்டு பூஜைதான் பண்ணலாம். முருங்க மரம்னா சாப்பிடலாம்" என்றாள் இந்து.

"அத்தை என்ன சொன்னா தெரியுமா?"

"இன்னிக்கிக் காலமே எங்கிட்ட சொன்னா . . . உனக்கு நினைச்சபோது காவேரிக்கு வந்து கரைக்க முடியும். நான் என்ன செய்வேன்? ரண்டு மரக்கால் பயறை எடுத்து வச்சிண்டு உருட்ட உட்கார்ந்தேன்."

இந்து குடத்தை அலம்பி, நீரை மொண்டாள்.

"அத்தை மனசு காவேரி. அகண்ட பிரவாகமா ஓடறது. பிரியமும் கருணையுமா பொங்கிண்டு ஓடறது. ஆனா எனக்கு இதை நினைச்சா பயமா இருக்கு. என்னாலெதானே இந்த மாதிரி . . ."

"காவேரி வாய்க்கால் வழியாத்தான் பாயணும். வாய்க்கால் ரண்டு வாண்டாமா - பாயறதுக்கும் வடியறதுக்கும்? பேசாம சொன்னபடி செய்யறத்துக்காக ரண்டு பேர் வாண்டாமா? . . . நீ வரதுக்கு நாழியாகுமா?"

"கொஞ்சம் கழிச்சு வரேன்."

இந்து கிளம்பினாள். எதிரேயிருந்த அரசைச் சுற்றி வலமாக நடந்தாள். போகும்போது, "பயம் தெளியலே உனக்கு. இதை எல்லாம் நினைச்சுத்தான் அத்தை முருங்கப் போத்தா நட ஆரமிச்சா போலிருக்கு" என்று மெதுவாகச் சொல்லிக்கொண்டே போனாள்.

அப்பு தரை மண்ணைப் பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்தான். சற்றுக் கழித்து விறுக்கென்று எழுந்து, அவளைப் பிடிப்பதற்காக வேகமாக நடந்தான். அவளுடைய உருவம் தொலைவில் இருப்புப் பாதையைக் கடந்து கொண்டிருந்தது.

## 7

பவானியம்மாள் தனக்கு வைத்திருந்த ஐந்து காணியை இந்துவிற்கு எழுதி, முப்பது காணி சொச்சத்தை "பசிக்கு நைவேத்யம்" செய்யுமாறு இரண்டு பேருக்கும் பொதுவாக வைத்து, பின்னே போகிறவர்கள் யாராயிருந்தாலும் இஷ்டப்படி செய்து கொள்ளட்டும் என்று கடுக்காய் மசியில் எழுதச் சொல்லிக் கையெழுத்தையும் போட்டு விட்டாள்.

பதிவு முடிந்ததும் விச்வம் கூலியை வாங்கிக்கொண்டு அப்படியே கோட்டை பஸ்ஸில் ஏறிவிட்டான். பவானியும் இந்துவும் அப்புவும் பத்து மைல் தூரத்தையும் அரை வண்டியிலேயே பிரயாணம் செய்து திரும்பி வந்தார்கள்.

உள்ளே வந்து ஊஞ்சலில் உட்கார்ந்ததும் "நான் இருக்கிறவரைக்கும் வேத பாடசாலையாவே இருக்கட்டும். அப்பறம்தான் இருக்கவே இருக்கு நான் சொன்னது. இந்தா, இதை இந்துட்ட கொடுத்துப் பொட்டியிலே வைக்கச் சொல்லு" என்ற சாசனத்தை அப்புவிடம் கொடுத்து விட்டுப், படுத்துக்கொண்டாள் பவானி. காலைக் கழுவி விட்டுக் காபி போடுவதற்காகச் சமையலறையில் நுழைந்த இந்துவைக் கூப்பிட்டுக் கொடுத்தான் அப்பு.

"இனிமே உங்கப்பாவுக்கு நீ பதில் எழுதலாம்" என்று பவானி கண்ணை மூடிக்கொண்டாள். "அப்படியே ஊருக்குப் போயிருக்கிற பசங்களுக்கும் திரும்பி ஒரு வாரத்துக்குள்ளே வரச் சொல்லி எழுதிப் போடு."

இரண்டாவதாகச் சொன்ன கடிதங்களை எழுதி மறுநாள்

தபாலிலேயே சேர்த்துவிட்டான் அப்பு. ஆனால் முதல் கடிதத்தை எழுதுகிற வழியாக இல்லை. என்ன எழுதுகிறது, எப்படி எழுதுகிறது என்று கொல்லையில் கொத்தும்பொழுது, காவேரிக்குப் போகும்பொழுது, ஜபம் பண்ணும்பொழுது - எங்கு பார்த்தாலும் மனதில் எழுதி எழுதிப் பார்த்துக்கொண்டிருந்தான். இரண்டு மூன்று முறை எழுதி, படித்துப் படித்துப் பார்த்துக் கிழித்தெறிந்தான்.

"கடுதாசி போட்டயோ, அப்பாவுக்கு?" என்று மூன்றாம் நாள் இருட்டும்பொழுது கேட்டாள் பவானி.

"நாளைக் காலமே எழுதிப் போட்டுவிடப் போறேன், முதல் காரியமா."

"இன்னும் எழுதியாகலியா? எதுவும் நினைச்ச உடனே செஞ்சாத்தான் சரியா இருக்கும்."

"காலமே கட்டாயம் எழுதிப் போட்டுவிடறேன், அத்தே."

மறுநாள், வழக்கம்போல, வெள்ளி மங்குவதற்கு முன்பு காவேரியில் குளித்து, மண்டபத்தில் உட்கார்ந்து ஜபம் செய்யும் பொழுது, கடிதம் எழுதுவது அவ்வளவு கஷ்டமில்லை என்று தோன்றிற்று. மண்டபத்தைச் சுற்றிலும் அப்படி ஒரு அமளி. தினைக்குருவி, வலியன், ஊசிவால் குருவி, மிளகாய்க் குருவி, நாகணவாய், கனம் சொல்வதுபோல மீண்டும் மீண்டும் ஒரு சொற்கட்டையே வாய்வலிக்காமல் சொல்லிக்கொண்டிருந்த பாரத் வாஜம், செங்கொண்டை - எல்லாம் ஒரே கூட்டமாகப் பாடியும் கூவியும் கத்தியும் கொண்டிருந்தன. நாணல் தட்டையால் சின்னச் சின்னதாக, வகைவகையாக, ஒரு ஆயிரம் பீச்சாங் குழல்கள் செய்து, வெவ்வேறு ஒலிகளாகப் பீச்சுவது போலிருந்தது. இத்தனையையும் மீறிச் சவுக்குத் தோப்பு உய் உய் என்று பெரிய மூச்சாக விட்டுக்கொண்டிருந்தது. அவற்றைப் பார்க்கும்போது, நமக்கு மட்டும் கடிதம் எழுதுவதா கஷ்டம் என்று தோன்றிற்று. ஒரு சின்னக் காரியத்திற்கு எத்தனை யோசனை, எத்தனை முக்கல் என்று அவனுக்கே சிரிப்பாக இருந்தது. ஒன்றுமே வேண்டாம். இப்படிக்கூட எழுதலாம். 'நீங்கள் ஒரு நாளைக்கு இங்கே வாருங்கள். இந்த வேளையில் இங்கே வந்து உட்கார்ந்து இதைக் கேளுங்கள் . . . இதைப் பாருங்கள். அப்புறம் சொல்லுங்கள் - நான் பட்டணத்திற்கு வர வேண்டுமா என்று' . . . இப்படியே எழுதிவிடலாம். 'நீங்கள் மட்டுமில்லை; அம்மாவும் வரட்டும். பார்க்கட்டும்' என்றுகூட எழுதலாம்.

சற்றுக் கழித்து அப்புவுக்கு அதை நினைத்து வெட்கமாக இருந்தது. இதற்கும் விஷயத்திற்கும் என்ன தொடர்பு என்று இரவில் தாங்களே தூண்டிக்கொண்ட கற்பனைகளைக் கண்டு காலை வெளிச்சத்தில் மனிதர்கள் நகைத்து நாணி ஒதுக்குவது போல் ஒதுக்கி எறிந்தான். நான் இங்கேயே இருந்து சொல்லித் தரப்போவதாக, சுருக்கமாக, உள்ளபடி எழுதிவிட்டு, மன்னிப்புக் கேட்டு முடித்துவிடுவது என்று தீர்மானம் செய்து கொண்டான். மண்டபத்தை விட்டு எழுந்தான்.

தோசையைத் தின்றுவிட்டு, இரண்டு பையன்களையும் உட்கார வைத்து ஒரு மணி நேரம் ஸந்தை சொன்னான். எழுந்து கொல்லையில் சென்று தோட்டம் முழுவதற்கும் தண்ணீர் பாய்ச்சினான். இடைக்கட்டு நிலையைக் கடந்து குமாஸ்தா மேஜைமுன் வந்து உட்கார்ந்துகொண்டான். நீளப் புத்தகம் ஒன்றைப் பிரித்து அங்கிருந்த கார்டுகளில் ஒன்றை எடுத்தான். கார்டுக்குப் பக்கத்திலிருந்த வரிகளைப் படிக்கத் தொடங்கினான் . . . எல்லா உயிர்களும் இவனிடம் வசிக்கின்றன; அல்லது இவன் எல்லா உயிர்களிலும் இருக்கின்றான் என்ற காரணத்தால் திருமாலுக்கு வஸு என்ற பெயர் வருகிறது. வஸுவுக்குச் செல்வம் என்று ஒரு அர்த்தம் - அதாவது, மிகவும் சிறந்தது என்று அர்த்தம். சிறந்த மனத்தை உடையவன் திருமால். விருப்பு வெறுப்பு முதலிய கிலேசங்கள், மதம் போன்ற சிறு கிலேசங்கள், இவை யாவும் அவன் மனத்தை மாசுபடுத்தாவாதலின் வசுமனன் என்றும் விஷ்ணுவுக்கு ஒரு திருநாமம் உண்டாகிறது . . .

புத்தகத்தைப் புரட்டினான். சங்கரர் சகஸ்ரநாமத்துக்கு எழுதிய உரை. மாவு மிஷினைத் திறந்து விட்ட மாதிரி இதைத் தினமும் பையன்களோடு கத்திக்கொண்டிருந்தோம். ஏன் இந்த உரையை வாசிக்கவே இல்லை என்று மேலே படித்துக்கொண்டேயிருந்தான்.

"இந்த வீடுதான். பாட்டி, உங்காத்துக்கு யாரோ வந்திருக்கா!" என்று ஒரு பையனின் குரல் பவானியம்மாளின் வீட்டிலிருந்து இடைநிலை வழியாகக் கேட்டது.

"யாரு?" என்று பவானியின் குரல் தொடர்ந்தது.

"நான்தான் அத்தே."

அப்புவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. என்னது இது! நெஞ்சில் சில்லென்று பாய்கிறது. மேஜையைத் தள்ளிக்கொண்டு எழுந்தான்.

"நான்தான் அத்தே. அப்புவோட தாயார். பட்டணத்திலேர்ந்து வரேன்."

என்னது! அம்மாவா! அம்மாவா!

அம்மாதான். அம்மாவேதான். உயரமாக, அலை படியும் தலையுடன், கம்பீர வடிவுடன், அந்தப் பெரிய பார்வையுடன், ரட்சித்து ஆதரிப்பது போன்ற பார்வையுடன், அத்தாணி மண்டபத்துக்குள் வருகிறாற்போல அம்மாதான் வந்து இங்கே நிற்கிறாள்! எப்படி வந்தாள்? எப்போது வந்தாள்!

அப்பு இடைக்காடு நிலையைக் கடந்து ஓடி வந்தான். "அம்மா! என்னம்மாது! எப்ப வந்தே!" என்று வந்து நின்றான்.

"வாங்கோ, வாங்கோ! என்ன ஆச்சரியம்! எப்ப வந்தேள்! உட்காருங்கோ" என்று பவானி எழுந்து நின்று, துணியை நகர்த்தி ஊஞ்சலில் உட்கார இடம் கொடுத்தாள்.

புழக்கடையிலிருந்து இந்து ஓடிவந்தாள்.

"எங்கம்மா" என்றான் அப்பு.

"அம்மாவா!" என்று கண்ணை அகட்டி, "வாங்கோ வாங்கோ" என்று தலைப்பில் கையைத் துடைத்துக் கொண்டே அருகே வந்தாள் இந்து.

பவானி அலங்காரத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள். "நான் ஒரே ஒரு தடவைதானே பார்த்திருக்கேன், காசிக்குப் போறபோது, அப்ப உங்காத்துக்கு வரப் பொழுதில்லை. நீங்க ஸ்டேஷனுக்கு வந்திருந்தேளே, தண்டபாணியோடே. ஞாபகம் இருக்கா?" என்றாள் பவானி.

"ஞாபகமிருக்காவா! ஒரே ஒரு தடவை பார்த்ததனாலே ஞாபகம் அதிகமான்னா இருக்கும்."

இந்து அம்மாவையே உற்று, சிறிது வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"இப்ப ஏது ரயில்?"

"விடியற்காலமே நாலரை மணிக்குத் திருச்சினாப்பள்ளியிலே

வண்டியிருக்கே. ராத்திரி திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ்லெ வந்தேன். இந்த வண்டி அரை மணிக்கு அப்புறம்தானே புறப்படறது."

"ஒரு லெட்டர் போடப்படாதா? வண்டியனுப்பிச்சிருக்கலாமே ஸ்டேஷனுக்கு" என்றாள் பவானி.

"என்னத்துக்காக? கையிலே என்ன கனமா? ஒரு பை தானே . . . உடம்பு எப்படியிருக்கு, உங்களுக்கு அத்தே?"

அத்தை என்று அலங்காரமும் கூப்பிடுவதைப் பார்த்து, இந்து அப்புவைப் பார்த்தாள். அப்புவுக்கு நெஞ்சு கொள்ளவில்லை. அப்படி ஒரு உவகை அடைந்து கொண்டது.

"இருக்கேன். தேவலை. இந்தக் கிடைக்குப் பகவானுக்கு அழச்சுக்க இஷ்டமில்லே. அவர் நினைக்கிறபோது தானே கிளம்ப முடியும்? ஆனா கடையாணியைக் கழட்டி விட்டுவிட்டார். 'தயாராயிரு. எப்பன்னு சொல்ல முடியாது'ன்னு சொல்றாப்போல. ஹ்ருதயத்திலெ கோளாறுன்னா கடையாணியை எடுத்தாப்போல்தானே?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லே. கடையாணி கழண்டிருக்கிறதைப் பார்க்காமல் இருந்தால் வண்டி ஓடிண்டேயிருக்கும். பார்த்தால்தான் ஆபத்து" என்று தேற்றினாள் அலங்காரம்.

"அதெல்லாம் ஒரு நம்பிக்கை. நாமா நம்மைத் தேத்திக்கிறதுக்காகப் பண்ணிண்டதுதான் . . . என்னமோ, ஸ்வாமி இருக்கார்."

பவானியம்மாள் எல்லோரையும்பற்றி விசாரித்தாள். பதில் சொல்லிக்கொண்டிருந்த அலங்காரம் இந்துவை ஏற இறங்க அடிக்கடி பார்த்துக்கொண்டேயிருந்தாள். பார்ப்பது தெரியாமல் அசைப்பில் பார்ப்பதுபோல, அவள் கண் அளந்துகொண்டிருந்தது. அப்புவுக்கு அம்மாவை ஊஞ்சலில் பார்ப்பதே ஒரு காட்சியாக இருந்தது. என்ன மிடுக்காக உட்கார்ந்திருக்கிறாள்! வேண்டும் என்று செய்து கொள்ளவில்லை. உடம்போடு அந்தக் கம்பீரமும் நிதானமும் நறுக்நறுக்கென்று இழைந்து வீசின. இந்து என்ன நினைக்கிறாள் என்று சற்றைக்கொரு முறை பார்த்துக்கொண்டிருந்தான்.

"வந்த பிள்ளை ஒரு ரண்டு வரி எழுதமாட்டானோ! உடம்பு இப்படி இருக்கு, இன்ன சமாசாரம்னு! இப்படியாடா இருக்கிறது, அப்பு!" என்று

அம்மா கேட்டதற்கு வாயை மூடிக்கொண்டு நிற்கத்தான் முடிந்தது அவனால்.

இரண்டு மணி நேரம் பேசிவிட்டு, அலங்காரம் குளிக்கப் புறப்பட்டாள். இந்துவே அவளைக் காவேரிக்கு அழைத்துப் போய் வந்தாள்.

சாப்பாடு முடிந்தது. இளைப்பாறியும் ஆகிவிட்டது. அப்பு முள்மேல் நிற்பதுபோல் ஒரு இடத்தில் பாவாமல் பாடசாலை வீட்டுக்கும் பவானி வீட்டுக்கும் கொல்லைக்கும் வாசலுக்கும் அலைந்து கொண்டிருந்தான். அம்மா எதற்காக வந்திருக்கிறாள்? பதினாறு வருஷம் வராத அம்மா!

அவனுக்குப் பயமாகவும் இருந்தது. எந்தச் சமயம் அம்மா பவானியம்மாளைச் சுருக்கென்று ஏதாவது சொல்லிக் குத்தப் போகிறாளோ என்று. ஏன் இப்படிப் பயப்படுகிறோம் என்று காரணம் புரியாமல் பயப்பட்டுக் கொண்டிருந்தான்.

அம்மா இரண்டாம் கட்டில் உட்கார்ந்து இந்துவோடு பேசிக்கொண்டிருக்கிறாள். அவளை ஏதாவது சொல்லி, நெஞ்சுச் சதையில் கிடுக்கியை மாட்டி இழுத்து விடுவாளோ!

அலைந்து அலைந்து சோர்ந்து, குமாஸ்தா மேஜைக்கு முன் அமர்ந்து, காலையில் புரட்டிய அந்தப் புத்தகத்தைப் படிக்க ஆரம்பித்தான். கண் எதிலும் நிற்கவில்லை. பக்கம்தான் புரண்டு கொண்டிருந்தது. மேஜைமீதே தலையைச் சாய்த்து, சற்றுக் கண்ணை மூடிக்கொண்டான்.

"இங்கேயா இருக்கே?" என்று குரல் வந்தது. அம்மா பாடசாலை முழுவதையும் வாசலிலிருந்து கொல்லை வரையில் பார்த்துவிட்டு வந்தாள்.

"கோவிலுக்கெல்லாம் போய்விட்டு வரணுமேடா அப்பு" என்றாள் கிணற்றங்கரையிலிருந்து திரும்பி வந்து.

"பெருமாள் கோயில் ஒண்ணு இருக்கு. சிவன் கோயில் ஒண்ணு இருக்கு ஊருக்குள்ளே. காவேரி ஓரமா ஒரு சிவன் கோவில் இருக்கு. எல்லாத்துக்கும் போயிட்டு வரலாம்."

"அப்படின்னா வாயேன் மூஞ்சியை அலம்பிண்டு. போய்விட்டு

வந்துவிடலாம்."

கிணற்றங் கரைக்குப்போய் விறுவிறுவென்று முகத்தைக் கழுவிக்கொண்டு வந்தான் அப்பு. இந்து அவசர அவசரமாகக் காப்பியைக் கலந்து, கொண்டு வைத்தாள். சாப்பிட்டுவிட்டு இருவரும் தெருவில் இறங்கினார்கள்.

பொழுது சாய்ந்து கொண்டிருந்தது.

"முன்னாலெ காவேரிக்கரைக் கோவிலுக்குப் போயிட்டு வரலாம்மா. அப்புறம் இருட்டிப் போயிடும்" என்று ஆற்றைப் பார்க்க நடந்தான் அவன்.

அலங்காரம் நின்று நின்று பார்த்துவந்தாள். சவுக்குத் தோப்பு வந்ததும் சற்று நின்றுவிட்டாள்.

"பட்டணம் இந்த மாதிரி இருக்கப்படாதோ?" என்று தோப்பையும் ஆற்றையும் பார்த்துக்கொண்டு நின்றாள். "அப்பா அப்பா! என்ன செழிப்பு! என்ன பச்சை! சவுக்கு மரம் இத்தனை உசரமா இருக்கும்! ம்! சின்னது, நெருங்கல்னு, ஒண்ணு கூட இராது போலிருக்கே" என்று பரந்து கிடந்த காவேரியைப் பார்த்தாள்; தூரத்தில் பனி படர்ந்தாற்போலிருந்த கொல்லியின் நீலத்தையும் பார்த்தாள்.

கரை வந்துவிட்டது. "கோவில் திறக்கலெ போலிருக்கே."

"இன்னும் கொஞ்சம் நாழியாகும்மா."

"காவல் காக்கிற சாமிதானேன்னு சாய்ச்சாப்போல இருக்காராக்கும் குருக்கள்!" என்று சொல்லிக்கொண்டே மண்டபத்தில் ஒரு காலைத் தொங்கவிட்டு, சதுரத் தூணில் சாய்ந்தவாறு உட்கார்ந்தாள் அம்மா. "உட்காரேண்டா."

"காவேரி, கோபு, மன்னி எல்லாரும் சௌக்யம் தானேம்மா?" என்று தயங்கினான் அவன்.

"ஆமாம். வந்தப்புறம் கேளு. அங்கிருந்து வந்தே. ஒரு கடுதாசு எழுதணும்னு தோணலெ. இப்ப கேளு. நான் வராட்டா யாரைக் கேட்டிருப்பியோ?"

"வந்ததே பிடிச்சு ஒழியலேம்மா."

"எப்படி ஒழியும்?" என்று காவேரியைப் பார்த்தாள் அம்மா.

அப்பு பேசாமலிருந்தான்.

"நாளைக்கு ஊருக்குக் கிளம்பலாமோல்லியோ?"

"என்னம்மா அவசரம்! ரண்டு நாள் இருந்துட்டுப் போயேன்."

"போயேனா? போவோம்னு சொல்ல மாட்டியா?"

". . ."

"சொல்லேன்."

"நான் எப்படிம்மா வரமுடியும்?"

"வர முடியாமல் என்ன இப்ப? உங்க அத்தைக்குத்தான் உடம்பு குணமாயிடுத்து. நடமாடறா."

"இது என்ன நடமாட்டம்? இந்த உடம்பு ஒண்ணும் சொல்றதுக்கில்லேன்னு பயப்படறா. கூப்பிட்ட குரலுக்கு ஆண்பிள்ளை கிடையாது . . . அப்புறம் வாத்தியாருக்கும் இனி மேல் வரமுடியாது போலிருக்கு, நீதான் இருக்கணும்னு சொல்லிவிட்டா அத்தை. நானும் சரின்னுட்டேன்."

"என்னது!"

"ஆமாம்மா."

"இந்தப் பட்டிக்காட்டிலேயா?"

"இதுவா பட்டிக்காடு? சுத்திப் பார்க்கறியே. இதுவா பட்டிக்காடா இருக்கு உனக்கு. பட்டணம்தான் பட்டிக்காடு. உங்க ஊரிலெ பார்த்தசாரதிப் பெருமாளோட கண்ணுக்கு முன்னாலெ இருக்கிற குளத்திலேயே பாசி மண்டிக்கிடக்கும். வருஷக் கணக்கிலே அந்தப் பழந் தண்ணியைப் பார்த்துண்டிருக்கார் பகவான் - நாதியில்லாம. இதைப் போய்ப் பட்டிக்காடுங்கறியே? அதோ பாரு. ஒரு க்ஷணம் பார்த்த

திவலையை, அடுத்த க்ஷணம் பார்க்கமுடியாது. ஒரு க்ஷணம் பட்ட காத்து அடுத்த க்ஷணம் மேலே படாது. இங்கே எல்லாம் எப்பவும் புதுசுதான்."

"புதுசுதான்" என்று திருப்பிச் சொன்னாள் அலங்காரம். "ஆனா உன் கண்ணுக்குப் பழசெல்லாம் புதுசாப்படாம இருக்கணுமே" என்று தொடுத்தாள்.

"அப்படின்னா?"

"அப்படின்னா அதுதான்."

அப்பு மீண்டும் பேசாமலிருந்தான்.

"அப்படின்னா நீ என்னோட வரப்போறதில்லையாக்கும்?"

"அதான் சொன்னேனே . . . வேதம் சொல்லிக்கிறதுக்கு ஆளில்லாவிட்டாலும் பத்துக் குழந்தைகளுக்குச் சாதம் போட்டு, பள்ளிகூடத்துக்கு அனுப்பிச்சிண்டாவது நீ கவனிச்சுக்கணும்னு ஏற்பாடு பண்ணியிருக்கா அத்தை. சாசனத்தைக்கூட அப்படி மாத்தி எழுதியிருக்கா - நாலாம் நாள்தான் ரிஜிஸ்டர் ஆச்சு."

அம்மாவின் கண்ணில் ஒரு கணம் ஏதோ பயம் படர்ந்த மாதிரி இருந்தது. இரண்டு விநாடிக்குப் பிறகு வெறும் வறட்சியாகத் தூரத்தைப் பார்த்தது. அப்படியே வெறிச்சென்று பார்த்துக் கொண்டிருந்தவள், "ஆக, சொத்தெல்லாம் நீதான் நிர்வாகம் பண்ணப் போறே?" என்று அவனைப் பார்க்காமலே கேட்டாள்.

"ரண்டுபேரும், இந்து - நான் ரண்டுபேருமா சேர்ந்து பார்த்துக்கணும்னு எழுதியிருக்கா அத்தை."

"ரண்டுபேரும் என்னத்துக்காக? ஒண்ணு நீ பண்ணணும். இல்லே, அவ பண்ணணும். ரண்டுபேரும்னா? உனக்கும் அவளுக்கும் என்ன சம்பந்தம்? நீ வாத்தியாராத்தானே இருக்கப் போறேன்னு சொன்னே!"

அப்புவுக்கு வாயடைத்து விட்டது. வேஷ்டியின் நூலைத் திருகிக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

"புருஷனும் ஒருத்தன் இருந்து பார்த்துண்டாத் தேவலைன்னு போட்டிருக்கா போலிருக்கு" என்று அம்மாவே விடையை முடித்தாள்.

குருக்கள் வரவே பேச்சுத் தடைப்பட்டது.

"என்ன அப்பு சார்?" என்று கதவைத் திறந்து கொண்டே அலங்காரத்தைப் பார்த்தார் அவர்.

"எங்கம்மா. இன்னிக்கித்தான் காலமே வந்தா பட்டணத்திலேர்ந்து."

"அப்படியா! நீங்க இதுக்கு முன்னே இங்க . . .?"

"நான் வந்ததே இல்லை. இப்பதான் வந்திருக்கேன்" என்றாள் அம்மா.

"கோவில் எல்லாம் பார்க்கணும்னு. வந்தோம். நீங்க வரணும்னுதான் உட்கார்ந்திருக்கோம்" என்றான் அப்பு.

"வாங்களேன்" என்றார் குருக்கள்.

உள்ளே அழைத்துக் கர்ப்பக்கிருஹத்தைத் திறந்து, சூடம் கொளுத்திக் காட்டி, விபூதி கொடுத்துவிட்டு, வேலையைப் பார்க்கப்போனார் அவர். அம்மா அப்படியே கண்ணை மூடிக்கொண்டு நின்றாள் - நெற்றியில் விபூதிப் பொட்டுத் துலங்க. அம்மா அம்மாதான்!

"ஈச்வரா!" என்று பெருமூச்சு விட்டாள் அம்மா. கண்ணைத் துடைத்துக் கொண்டாள்.

குருக்களிடம் சொல்லிக் கொண்டு இருவரும் நடந்தார்கள்.

"ஜாதகங்கள்ளாம் வந்துண்டிருக்கே உனக்கு" என்றாள் அம்மா.

"நான் கலியாணம் பண்ணிக்கிறதாக இல்லேம்மா" என்று நடுங்கினான் அப்பு.

"அதுவும் தீர்மானமாயிடுத்தா?"

பிறகு - அவன் வருவதைப்பற்றியே பேசவில்லை அவள். பெருமாள் கோவிலையும் ஊர்ச் சிவன் கோவிலையும் பார்த்துவிட்டு வீடு திரும்பும்போது அந்தி மயங்கிவிட்டது.

இரவு சாப்பிட்டுவிட்டுப் பேசிக்கொண்டிருக்கும்போது "காலமே

திருச்சினாப்பள்ளிக்கு எப்படா வண்டி?" என்றாள் அலங்காரம்.

"திருச்சினாப்பள்ளிக்கு வண்டி நாலுநாள் கழிச்சு இருக்கு. ரொம்ப அழகாயிருக்கு, வந்ததும் வராததுமா?" என்று ஆரம்பித்தாள் பவானியம்மாள்.

"இருக்கலாம் அத்தே. ஊரிலே தலைக்குமேலே வேலை கிடக்கு. அப்படி அப்படியே போட்டுவிட்டு வந்திருக்கேன். இவன் கடுதாசே போடலியே; உங்களை வந்துபார்த்துவிட்டு போயிடணும்னு வந்தேன். வந்ததுதான் வந்தோம். தஞ்சாவூரிலே என் சித்தி பெண் இருக்கா. எங்க ரண்டு பேருக்கும் சேர்ந்துதான் கலியாணம் ஆச்சு. அப்புறம் ஏதோ கலியாணம் கார்த்திகைன்னு சத்திரத்திலே பார்க்கறாப்பல பார்த்துண்டதுதான். அவளையும் பார்த்துவிட்டுப் போகலாம்னு பார்க்கறேன். . ."

"அதெல்லாம் நடக்காது" என்று மறித்தாள் பவானியம்மாள்.

அம்மாவை யார் நிறுத்த முடியும்? அவள் வந்தாளே, அதுவே பெரிது.

அப்பு பாடசாலை வீட்டுத் திண்ணையில் போய்ப் படுத்து விட்டான். இரவு முழுவதும் புரண்டு புரண்டே கழிந்தது.

மறுநாள் காலை ஒன்பது மணி வண்டிக்குக் கிளம்பிவிட்டாள் அம்மா. அவளுக்கு அதற்குள் சமைத்துப் போட்டு, வண்டி கொண்டு வரச்சொல்லி ஆள்காரனுக்குச் சொல்லியனுப்பி, பத்துத் தேங்காயை உரிக்கச் சொல்லி, அவள் பையில் வைத்து, ஒரு மரக்கால் அவல் எடுத்து ஒரு பையில் கட்டித் திணித்து - இந்து பம்பரமாக ஆடிக் கொண்டிருந்தாள்.

தாந்தோணியின் மகன் வண்டியைப் பூட்டி வாசலில் நிறுத்தியிருந்தான்.

வாய் நிறைய வெற்றிலையை மென்றுகொண்டே பவானியம்மாளுக்கு முன் விழுந்து வணங்கினாள் அலங்காரம்.

"தீர்க்க சுமங்கலியா இருக்கணும்மா. அருமையான பிள்ளையைப் பெத்து, வேதத்திலே போட்டேள். யாருக்குத் தோணும் இந்த நாளிலே?" என்று அலமாரியைத் திறந்து அங்கு தயாராக வைத்திருந்த ஒரு தட்டை எடுத்து வந்து நீட்டினாள் பவானியம்மாள். அதிலே ஒரு பட்டுப்புடவை,

ரவிக்கைத் துண்டு, இருபத்தைந்து ரூபாய் பணம், மஞ்சள் வெற்றிலைபாக்கு எல்லாம் சுமந்து கிடந்தன.

"என்னது! ரொம்ப நன்னாயிருக்கு!" என்று வெற்றிலை பாக்கு மஞ்சளை மட்டும் எடுக்கப் போனாள் அலங்காரம்.

"எல்லாத்தையும் எடுத்துக்கணும். இல்லாட்டா நான் ரொம்ப வருத்தப்படுவேன் - நீங்க வந்ததே இல்லெ. எனக்காக எடுத்துக்கணும்" என்று அதிகாரமும் கெஞ்சலுமாக வேண்டினாள் பவானியம்மாள்.

"சரி எடுத்தக்கறேன். . . எனக்கு விவேகம், ஞானம் எல்லாம் வரணும்னு ஆசீர்வாதம் பண்ணுங்கோ" என்றாள் அலங்காரம். மீண்டும் அந்த முகத்தில் ஒரு பயம்.

அப்புவுக்கு அதைப் பார்க்க முடியவில்லை.

"பகவான் எல்லாம் கொடுப்பார். நீதான் கதின்னு கேட்டா, அவன் எதைத்தான் கொடுக்கமாட்டான்!" என்றாள் பவானியம்மாள்.

"போயிட்டு வரேம்மா - இந்து" என்று சொன்ன அலங்காரம் மௌனமாக அவளை உற்றுப்பார்த்து, மீண்டும் தலையசைத்து, விடைபெற்றுக் கொண்டாள். "அப்பு உங்க சொத்து மாதிரி ஆயிட்டான். நீங்கதான் கவனிச்சுக்கணும்" என்று சொல்லிக்கொண்டே வெளியே வந்தாள்.

"அப்படியே இருக்கட்டுமே" என்று சிரித்துக்கொண்டே வாசலுக்கு வந்தாள் பவானியம்மாள்.

அப்பு பின்னால் ஏறியதும் வண்டி புறப்பட்டது.

வழக்கம்போல ஸ்டேஷனில் பத்துப் பதினைந்து பிரயாணிகள்தான் இருந்தார்கள்.

அம்மாவோடு ஒரு சிமிண்டு பெஞ்சில் உட்கார்ந்துகொண்டான் அப்பு.

"பவானியம்மாளைத்தான் பார்க்க வந்தேன்னு நினைச்சுக்காதேடா அப்பு. உன்னைத்தான் முக்கியமாப் பார்க்கணும்னு வந்தேன். இப்ப விட்டா இனிமே எங்கே பார்க்கப்போறேன்?" என்றாள் அம்மா.

"என்னம்மா இது?"

"ஒண்ணுமில்லே. நான் காசிக்குப் போகப் போறேன்."

"காசிக்கா! எதுக்கு?"

"செத்துப் போக."

"போம்மா. உனக்கு எதாவது சொல்லிண்டேயிருக்கணும்" என்று சிணுங்கினான் அப்பு.

"நான் சரியாத்தான் சொல்றேன். ஒண்ணு, பிள்ளையோட கண்முன்னாலெ செத்துப்போகணும். இல்லேன்னா காசியிலே செத்துப்போகணும். நீ ஒண்ணுதான் என் பிள்ளைன்னு நெனச்சிண்டிருந்தேன். நீ ரிஷியாயிட்டே, உன் காலில் விழுந்து எல்லாத்தையும் பொசுக்கிண்டு விடலாம்னு நினைச்சேன். நீயும் அம்மா பிள்ளையாவே இருக்கே!. . . இப்ப காசிக்குப் போய் இருக்கப்போறேன்."

அப்பு பேச முடியாமல் உட்கார்ந்திருந்தான். தூரத்தில் வயல்களைப் பார்த்துக்கொண்டிருந்தவன் "நிஜமாவாம்மா?" என்று உதட்டைக் கடித்துக்கொண்டான். கண் நிரம்பிக் கலங்கிற்று.

"எனக்கு வேற வழியே தெரியலே. எத்தனை பாட்டிகள் அங்கே செத்துப்போறதுக்காகப் போய்க் காத்துண்டேயிருக்கா! நானும் போய்க் காத்துண்டிருக்கப்போறேன்,"

அப்புவுக்கு அதை மனதில் வாங்கிக்கொண்டு பார்க்கச் சிறிதுநேரம் பிடித்தது.

விசித்து விசித்து வந்த அழுகையை ப்ளாட்பாரத்தில் தூரத்தில் நின்றவர்கள்கூடப் பார்க்காமலிருப்பதற்காக துணியால் மோவாயை மூடித் திணறிக்கொண்டிருந்தான். அந்தச் சிரமம் அடங்கி, தொண்டை தெளிய இரண்டு நிமிஷம் ஆயிற்று.

"அப்பாவும் வருவாளா?"

"அப்பாவுக்கு எதுக்குடா காசி? அது ஞானச் சூரியன். கருணாமூர்த்தி. என்னைக் கருக்கிப்போடாம இருந்துதே இத்தனை நாளா! அதுவே பெரிசு. நான் மாத்திரம்தான் போகப்போறேன்."

"அப்பா உன்னை விட்டுட்டு இருக்க மாட்டாம்மா."

"சரி. அதுக்காக நான் எத்தனை நாள்தான் அவரை வதைச்சிண்டே இருக்கமுடியும்?"

அப்புவுக்கு மீண்டும் மனசு வறண்டுவிட்டது. பேசாமல் உட்கார்ந்திருந்தான்.

வண்டி வந்துவிட்டது. நகரும்போது "அங்கே போய்ப் பேசாம இருந்துவிட மாட்டேன். கடுதாசி போடறேன்" என்றாள் அம்மா.

வண்டி நகர்ந்துவிட்டது. இடுப்பில் கையை வைத்து வண்டியைப் பார்த்து, அது சிறுத்துச் சிறுத்துப் போனதும் தரையைப் பார்த்துக்கொண்டு நின்றான் அப்பு.

"போகலாமா சாமி?" என்ற தாந்தோணி மகனின் குரல் கேட்டது.

"நீ போ காளி. நான் நடந்தே வரேன். நடந்து வரணும் போலிருக்கு - காலாட எனக்கு."

"வாங்க சாமி போகலாம்."

"இல்லே, நீ போ. நான் மெதுவா வரேன்."

அவனை உற்றுப் பார்த்துவிட்டு, தாந்தோணி மகன் மெதுவாக நகர்ந்தான்.

வீட்டுக்குள் நுழையும்போதே பவானியம்மாள் கேட்டாள்: "வண்டி கிடைச்சுதாடா அம்மாவுக்கு?"

"கிடைச்சுது அத்தே" என்று மீண்டும் நடுங்கின குரலை அடக்கிக்கொண்டே கிணற்றங்கரைக்குக் கால் கழுவ விரைவதுபோல் போனான்.

கிணற்றிலிருந்து தண்ணீரை மொண்டு காலில் விட்டுத் தேய்த்தான். இந்து - அங்கே வந்தவள் அதைப் பார்த்துக் கொண்டே நின்றாள். அவன் முகத்தை மறைத்தவாறு அலம்பிக் கொண்டே நின்றான்.

அவன் திரும்பி வரும்போது, 'அப்பு' என்று குரல் கொடுத்தாள்

இந்து.

"அம்மா இத். . .தனை அழகாக இருக்காளே! எனக்குத் தெரியவே தெரியாதே. நீ சொல்லவே இல்லியே. என்ன களை! என்ன அழகு!"

"அழகா இருந்தா, ரொம்பக் கஷ்டம், இந்து" என்று சுவரைப் பார்த்துக்கொண்டே நின்றான் அவன்.

"ஒண்ணும் இல்லே" என்று அவனை ஒரு முறை இறுக அணைத்துவிட்டு, விறுவிறுவென்று உள்ளே விரைந்தாள் இந்து.

அப்பு, மேனி கொதிக்க நின்றுகொண்டேயிருந்தான். இந்து உள்ளே ஓடிவிட்டாளே என்றிருந்தது. அதே சமயம் தனியாக நிற்கவேண்டும் போலவும் இருந்தது. உடலில் ஒரு நடுக்கம். அம்மா காசியிலிருந்து கடுதாசி போடுகிறேன் என்று சொல்லிவிட்டு ஜன்னலுக்கு வெளியே தலையை நீட்டிக் கொண்டே அவனைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

- காடுகளனைத்திலும் காற்றைப் பரப்பினான் வருணன். குதிரைகளுக்கு வேகம் ஊட்டினான். பசுக்களிடம் பாலை நிரப்பினான். இதயத்தில் அறிவை வைத்தான். நீரில் அக்னியை வைத்தான். வானில் இரவியை வைத்தான். மலைமீது சோமத்தை வைத்தான். வானம், பூமி, நடுவானம் எங்கும் முகில்களைப் பரப்பிக் கவிழ்த்தான். அதனால் பூமி நனைந்தது - மழையில் நனையும் தானியம் போல . . . பால் வேண்டும்போது பரந்த பூமியையும் விண்ணையும் நனைக்கிறான் வருணன். அப்போது மலை முகில்களைப் போர்த்திக் கொள்கிறது. மருத்துகள் வந்து அவற்றை இழுத்து வெளியே விடுகிறார்கள். இந்தத் தேவன் பேரறிஞன். அவனுடைய அதிசய வல்லமையை யார் மறுக்க முடியும்?

- வருணனே! நண்பன், தோழன், சகோதரன், அண்டை வீட்டுக்காரன் என்று நெருங்கியவர்களுக்கெல்லாம் எப் பொழுதாவது நாங்கள் பாபம் இழைத்திருக்கலாம். முன்பின் தெரியாதவருக்கும் இழைத்திருக்கலாம். அதிலிருந்து எங்களை விடுவித்து விடு.

- வருணனே! சூதாடியைப்போல அறிந்தோ அறியாமலோ நாங்கள் ஏமாற்றுகள் புரிந்திருக்கலாம். அவற்றையெல்லாம் நீக்கிவிடு. உன் அன்பும் கருணையும் எங்களுக்கு வேண்டும் -

காசிக்குப் போகப் போகிற அம்மாவை நினைத்து இதைச் சொல்லிக்கொண்டே நின்றான் அப்பு. மேனிக் கொதிப்பு லேசாக அடங்கிக்கொண்டிருந்தது. அவன் தலைக்கருகில் தாழ்வாரத்துச் சுவரில் - ஒரு சதுரப் பொந்தில் - கூடு வைத்த சிட்டு கீச் கீச் என்று வாலைத் தூக்கித் தூக்கிக் கத்திக்கொண்டேயிருந்தது. கால் துவள, கீழே உட்கார்ந்துகொண்டான் அவன்.

## ஆசிரியரின் பிற நூல்கள்

# செம்பருத்தி

(நாவல்)

ரூ. 400

விழைவுக்கும் நடப்புக்கும் இடையில் எழும் முரண்பாடு, எதிர்பார்ப்புக்கும் நிகழ்வுக்கும் மத்தியில் நிகழும் ஊசலாட்டம், இச்சைக்கும் அடக்கத்துக்கும் நடுவில் நிலைபெறும் உறவு, இவற்றை வெவ்வேறு காலப் பின்னணியில் வைத்து அலசும் புனைவு இந்நாவல். சாமான்யனான சட்டநாதன் எல்லாரும் மதிக்கும் சட்டமாக நிமிர்ந்து நிற்க ஒன்றுக்கொன்று வேறுபட்ட மூன்று பெண்களின் காதல்கள் தூண்டுகோலாகின்றன. பரிவும் காமமும் பகையுமான இந்தக் காதல்களின் விளைவே சட்டநாதனின் ஆளுமையாகிறது. வாழ்க்கையாகிறது. குறும்பூக்களுக்கு நடுவில் மலர்ந்த செம்பருத்திகள் அந்தக் காதல்கள்.

பெண்மையின் உருக்குத்திடத்தைப் பூவாக இழைத்து, தி. ஜானகிராமன் செய்திருக்கும் படைப்பு இது. சாதாரணமான கதையையும் அசாதாரணமான நுட்பங்களுடன் ஒரு பெருங் கதைஞன் சொல்ல முடியும் என்பதற்கு ஆகச் சிறந்த உதாரணம் இந்த நாவல்.

கொட்டு மேளம்

(முதல் சிறுகதை வரிசை)

ரூ. 150

மோகமுள்

(நவீனத் தமிழ் கிளாசிக் வரிசை நாவல்)

ரூ. 525

இந்த நாவல் பற்றி இலக்கியத்தரம் அறிந்தவர்கள் பெருமைப்படலாம். மனிதனின் பலத்தையும் பலவீனத்தையும் துருவி ஆராய்ந்து எழுதப்பட்டுள்ள ஜானகிராமனின் 'மோகமுள்' தமிழில் நல்லதோர் சாதனை - பெரியதோர் சாதனை.

- க.நா. சுப்ரமண்யம்

சிலிர்ப்பு

(தி. ஜானகிராமனின் தேர்ந்தெடுத்த சிறுகதைகள்)

ரூ. 150 (வி.பி.பி.யில் ரூ. 150)

ஜானகிராமனின் தேர்ந்தெடுத்த 29 கதைகளின் தொகுப்பு இந்நூல்.

சிறுகதை எழுத்தாளர்களில் அதிக வசீகரம்கொண்டவர் தி. ஜானகிராமன். அபூர்வமான அழகுணர்ச்சிகொண்ட இவர் நினைவில் நீங்காது நிற்கும் அற்புதமான பல சிறுகதைகளைப் படைத்திருக்கிறார். சிருஷ்டியின் விசித்திரங்களை மேடையேற்றி, கடைசி நாற்காலியில் அமர்ந்து, புன்னகையுடன் பார்த்துக்கொண்டிருந்தவர். மனிதனின் வீழ்ச்சியையும் பிறழ்வையும் தத்தளிப்பையும் அனுதாபத்துடன் பார்த்தவர். ஒழுக்கம், தர்மத்தின் விதிகள் இவற்றைத் தாண்டி உணர்வு நிலைகளே மனித வாழ்வைத் தீர்மானிக்கின்றன என்பதில் நம்பிக்கைகொண்டிருந்தவர்.

சுந்தர ராமசாமி

நடந்தாய் வாழி காவேரி

(பயணக் கட்டுரை)

சிட்டி - தி. ஜானகிராமன்

ரூ. 190 (வி.பி.பி.யில் ரூ. 190)

காவேரி, காலந்தோறும் இலக்கியங்களில் இடம்பெற்று வந்ததன் உச்சமாக, தானே தலைவியாய்த் திகழும் இலக்கியம் இது. "காவேரி வெறும் ஆறு மட்டுமல்ல. அதன் கரையில் வாழும் மக்களின் பண்பை விளக்கும் வரலாற்று ஓவியம்" என உணர்ந்து தெளிந்த 'சிட்டி' (பெ.கோ. சுந்தரராஜன்)யும் தி. ஜானகிராமனும் இணைந்து எழுதிய இப் பயணக் கதை - காவேரிக் கரைக் காட்சிகளை, அவற்றின் பகைப்புலங்களை, காவேரி சார்ந்த வரலாற்றை, பண்பாட்டை, புகைப்படங்கள் கோட்டோவியங்களுடன் தருகிறது.

நாற்பதாண்டுகளுக்குப் பிறகு இந்தச் செவ்வியல் பயணக் கதை புதிய பதிப்பாக இப்போது வெளிவந்துள்ளது.

முன்னுரை

மீறலின் புனிதப் பிரதி

நல்ல இலக்கியம் என்பது உண்மையை ஒரு படைப்பாளன் தேடும் தவம். உண்மையை அவனவன் கண்ட விதத்தில் வெளிப்படுத்தும்போது மனிதக் குரல்களையும் முகங்களையும் போல சாயல்களும் தனித்தன்மையும் வளமாகக் கொழிக்கின்றன. உண்மையைக் காணத் திராணியில்லாதவர்கள் வேறு எவற்றுக்கெல்லாமோ ஆசைப்பட்டுத் தங்களையே நகல்களாக்கிக் கொண்டு விடுகிறார்கள்.

தி. ஜானகிராமன்

பார்த்துப் பார்த்துத் தீராதவையான கடல், கானகம் போன்றவற்றின் பட்டியல் போல வாசித்து மாளாத சில தமிழ்ப் படைப்புகளின் வரிசை என் மனதுக்குள் இருக்கிறது. அதில் ஒன்று தி. ஜானகிராமனின் 'அம்மா வந்தாள்'.

மீசை அரும்பத் தொடங்கிய பருவத்தில் முதன் முதலாக வாசித்த இந்த நாவலை மீசை வெளுத்திருக்கும் வயதுவரை பல்வேறு சூழ்நிலைகளில் வாசிக்க நேர்ந்திருக்கிறது. அந்தந்த வயதின் அறிவுக்கும் உணர்வுக்கும் ஏற்ப நாவலை அணுகும் விதங்களிலும் மாற்றங்கள் தொடர்ந்திருக்கின்றன. பதினெட்டு, பத்தொன்பது வயது வாசிப்பின்போது நாவல் விருப்பத்துக்குரியதாக இருந்ததன் காரணம் அதன் இலக்கியக் குணம் மட்டுமல்ல. 'முன்னங்கையின் சதைத் திரட்சியும் மென்மையும் - தண்ணென்று நெருக்கிக் கட்டிய ஜவந்தி மாலை போல - மார்பிலும் முதுகிலும் அழுந்திய' அரூபப் பெண் ஸ்பரிசம் தந்த ரகசியக் கிறக்கமே அதைத் திரும்பத் திரும்ப வாசிக்கத் தூண்டியது. கிறக்கம் கலைந்த பின்னாள் வாசிப்புகளில் நாவல் வெவ்வேறு பொருள்களில் விளங்கியது. அதற்குள் இயங்கும் சிந்தனைத்தளம் தொடர் வாசிப்புக்கு ஈடு கொடுத்தது. நுண் தகவல்களும் காலத்தை மனவியக்கமாக மாற்றியிருக்கும் நேர்த்தியும் பாத்திர உருவாக்கத்தில் செலுத்தியிருக்கும் உளவியல் பின்னல்களும் அதை ஒவ்வொரு வாசிப்பிலும் புதுப்பித்தன. கடல்போல ஆழ்ந்தும் கானகம் போல அடர்ந்த வழிகளைக் காண்பித்தும் மனதில் நிரந்தர இருப்பை உருவாக்கிக்கொண்டிருந்தது; இருக்கிறது. முந்தைய வாசிப்பில் கவனிக்க மறந்தவையும் பிடிபடாமல் பதுங்கியவையுமான நுட்பங்களை மறுவாசிப்பில் வெளிப்பட்டுக்

கொண்டிருக்கின்றன.

பின்வரும் உதாரணத்தைச் சொல்லலாம்.

தாய் என்ற நிலையில் போற்றப்படும் அலங்காரத்தின் 'பிறழ் உறவே' நாவலின் மையப் பிரச்சனை. அவள் பிற ஆடவனின் உறவில் தோய்ந்திருப்பதையும் அந்த உறவின் சாட்சியங்களாக மூன்று பிள்ளைகளைப் பெற்றிருப்பதையும் கணவர் தண்டபாணி அறிந்திருக்கிறார். ஆனால் அவரால் அதை 'என்ன பண்றது?' என்ற மழுங்கிய கேள்வியுடன் சகித்துக்கொள்ளத்தான் முடிகிறது. ஹைகோர்ட் ஜட்ஜையும் கல்லூரிப் பிரின்சிபாலையும் பாங்க் சேர்மனையும் தன் சொல்லுக்குப் பணிகிறவர்களாக அறிவால் அதிகாரம் செய்ய முடிந்த தண்டபாணியால் அலங்காரத்தை உதாசீனம் செய்யவோ குற்றப்படுத்தவோ புறக்கணிக்கவோ முடிவதில்லை. அதற்குக் காரணம் அவரது மனநிலைதான். 'சாதாரணமாக எல்லாப் பெண்களிடமும் காண்பதைவிட எல்லாமே சற்றுக் கூடுதலாக இருக்கும். உயரம், தலையளவு, கைகால் நீளம், உடல் திரட்டு, தலைமயிர் எல்லாமே. சில சமயம் இவளைக் கட்டி ஆண்டுவிட வேண்டும் என்று தண்டபாணிக்கு வெறி வந்துவிடும்.' அந்த ஆளும் வெறியே அலங்காரம் அவரிடமிருந்து விலகக் காரணமாக இருந்திருக்கலாம். தான் ஆளத் தோதானவனாக சிவசுவைக் காண அந்த விலகலே அலங்காரத்துக்கு ஊக்கமளித்துமிருக்கலாம். நாவலில் இது ஓர் அவிழாப் புதிர். கதைப் போக்கின் எந்த இடத்திலும் சிவசு அலங்காரத்தின் சொல்லை, சரியாகச் சொன்னால் கட்டளையை மீறுவதேயில்லை; மிகவும் கீழ்ப்படிதலுள்ளவனாகவே சித்தரிக்கப்படுகிறான் என்பதைக் கவனத்தில் கொண்டால் இது புரியும். அலங்காரத்தை ஆளும் வேட்கை மறுக்கப்படும்போது தண்டபாணிக்கு ஏற்படும் குமைச்சல் குற்ற உணர்வாகவும் தன்னிரக்கமாகவும் மாறுகிறது. 'அலங்காரம் என்று பெயர் வைத்தார்களே சரியாக - லக்ஷ்மி, சரஸ்வதி, விசாலம், கௌரி, சங்கரி என்று இத்தனை பேர்களை விட்டுவிட்டு அலங்காரமாம் அலங்காரம். தேவடியாளுக்கு வைக்கிறாற் போல' என்று புலம்புகிறது. இந்த மனநிலைதான் அவரைக் 'கையாலாகாதவராக' இருக்கச் செய்கிறது.

இதே பாத்திர மனநிலை தமிழில் இன்னொரு நாவலிலும் இடம்பெறுகிறது. நீல. பத்மநாபனின் 'பள்ளிகொண்டபுர'த்தில். கணவன் அனந்தன் நாயர் மனைவி கார்த்தியாயினியிடம் கொண்ட உறவிலும் இதே உளச்சிக்கல் இழையோடுகிறது. பெண்பார்க்கச் சென்று 'அந்த அபூர்வ நொடியில் நெடுஞ் சாண் கிடையாக அவள் முன்னால் விழுந்து

அவள் தளிர்ப் பாதங்களை நனைக்க வேண்டுமென்று தன் அந்தக்கரணத்தில் எழுந்த அந்த வெறிதான் எவ்வளவு பைத்தியக்காரத்தனமானது' என்று பின்னர் யோசிக்கும் அனந்தன் நாயர் அந்தத் தருணத்தில் சொல்வது 'அம்மே இந்தப் பெண் வேண்டாம்' என்றுதான். 'ஆலயத்தில் வைத்து ஆராதனை செய்ய வேண்டிய அழகைப் பள்ளியறையில் சிறை செய்வது முறையாகுமா?' என்ற தடுமாற்றம்தான் அந்த உறவைக் குலைக்கிறது. கார்த்தியாயினி வேறு ஒருவரை நாடிப் போகிறாள். எஞ்சிய வாழ்க்கை முழுவதும் அவர் தன்னிரக்கத்திலும் மனைவியாக இருந்தவள்மீதான குற்றச்சாட்டிலும் கழிக்கிறார்.

தன் ஆளுகைக்குப் பெண்ணை உட்படுத்த விழையும் ஆண்நிலையும் அதற்கு எதிரான பெண்ணின் மனத் திருப்பமும் வெளிப்பட்டது மறுவாசிப்பில்தான். அலங்காரத்தை உந்துவது காமம் மட்டுமல்ல; தன் உடல்மீதான உரிமையைத் தானே நிர்ணயிக்கும் உரிமை. அதை அவளே எடுத்துக்கொள்கிறாள். மூன்றாவது பிள்ளையான அப்பு பிறந்த பிறகு அவனைக் கவனிக்கவே அவளுக்குப் பொழுது சரியாயிருந்தது. அப்புவின் தம்பியான வேம்புவுக்குப் பிறகு கணவனுடனான ஈடுபாடு குறைந்து நின்றே போகிறது. 'வேதாந்தமெல்லாம் வாயைக் கிழிச்சுண்டு பாடம் சொல்லியாறது. போறும்னு நான் சொன்னா உடனே புரியலேன்னா என்ன பண்றது?' என்று விலகும் அலங்காரம் அதன் பின்னரும் பிள்ளை பெறுகிறாள். 'கடைசி மூணும்தான் அவ மனசோட பெத்த குழந்தைகள்னு தோணறது' என்று அப்புவின் அக்கா சொல்கிறாள்.

தன்னுடைய உடல்மீதான உரிமையை நிலைநாட்டுவது; தன் இச்சைப்படி மகப்பேறை நிர்ணயிப்பது. இந்த இருநிலை உளவியல் வேட்கையை அலங்காரம் நிறுவிக்கொண்டிருக்கிறாள் எனலாம். இது இன்றைய பார்வை. நாவல் எழுதப்பட்ட காலத்தில் இந்தப் பார்வைக்கான அறிகுறி இருந்திருக்க வாய்ப்பில்லை. ஜானகிராமன் அந்த நோக்கில் சிந்தித்திருக்கவும் முகாந்திரமில்லை. ஆனால் இந்தப் பார்வையைப் பொருத்திப் பார்க்க இப்போது நாவலில் இடம் இருக்கிறது. செவ்வியல் படைப்பின் இலக்கணங்களில் ஒன்று புதிய பார்வைக்கு இடமளிப்பதாக அது இருக்க வேண்டும் என்பது. 'அம்மா வந்தாள்' அதை நிறைவேற்றுகிறது என்றே எண்ணுகிறேன்.

மேற்சொன்ன பார்வையின் தொடர்ச்சியாகவே இன்னொரு கருத்தையும் அடைய முடியும். தன் விருப்பத்தின் பேரிலும் சரீரத்தின் மீதான தன்னுரிமையாலும் அல்லது 'காலைச் சுத்தின பாம்பானா விடாம வந்து தொலைச்சிண்டேயிருக்கு' என்ற நிர்ப்பந்தத்தாலும் தனது உறவைத்

தொடர்கிறாள். மரபுகளும் சமூகமும் சொல்லும் பொருளில் அதைக் குற்றம் என்று உணர்கிறாள். பாவம் என்று மறுகுகிறாள். அதற்குப் பிராயச்சித்தம் பண்ணிக்கொள்ளவே அப்புவை வேதம் படிக்க அனுப்புகிறாள். இந்த ஒப்புக்கொள்ளலுக்கு வேறொரு விளக்கமும் மறுவாசிப்பில் தோன்றுகிறது. பிற ஆடவனுடனான உறவைக் கைவிடாமலேதான் அலங்காரம் தண்டபாணியுடனான குடும்ப உறவிலும் இருக்கிறாள். தன்னைத் தீண்ட அனுமதிக்கப்படாத மனிதருடன் - கணவர் தண்டபாணியுடன் - அவரது பராமரிப்பில் வாழ்வது அவருக்குச் செய்யும் வஞ்சனை என்ற அற உணர்வு அலங்காரத்துக்கு இருக்கிறது. அந்த அறக் குரலால் உந்தப்பட்டுத்தான் அவள் பாவத்தைக் கழுவக் காசிக்குப் போகிறாள். தண்டபாணியைப் பற்றி அவள் அப்புவிடம் சொல்லும் வார்த்தைகள் - "அப்பாவுக்கு எதுக்குடா காசி? அது ஞான சூரியன். கருணாமூர்த்தி. என்னைக் கருக்கிப் போடாம இருந்ததே இத்தனை நாளா? அதுவே பெரிசு" - இதை உறுதிப்படுத்துகின்றன. இந்தக் கருத்தை நாவலின் பக்கங்களில் பொருத்தும்போது படைப்பு ஓர் ஆன்மீகத் தளத்துக்கு இயல்பாகவே உயர்கிறது.

'அம்மா வந்தாள்' நாவலின் முதல் பதிப்பு 1966இல் (வாசகர் வட்டம் வெளியீடு) வெளிவந்தது. அந்த ஆண்டையொட்டிய காலத்திலோ அல்லது அதற்கு முன்னோ அதை தி. ஜானகிராமன் எழுதியிருக்க வேண்டும். ஒரு நாவலாகவே கச்சிதமான வடிவத்தில் எழுதப்பட்ட ஜானகிராமன் படைப்பு இதுவாகவே இருக்கும். மூன்று பெரிய அத்தியாயங்கள். அதற்குள் சிறு பகுப்புகள். காவிரிக்கரைக் கிராமமான சித்தன் குளத்திலிருந்து சென்னைக்குச் சென்று மீண்டும் கிராமத்துக்கே திரும்பும் கதையோட்டம். மூன்று அத்தியாயங்களிலும் முன்னும் பின்னுமாக அலைவுறும் காலம். சரியாகச் சொன்னால் பிள்ளைப் பருவத்தில் வேதம் படிக்கச் செல்லும் அப்பு அதே வேத பாடசாலையில் கற்பிப்பவனாக மாறுவதற்கிடையிலான சம்பவங்களில் காலம் விண்டுவைக்கப்படுகிறது.

நாவலின் கதையை இப்படிச் சுருக்கலாம்.

பாவம் செய்துவிட்டதாக நினைக்கும் அலங்காரம் பாவத்திலிருந்து விடுபடவே தன்னுடைய பிள்ளை அப்புவை வேதம் கற்க அனுப்புகிறாள். காவிரிக் கரையிலிருக்கும் சித்தன்குளத்தில் பவானியம்மாள் நடத்தும் பாடசாலையில் கற்கிறான். பதினாறு வருட முடிவில் வேதத்தைத் தவிர வேறு எதையும் தெரிந்துகொள்ளாத அப்பு பெற்றோரிடம் - உண்மையில் அம்மாவிடம் - திரும்பத் தயாராகிறான். சிறு வயது முதல் அவனையே

மனதுக்குள் கணவனாக வரித்துக்கொண்டிருக்கும் இந்து - அவள் இப்போது கைம்பெண் - அவன் பாடசாலையிலேயே தங்கிவிட விரும்புகிறாள். அவன்மீதான தன்னுடைய ஈடுபாட்டைச் சொல்லுகிறாள். புரிந்துகொள்ளத் தயங்கும் அவனுக்குத் தன்னுடைய வேட்கை ததும்பும் உடலாலும் சுட்டிக் காட்டுகிறாள். அவள் தனக்குத் தங்கைபோல. அவளை ஏற்பது அம்மாவுக்குச் செய்யும் துரோகம் என்று நம்புகிறான். அந்த நம்பிக்கையில் அவன் வார்த்து வைத்திருக்கும் அம்மாவின் பளிங்கு பிம்பத்தின்மீது படிந்திருக்கும் கறையை இந்து சுட்டிக்காட்டுகிறாள். சென்னை வந்து சேர்ந்த பின்னர் அவள் சொன்ன உண்மை புரிந்து அதிர்ச்சியடைகிறான் அப்பு. அவனுக்குப் புதிதாகத் தெரிய வரும் அந்த உண்மை அவனுடைய அப்பா தண்டபாணி, அதே வீட்டில் இருக்கும் சகோதரர்கள் கிருஷ்ணன், கோபு, வேம்பு, காவேரி எல்லாருக்கும் தெரிந்தே இருக்கிறது. அம்மாவின் கூடா உறவான சிவசு அடிக்கடி வீட்டுக்கு வந்து போவதை அவர்கள் மௌனமாக ஏற்கவே செய்கிறார்கள்.

தொலைவில் சேலத்திலிருக்கும் அக்கா பார்வதிக்கும் அந்த உறவு தெரிந்திருக்கிறது. அதனால் பிறந்த வீட்டுக்கு வராமல் இருக்கிறாள். இந்த மௌன இறுக்கத்திலிருந்து விடுபட அப்புவுக்கு ஒரே ஒரு வழிதான் திறந்திருக்கிறது. மறுபடியும் பாடசாலைக்கு, இந்துவின் காதலுக்குத் திரும்புகிறான். ஆச்சாரங்களில் ஊறிய பவானியம்மாளும் அதை ஏற்றுக்கொள்கிறாள். தனது பாவ விமோசனத்தின் வழி அடைபட்ட அலங்காரம் பாவத்தைக் கழுவ காசிக்குப் போகிறாள்.

இப்படி ஒரு கதையோட்டமுள்ள புனைவுக்கு இன்று இடமில்லை. நாவலில் காட்டப்படும் கிராமம் இல்லை. வேத பாடசாலைக்குப் பிள்ளைகளை அனுப்பும் சுமாரான வசதி கொண்ட குடும்பமும் இருப்பதற்கில்லை. விதவையை முடக்கி வைக்கும் மரபும் இல்லை. பழைய சமுதாய வழக்கங்கள் ஏற்கத் தகுந்தவையாக இல்லை. இந்த நாவல் இன்று எழுதப்படுமானால் காலத்துக்கு ஒவ்வாத ஒன்றாகக் கருதப்படும்.

இது எழுதப்பட்ட அறுபதுகளையொட்டிய காலத்திலும் மேற்சொன்ன 'இல்லைகள்' இருந்திருக்க வேண்டும். எனினும் 'அம்மா வந்தா'ளை எழுதியதற்காக தி. ஜானகிராமன் பிரஷ்டம் செய்யப்பட்டார். அவரது சொந்த கிராமமான தேவங்குடிக்குள் நுழையத் தடை விதிக்கப்பட்டது. 'அம்மா வந்தா'ளைப் பற்றிச் சொல்ல ரகசியங்கள் ஏதுமில்லை. நூல்தான் முக்கியம். எப்படி, ஏன் எழுதப்பட்டது என்பது யாருக்குமே முக்கியமில்லை. கலைப்படைப்பு என்ற நோக்கோடு அதைப் பார்ப்பது

நல்லது. பலர் அதைத் தூற்றிவிட்டார்கள். நான் 'பிரஷ்டன்' என்றும் சொல்லிவிட்டார்கள். நம்முடைய நாட்டில் கலை, பிரஷ்டர்களிடமிருந்துதான் வருகிறது' என்று அவரே குறிப்பிட்டார். அவருடைய படைப்பு மனநிலையின் ஆதார உணர்வாகவே இதைக் காண்கிறேன். விலக்கப்பட்டவர்கள் சார்பில் பேசும் குரல்கள் வலுவாக ஒலிக்கும் இன்று 'அம்மா வந்தாள்' நாவல் வாசிப்பு நியாயம் பெறுவது அது விலக்கப்பட்டவர்களின் சுவிசேஷமாக இருப்பதனாலுந்தான் என்று தோன்றுகிறது. இந்துவும் அலங்காரமும் இன்று பழைய தோற்றத்தில் இருக்க மாட்டார்கள். அவர்களது காலத்துக்குப் பின்பு காவிரியில் ஏராளமான வெள்ளம் பெருகியோடியிருக்கிறது. அவர்கள் வேறு வடிவில் இருக்கலாம். காலத்தை மீறிய மானுட இயல்பின் இந்த நிரந்தரச் சித்திரம்தான் நாவலை செவ்வியல் ஆக்கமாக எண்ணச் செய்கிறது.

நுட்பமான விவரங்களால் பின்னப்பட்ட தளம் இந்த நாவலின் வலு. ஒவ்வொரு வாசிப்பிலும் அந்தத் தளங்கள் வெளிப்படுவது வாசிப்பின் தீவிரத்தைக் கூட்டுகிறது. அப்பு ஊர் திரும்புவதற்கு முன்பு இந்துவும் அவனும் வீட்டில் தனியாக இருக்கும் வாய்ப்பு ஏற்படுகிறது. ஆனால் அன்று பார்த்து அப்பு காவிரிக் கரையில் வெகு நேரத்தைக் கழிக்கிறான். ஊரை விட்டுப் பிரியப் போகிறவனின் ஏக்கம் தீர்க்கும் செயலல்ல அது. அவனால் தனிமையிலிருக்கும் இந்துவை எதிர்கொள்ள முடியாத அச்சமே காரணம். அவனுக்குள்ளும் இந்துவின் மீதான ஈர்ப்பு இருக்கிறது. அதை அவன் புரிந்துகொள்வதே இல்லை. அம்மாவைப் புரிந்துகொள்ளாதது போலவே.

தனிமையில் இந்து அவனிடம் நெருங்கியபோது 'அந்த ஸ்பரிசம் ஜில்லென்று மிருதுவாகத்தான் இருந்தது. அந்தப் பரவசக் கணத்துக்குப் பின்புதான் அது வேட்டியில் ஒட்டி ஊரும் இலைப் புழுவைக் கண்டது போலாகிறது'. பதினாறு ஆண்டுகள் தினமும் பார்த்துப் பேசிய, தன்னைப் பராமரித்த இந்துவின் அன்பை முழுமையாக ஒப்புக்கொள்ள அப்புவுக்கு அம்மா மீதான பாசத்தை மீற வேண்டியிருக்கிறது. இந்துவுக்கும் மனதில் பொத்தி வைத்திருக்கும் வேட்கையைச் சொல்ல எட்டு வருடம் காத்திருக்க வேண்டியிருக்கிறது. அவன் வராமலிருந்து விடுவானோ என்ற தாபத்தில்தான் அதைச் சொல்கிறாள். இந்த உளவியல் கண்ணாமூச்சி விடுபடுவது தொடர் வாசிப்பில்தான். மரபுகளுக்குள் கட்டுப்பட்ட இருவருக்குமிருக்கும் இந்த மனத் தடை வண்டிக்காரன் தாந்தோணிக்கு இல்லை. 'நான் அம்மாவா இருந்தேனுங்க, சின்னம்மாவை சாமிக்குக் கட்டிப்போட்டிருப்பேன் இந்த நேரம்' என்று அவன் சொன்னதைக் கேட்டு

எப்போதாவது புன்னகைக்கும் பவானியம்மாளின் முகத்தில் இப்போது புன்னகை வருகிறது. மீண்டும் சோகக் களை பாசிமாதிரி புன்னகை இருந்த இடத்தை அடைத்துக்கொள்கிறது.

ஒருவேளை அவள் இருவரின் அன்பையும் புரிந்து வைத்திருக்கலாம். உள்ளூர அதை ஒப்புக்கொண்டிருக்கலாம். அப்பு மறுபடியும் வந்ததும் பாடசாலையை அவன் பொறுப்பில் விடுவதற்கும் இந்துவை மானசீகமாக அவனுடைய துணையாக ஒப்புக்கொள்வதற்கும் தாந்தோணியின் பேச்சும் காரணமாக இருப்பதும் சாத்தியம்.

'அம்மா வந்தாளை' மீறலின் புனிதப் பிரதியாகக் கொண்டாடலாம். சமூகம் நிறுவிக் காபந்து செய்து வரும் ஒழுக்க மரபைக் கேள்விக்குட்படுத்துகிறது நாவலின் மையம். மனித உறவுகள் நியதிகளுக்குக் கட்டுப்பட்டவை; இல்லையில்லை அவை உணர்ச்சிகளுக்கு வசப்படுபவை. இந்த இரண்டு கருத்தோட்டங்களின் ஈவாகவே மனித வாழ்க்கை இருக்கிறது; இருக்கும் என்பதை வலியுறுத்துகிறது கதை. இவ்விரு நிலைகளில் ஊசலாடுபவர்களாகவே முதன்மைப் பாத்திரங்கள் அமைகின்றன. இந்த ஊசலாட்டத்தைக் கலையாக்குகிறார் தி. ஜானகிராமன். ஆசாரங்களையும் விதிகளையும் மீறி மனிதர்களை நிர்ணயிப்பது அவர்களது உணர்வுகள்தாம் என்பதை இயல்பாகச் சொல்வதுதான் அவருடைய கலை நோக்கு. நாவல் தொடக்கமே அந்தத் தொனியில் அமைந்ததுதான். 'சரஸ்வதி பூஜையன்று புத்தகம் படிக்கக் கூடாது என்பார்கள். ஆனால், அன்று ஒருநாளுமில்லாத திருநாளாகப் புத்தகத்தின் மேல் வருகிற ஆசை. கீழே கிடக்கிற, பல்பொடி மடிக்கிற காகிதத்தையாவது எடுத்துப் படிக்க வேண்டும் என்ற மோகம். அப்படியொரு மோகமல்லவா பிறந்திருக்கிறது இந்தக் காவேரிமீது' என்று ஆரம்பிக்கிறது நாவல். செய்யக் கூடாது என்று விலக்கப்பட்ட ஒரு காரியத்தைச் செய்யவே மனித மனம் வேட்கை கொள்ளுகிறது. அந்த வேட்கையைத்தான் ஜானகிராமன் தனது பெரும்பான்மையான நாவல்களிலும் கதைகளிலும் எடுத்தாளுகிறார். அந்த நோக்கம் உச்சமாக மிளிரும் படைப்புகளில் முதலிடம் வகிப்பது 'அம்மா வந்தாள்'. ஒருவகையில் வேட்கையின் இரு வடிவங்கள்தாம் அலங்காரமும் இந்துவும். இருவரும் தங்களுக்குப் போடப்பட்டிருக்கும் விலக்குகளை மீறியவர்கள். இன்னொரு வகையில் பவானியம்மாளும்.

தன் பிள்ளைகளுக்குத் தன்னுடைய பொருந்தா உறவு பிடிக்கவில்லை என்பது அலங்காரத்துக்குப் புரிகிறது. 'இந்த மூணுக்கும், கோபு, வேம்பு, காவேரி, என்னைக் கண்டா பிடிக்கலெ' என்கிறாள். எனினும் விலக்கப்பட்ட உறவைப் புறக்கணிப்பதில்லை. அவள் வாழும் பிராமணக்

குடும்பச் சூழலில் வெறும் பிள்ளைபெறும் கருவியாகவும் வீட்டைப் பராமரிக்கும் தாதியாகவும் கணவனுக்குச் சயன சுகம் தரும் சரீரமாகவும் குறுகிப்போக விரும்பாமல் தனது பாலுணர்வைத் தனக்குத்தானே அறிமுகப்படுத்திக்கொண்டு தேடிப்பார்க்கும் வேட்கை கொண்டவளாக அலங்காரத்தைச் சொல்லலாம். இந்து இன்னொரு கோணம். "எல்லாருமா சேந்து யாரையோ கொண்டுவந்து என் கையைப் பிடிச்சுக்கச் சொன்னா. கழுத்திலே ஒரு சரடைக் கட்டச் சொன்னா. என்னைப் போன்னு தள்ளி விட்டா. இந்த உடம்பு போச்சு. நாலு வருஷம் கழிச்சு அங்கே போய் இருந்தது. மூணு வருஷம் இருந்தது. பெண்டாட்டி பெண்டாட்டின்னு எல்லாரும் சொன்னா, அது மாதிரியே இருக்கச் சொன்னா, இருந்தது. என் உடம்பை மாத்திரம் கட்டியாண்டா நான் பெண்டாட்டியா ஆயிடுவேனா? நான் ஆகலே' என்று சொல்லுவது இன்னொரு மொழியில்; ஆனால் அலங்காரம் சொல்லும் பொருளில்.

ஆனால் இருவரின் முடிவுகளும் ஒன்றுக்கொன்று எதிரானவை. அலங்காரம் காசிக்குப் போகிறாள். 'ஒண்ணு பிள்ளையோட கண்முன்னால் செத்துப்போகணும். இல்லேன்னா காசியிலே செத்துப்போகணும். நீ ரிஷியாயிட்டே உன் காலில் விழுந்து எல்லாத்தையும் பொசுக்கிண்டு விடலாம்னு நெனச்சேன். நீயும் அம்மா பிள்ளையாவே இருக்கே. இப்ப காசிக்குப் போய் இருக்கப் போறேன்.' இங்கே மீறலின் எல்லை மரணமா? 'அம்மா இத்தனை அழகா இருக்காளே, எனக்குத் தெரியவே தெரியாதே' என்று வியக்கும் இந்துவிடம் 'அழகா இருந்தா ரொம்பக் கஷ்டம் இந்து' என்கிறான் அப்பு. 'ஒண்ணுமில்லே' என்று அவனை ஒரு முறை இறுக அணைத்துவிட்டு உள்ளே விரைகிறாள் இந்து. ஒருவிதத்தில் அம்மாவுக்குப் பதிலியாகிறாள் இந்து என்று சொல்லலாம். அவளுடைய இறுக்கமான தழுவலில் மூச்சுத் திணறும் அப்பு 'சீ . . . என்ன இது அசுரத்தனம் . . . அம்மாவைக் கட்டிக்கிறாப்பல . . .' என்கிறான். இந்துவைப் பெறுவதன் மூலம் அவன் திரும்பப் பெறுவது அம்மாவை. இங்கே மீறலின் விளிம்பு வெற்றியின் வெறுமையா? இந்த இரண்டு கேள்விகளுக்கும் நாவலில் விடை தேடும்போது படைப்பு ஆன்மீக விசாரணையாகிறது. அப்படியான சிந்தனைக்கு வலுச் சேர்க்கிறது பவானியம்மாளின் பாத்திரம். அவளால் அலங்காரத்தையும் இந்துவையும் அவர்களது நிலையை உணர்ந்து புகார் இல்லாமல் ஏற்றுக்கொள்ள முடிகிறது. மீறல்களை அங்கீகரிப்பதன் மூலம் அவளும் பொது நியதிகளைக் கடக்கிறாள். அது பசிக்கு நைவேத்தியம் செய்ய. அப்புவின் வாழ்விலிருந்து அலங்காரம் விலகுவதும் இந்து நுழைவதும் வயிற்றுக்குச் சோறிடத்தான் என்று யோசிக்கும்போது பவானியும்

வியப்புக்குரியவளாகிறாள். காமம் உடலின் பசி. பசி வயிற்றின் காமம். இரண்டுக்கும் உணவிடுவது ஆன்மீகமாகாதா என்ன?

தி. ஜானகிராமனின் படைப்புக் கலையைப் பற்றிச் சிந்திக்கும்போதெல்லாம் மீறல் என்ற சொல்லும் உடன்வரும். அவர் மரபு வழிக் கலைஞர்தான். நவீனத்துவரல்லர். ஆனால் அவரது படைப்பாக்கச் சிந்தனைகளின் ஊற்று, மரபையும் சடங்குகளையும் பழக்க வழக்கங்களையும் அவை மரபு என்பதற்காகவும் அதனாலேயே அவை புனிதமானவை என்றும் பின்பற்றும் மனநிலைக்கு எதிரான மண்ணில் ஆழ்ந்திருக்கிறது. அவரது நாவல்களிலும் கணிசமான சிறுகதைகளிலும் இதைப் பார்க்க முடியும். ஒரு மெல்லிய கோபத்தையும் ஆதங்கத்தையும் பெண்கள்பால் வாஞ்சையையும் அவர்களுடைய இருப்பின் மீதான கரிசனத்தையும் பார்க்க முடியும். இது கு.ப.ராவிடமிருந்து அவர் பெற்றுக்கொண்ட குணமாக இருக்கலாம்.

கு.ப. ராஜகோபாலன் மறைவையொட்டி எழுதிய இரங்கற் குறிப்பில் ஜானகிராமன் கு.ப.ராவை 'தவம் நிறைந்த கலைக் கோபி' என்று போற்றியிருப்பார். தி. ஜானகிராமனுக்கு எழுதிய அஞ்சலிக் குறிப்பில் (நிகழ் இதழ் 1/1982) அவரையும் அதே சொற்களால் குறிப்பிட்டிருந்தேன். கலைஞனின் கோபமும் கலைதான். 'அம்மா வந்தா'ளை மறு வாசிப்புக்கு - எத்தனையாவது முறை? - உட்படுத்தியபோது அந்த வார்த்தைகளும் அந்த மன நிலையும் சேதாரமாகாமலே இருக்கின்றன. இந்த நாவலைத் தமிழில் உருவான செவ்வியல் படைப்பு என்று சொல்ல இதைவிட வேறு அத்தாட்சி எனக்குத் தேவைப்படவில்லை.

திருவனந்தபுரம் சுகுமாரன்

21 டிசம்பர் 2011